# பத்மாவதி சரித்திரம்

## மூன்றாம் பாகம்

### முதலாவது அதிகாரம்




கோபாலையர் எம்.பி.ஸி. எம். பரீக்ஷை தேறி வைத்திய ராகு முன்னமே கல்யாணி யம்மாள் மறுபடியும் கருவுற்றாள். அப்பொழுது அவளுக்கு முன்போல தேவ பாதை உண்டாயிற்று. சில சமயங்களில் உயிரற்ற கட்டை போல வெகு நேரம் கிடப்பாள்; தீயினாற் சுட்டாலுங் கூடத் தெரியாது. சில வேளைகளில் சுடலை மாடனென்றும், இசக்கி யென்றும் கண்டபடி புலம்பிக் கொண்டு, பெருங் கூக்குர லிட்டு, சுவரில் மோதியும், தரையில் விழுந்து புரண்டும், தலை சுற்றி ஆடுவாள். குற்றமற்ற அவள் மெல்லிய அழகிய சரீரம் படும் பாட்டையும் காயங்களையும் பார்த்தால், யார்க்கும் நெஞ்சு பதை பதைக்கும். இன்னும் பால்குடி மறவாத பெண் குழந்தையையும், துஷ்டத் தனமும் மழலைச் சொற்களும் மிகுந்துள்ள தலைப் பிள்ளையையும் பேணிப் பாதுகாக்க, ஒரு தாதி நியமிக்க வேண்டிய தாயிற்று. தன் தம்பி மனைவியைப் பத்திரமாய்ப் பார்த்துக் கொள்வதே சாவித்திரி யம்மாளுக்கு இராப்பகல் வேலையாயிற்று. கோளாறு அதிகரிக்க அதிகரிக்க, அவ ளொருத்தியால் மட்டும் முடியாமல், உதவிக்கு ஒரு வேலைக்காரி வைத்துக் கொண்டாள். வியாதி தொடங்கியவுடன், கோபாலையர், சென்னையில் ஸ்திரீகள் வைத்தியத்தில் பேர்போன டாக்டர் டான்புட் என்பவரை அழைத்து வந்து காட்டினார். குழந்தைப்

பருவத்திலேயே புருஷனுடன் வாழத் தொடங்கி, மற்றச் சாதிகளில் பெண்களுக்கு விவாக மாகும் வயதிற்குள் இரண்டு பிள்ளைகளும் பெற்று, மூன்றாந் தரமும் சூலுற்றதனால் விளைந்த தீங்கு தான் அது, என்று சொல்லி; பி. ஏ. பரீக்ஷை கொடுத்து வைத்திய சாலையிற் படித்தும், இவ்வளவு தெரியாமற் போனதற்காகக் கோபாலையரை அவர் கடிந்து பேசினார். கோபாலையர், அவர் சொன்னதை முழுதும் நம்பி ஒப்புக் கொண்டு, அவரையே தம் மனைவிக்கு வைத்தியஞ் செய்யும்படி கேட்டுக் கொள்ள, அவரும் அடிக்கடி வந்து பார்த்து மருந்து கொடுத்து வந்தார். ஒரு தரம் வந்து பார்த்தால், அந்த டாக்டருக்குப் பதினைந்து ரூபா கொடுக்க வேண்டும். முதல் மாதக் கடைசியில் பார்வைக் கூலியும் மருந்தும் கூடி நானூறு ரூபாவுக்கு மேலாகி விட்டது. கோபாலையர் பணத்தைக் கொடுத் தனுப்பினார்; ஆனால் டாக்டர் டான்புட்டோ, அவர் தம் வைத்திய சாலை மாணாக்க ரானதால், பார்வைக் கூலி ஒரு காசுமே பெற்றுக் கொள்வ தில்லை யென்று, மறுத்து விட்டார். வியாதியும் குணப்படாமல், மாதக் கடைசியில் முதலில் 430 ரூபா கொடுத் தனுப்பிய வுடன், சாவித்திரி யம்மாள் மனது சிறிதும் ஒப்ப வில்லை; வியாதிக்கு டாக்டர் கூறிய காரணத்தை, அவள் நம்பவு மில்லை. எத்தனையோ சின்னஞ் சிறு பெண்கள், சட்டையும் சவலையு மாய்ப் பிள்ளைப் பெற வில்லையா, இதென்ன புதுமையா யிருக்கிற தென்று, அவள் எண்ணினாள். ஆவேசம் வந்து ஆடும் பொழுது கல்யாணி யம்மாள் பிதற்றுவதையே மனப் பூர்வமாய் நம்பி, அது பேய்க் கோளா றென்றே நினைத்தாள். தேவ பாதை யுற்றவருக்கு மருந்து கொடுத்தால், அந்த தேவதைகளுக்குக் கோபம் வந்து, கோளாற்றை அதிகப் படுத்துவார்கள் என்பது, நம்மவர் கொள்கை. நம் நாட்டுத் தேவதைகள் நம் நாட்டு மருந்துகளுக்கே கோபங் கொள்வா ரானால், இங்கிலீஷ் மருந்துகளைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? கோபாலையரோ, வைத்திய கலா சாலையிலும் ஆசுபத்திரியிலும் வேலையாக, வீட்டில் தின

மும் சிறு பொழுதே தங்குவார்; அனேக நாட்களில் இரவிலுங் கூட ஆசுபத்திரிக்குப் போய் விடுவார். அடுத்த வீட்டு நாராயணையரும், பத்மாவதி யம்மாளும், அடிக்கடி வந்து பார்த்துத், தம்மாலான உதவி புரிந்து வந்தார்கள். ஆயினும், இரவு பகலென்றின்றி மணிப் படி மருந்து கொடுப்பது, சாவித்திரி யம்மாள் பொறுப்பா யிருந்தது. அவளுக்கோ மருந்தில் ஒரு சிறிதும் நம்பிக்கை யில்லை. கல்யாணி யம்மாளைப் பிடித்திருந்த பேய்கள், தமக்குப் பல வழிபாடுகள் செய்யும்படி தன்னிடம் வந்து வேண்டிக் கொள்வதாகக் கனவுகளும் கண்டாள். தன் தம்பியோ, டாக்டர் பேச்சையே நம்பி, அவள் சொல்வதற்குச் செவி கொடுப்ப தில்லை. ஆகவே, சாவித்திரி யம்மாள், அப் பேய்களுக்கும் மற்றத் தேவதைகளுக்கும் வேண்டியபடி திருப்தி செய்வதாகத் தனக்குள் நேர்ந்து கொண்டு, தன் பணத்தில் நூறு ரூபாவை வேறாக வெடுத்து முடிப்புக் கட்டி வைத்தாள். தேவதைகளின் கோபத்தால் வியாதி அதிகரிக் கிறதபடி, தன் தம்பி கூடவிருந்த சில போது தவிர, மற்ற வேளைக ளெல்லாம், மருந்தைத் தூரக் கொட்டி வந்தாள். இவ் விஷயத்தில், அடுத்த வீட்டி லிருந்த பத்மாவதி யம்மாளின் தகப்பனாரும் தாயாரும் அவளுக்குப் புத்தி சொல்லி, அவள் நம்பிக்கையைப் பலப் படுத்தினார்கள். ஒரு மாதம் இரண்டு மாத மாயும், வியாதி சிறிதும் குணப் படாதது ஆச்சரியமோ!

இப்படி யிருக்கையில், ஒரு நாள் திடீரென்று, கல்யாணி யம்மாள், தன்னால் எவ்வித மான ஆகாரமும் உட் கொள்ள முடியாதென்று சொல்லி விட்டாள். மறு நாள் சாயங்காலம் வரை, எல்லாரும் அவரவரால் என்ற வரை கெஞ்சியும் பயமுறுத்தியும் பலவந்தப் படுத்தியும் பார்த்தார்கள்: ஒன்றும் பலிக்க வில்லை. ஒரு சிறங்கை பாலை வாயருகே கொண்டு போனாலும், பல்லுக் கிட்டி ஒரு வித வலிப்பு வந்துவிடும். முடிவில் நாராயணையர் போய் டாக்டர் டான்புட்டை அழைத்து வந்தார். அவர் வந்து பார்த்து விட்டு, ஒரு படி பாலைக் கொண்டு வரச் சொல்லி,

கல்யாணி யம்மாள் பக்கத்தில் கட்டிலின் மேல் உட்கார்ந்து கொண்டு, அவளைக் குடிக்கச் சொன்னார். அவள், “என்னால் முடியாது” என்றாள்.

டாக்டர் :—உடனே குடியாவிட்டால் தலை வழியே தண்ணீரைக் கொட்டுவேன்.

கல்யாணி :—என்ன செய்தாலும் சரி; நான் என்ன செய்வேன்? வஞ்சகமா? என்னால் குடிக்க முடிய வில்லை.

டாக்டர் :—(கோபாலையரைப் பார்த்து) ஒரு குடம் நிறையத் தண்ணீர் கொண்டு வா.

கோபா :—அவள் சொல்வது மெய் தான்; வஞ்சக மில்லை; பல் கிட்டி விடுகிறது.

டாக்டர் :—(கோபத்துடன்) என் சொற்படி நடப்பதா யிருந்தால், இந்த வீட்டில் வைத்தியம் செய்வேன்; இல்லா விடில் இதோ போகிறேன். கொண்டுவா ஒரு குடம் ஜலம்.

கோபாலையர் பயந்து, உடனே போய்க் கொண்டு வந்தார். டாக்டர் எழுந்து, தம் கையில் குடத்தை வாங்கிக் கொண்டு, “உடனே குடிக்கிறாயா, கொட்டட்டுமா?” என்று கேட்டார்.

கல்யாணி :—என்னால் முடியாது.

வாய் மூடு முன், டாக்டர், ஒரு குடம் நீரையும் கல்யாணி யம்மாள் மேல் கொட்டி விட்டார். பிறபாடு, அவர், அவளைப் பார்த்து, “இப்பொழுது குடிக்கிறாயா, என்ன?”

கல்யாணி:—(அழுது கொண்டும் முகத்தைத் துடைத்துக் கொண்டும்) நான் என்ன செய்வேன்? என்னால் முடிய வில்லையே.

கோபா :—நான் தான் சொன்னேனே, அவளால் நிஜமாகவே முடிய வில்லை.

டாக்டர் :—(வெகு கோபத்துடன்) ஒரு தரம் சொன்னாற் போதாதா? ஒருவரும் இங்கே இருக்கக் கூடாது; எல்லாரும் வெளியே போங்கள்.

சாவித்திரி:—இந்த முரட்டுத் தனம் ஆகுமா? தேவதைக்குக் கோபம் வந்து விடுமே!

டாக்டர்:—இன்னும் நிற்கிறீர்களா? போ வெளியே, எல்லாரும். கோபால்! நீ தான் முதலில் போ.



உடனே எல்லோரும் பயந்து, திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு, அறைக்கு வெளியே போய் விட்டனர்.

டாக்டர்:—இப்பொழுது என்ன சொல்கிருய் நீ? உனக்கு வலிந்து வர ஒருவரு மில்லை; இந்தப் பால் அவ்வளவையும் நான் ஐந்து எண்ணுவதற்குள் குடியா விட்டால், உன் புடவையை யுரிந்து, உன்னை அம்மண மாக்கி விடுவேன். மறு பேச்சு வேண்டாம். ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு,——

கல்யாணி யம்மாள் சும்மா விருப்பதைக் கண்டு, அவள் மேற் புடவையைப் பிடித்துத் திடீரென்று டாக்டர் இழுத்தார். உடனே அவள் இடக் கையால் புடவையைப் பலமாய்ப் பிடித்துக் கொண்டு, "இல்லை, குடித்து

விடுகிறேன்,'' என்று சொல்லிப், பாலை யெடுத்து ஒரு துளியும் மீதமின்றிக் குடித்து விட்டாள்.

டாக்டர் :—சரி, இப்பொழுது தான் நல்ல பெண்'' என்று சொல்லி, மற்றவர்களை உள்ளே அழைத்தார். அவர்கள் வந்தவுடன்,

டாக்டர் :—அவள் உடம்பைத் துடைத்து வேறு வஸ்திரம் உடுத்துங்கள். அவளுக்கு ஒன்றுமே யில்லை. நீங்கள் சும்மா துரும்பைத் தூணாக்கி வம்பு பண்ணுகிறீர்கள். இதோ, பாலெல்லாம் குடித்தாய் விட்டது. அவளை ஆசுபத்திரிக் காவது, வேறு அயலூருக் காவது அனுப்பி, வைத்தியஞ் செய்தால் நலம்'' என்று சொல்லிப் போய் விட்டார்.

ஆசுபத்திரிக் கனுப்புவது அநேக காரணங்களால் அசௌகரிய மாகத் தோன்றிற்று. தாம் நன்கு படித்திருந்தும், ஐரோப்பியர்களுக்குள் மிகப் பெரிய உத்தியோகஸ்தரும் தனவான்களும் கூடத் தங்கள் மனைவிமாரையும் குமாரத்திகளையும் ஆசுபத்திரிக்கு அனுப்புவதை அறிந்திருந்தும், தன் மனைவி விஷயத்தில் அப்படிச் செய்வது, அகௌரவமென்றும் அனுசிதமென்றும் கோபாலையரே எண்ணினார். இவ்வித மான வீண் டம்பங்கள் நமக்குள் இன்னும் பல வுண்டு. சாவித்திரி யம்மாள், தன் தோரிக்கைக்கு இது தான் தருணமென்று நினைத்து, தன் தம்பியின் மாமனார் பண்ணை முத்தையர் முன்பே எழுதி யுள்ளபடி, கல்யாணி யம்மாளை அவள் பிறந்த ஊராகிய செங்காட்டுக்குத் தானே அழைத்துக் கொண்டு போய், டாக்டர் சொல்லுகிறபடி வைத்தியம் பார்ப்பதாகச் சொன்னாள். அங்கே போய் விட்டால், பேய்களுக்குக் கொடையிட்டுக் கொடுத்தும், மந்திர வாதம் செய்தும், தேவ பாதையை நீக்கிக் கொள்ளலா மென்பது அவ ளுத்தேசம். வர வர உபத்திரவம் அதிகப் படவே, அவ்வாறே தீர்மானஞ் செய்து, கோபாலையர், தம் தமக்கையையும் மனைவியையும், தாமே தம் வேட்டகத்திற்குக் கொண்டு போய் விட்டார். பக்கத்

தில் திருநெல்வேலியி லுள்ள டாக்டர் ஒருவரை, பட்டணம் டாக்டர் டான்புட் உத்திரவுப்படி வைத்தியஞ் செய்ய நியமித்து, தமக்குத் தின மொரு கடிதம் எழுதும்படி ஏற்பாடு செய்து விட்டு வந்தார். அவர் மட்டும் தனியே இருந்தமையால், நாராயணையர் வீட்டிலேயே சாப்பிட்டுக் கொண்டு, படித்து வந்தார்.





## இரண்டாவது அதிகாரம்

ஐயாவையர் தரையில் வேஷ்டியை விரித்து நடைவாசற்படியில் தலை வைத்துப் படுத் திருந்தார். அவர் மனைவி சுப்பம்மாள், வாசல் திண்ணையில் உட்கார்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டு, அவருடன் சல்லாபமாய்ப் பேசிக் கொண் டிருந்தாள். அவள் பையன் இராமபத்திர னும், பெண் சீதாபதியும் மேடையில் விளையாடிக் கொண் டிருந்தார்கள்; குழந்தை சீதை ஸோபாவின் மேல் தூங்கிக் கொண்டிருந்தாள். கடைசியாக இந்தத் தம்பதிக ளிருவ ரும், அடி மிதி வசவுகளுடன் சண்டை போட்டதை மட்டும் பார்த்தவர், அவர்கள் தாமோ இப்பொழுது இவ் வளவு அந்நியோந்நியமாய் அந்தரங்கமாய் ஸம்பாஷிப்ப வர்க ளென்று சமுசயித்தால், அது, அவரது அநுபவக் குறைவையே காட்டும்.

ஐயாவையர்:—ஸந்தியா, ஜபமா, ஒன்றுங் கிடையாது; பூணூ லில்லா விட்டால், பறையனுக்கும் அவனுக்கும், என்ன வித்தியாசம்? அவன் தான் எக்கேடும் கெட்டுப் போகிறான் என்றிருந்தால், இப்பொழுது இவளுக்கும் வந்து விட்டது. இவளும் கீரைக் கடைக்கு எதிர்க் கடையாய், அவனைப் போல் ஆரம்பித்து விட்டாள். பணம் ஒன்று சம்பாதிக்கிறான்; இல்லாவிட்டால், இவர்களை நாய்

கூட ஒப்பாது.

சுப்பம்மாள் :—பணத்துக் கென்ன பணம், இந்த நாளிலே நாயும் பேயும் தான் சம்பாதிக்கிறது. அடே, நம்மை எடுத்து வளர்த்து இம்மட்டுக்கும் கொண்டு வந்து விட்ட அம்மானே, மாமனாரே, என்று ஒரு தினிலேயாவது நினைப் பிருக்கா பாருங்களேன். நாம் என்ன சொன்னால் தானென்ன? 'கழுதைக் குபதேசம் காதிலே சொன்னாலும் அபயக் குரலொழிய அங்கொன்று மில்லை,' என்று தானாகிறது. நீங்கள் வாய் வலிக்கச் சொல்ல வேண்டியது தான், அவனிஷ்டப் படிக்கு அவன் நடக்க வேண்டியது தான். சூரியனைப் பார்த்து நாய் குலையாதா, அப்படித் தான் நினைத் திருக்கிறான்; அவ்வளவு தான் தன்னை இம்மட்டு உருவாக்கி விட்ட மாமனாருக்கு மரியாதை. படித்து விட்டானும் படிப்பு! எல்லாம் அதனால் வந்த வினை தான்.

ஐயா :—அவன் தான், எப்படி யானாலும், ஊரார் பிள்ளை, சம்பாதிக்கிறான், அவனிஷ்டம் போல் நடக்கிறான்; இதைப் பாரேன், தாயே தகப்பனை என்று கொஞ்சமாவது நினைவிருக்கா, பாரேன். ஏதோ டஸ் புஸ் என்று நாலு இங்கிலீஷ் வார்த்தை தெரிந்து விட்டால், இவ்வளவு கர்வமா? இவனுடமா எம். ஏ. பரீக்ஷை கொடுத்து, மாதம் நூற்றைம்பது ரூபா சம்பாதிக்கிறான்? அவன் எள்ளு என்கிறதற்கு முன்னே எண்ணெய் என்று நிற்கிறது பாரேன். நம்ம வயிற்றில் பிறந்ததே நம்மை இப்படி இளப்பம் பண்ணினால், அவனைச் சொல்வானேன்?

சுப்பம்மாள் :—அவளென்ன செய்வாள்? பேய்க்கு வாழ்க்கைப் பட்டால் புளிய மரத்தில் ஏறாமல் தீருமா? அவன் இப்படி யெல்லாம் ஆட்டி வைக்கிறான், அவள் ஆடுகிறாள். நீங்களாகப் பார்த்து, இந்தமீட்டிங்குக்கு வரவேணும், அந்த நாடகத்துக்கு வரவேணும் என்றால், நானென்ன செய்வேன், சொல்லுங்கள்?

ஐயா :—ஏன்? இவள், 'கூடாது; என் அப்பாவும் அம்மாவும் வருத்தப் பட்டுக் கொள்ளுகிறார்கள், இதெல் லாம் குல ஸ்திரீக்கு அடுக்காது, நான் வர மாட்டேன்' என்று சொன்னால், அவன் கேட்க மாட்டானோ? இவளுக் கும் இத்தனையும் வேண்டி யிருக்கு, நடத்துகிறாள். அவன் கையை எதிர் பார்த்து நாம் ஜீவனம் பண்ணு கிறோம், இவர்களுக்கு இவ்வளவு போது மென்று அவர் களும் வைத் திருக்கிறார்கள்.

சுப்பம்மாள் :—கை பார்க்கிற தென்ன, கை? முன் னாலே கேட்ட கைக் கெல்லாம் கொடுத்தீர்கள், இப்போது அவன் சம்பாதிக்கிறான். அப்படி என்ன தந்து விட்டான்? கடனைக் கொடுத்தா னாக்கும்: அவன் குடும்பத்துக்கு இட்டு இட்டுத் தானே கடன் முதலிலே வந்தது? அவன் கொடுக்காமல் யார் கொடுப்பார்கள்? இப்போ தின்கிற சோறென்ன, இரண்டு பேருமாய் உழைக்கிறோம், சாப்பிடு கிறோம். இந்த நாறச் சோறு எங்கே தான் கிடையாது? இதோ, ராணி போல போய் விட்டாளே, நாமில்லா விட்டால், குழந்தைகளை யார் பார்த்துக் கொள்வார்கள்? இராத்திரி வந்த வுடனே யார் சமைத்து வைத்திருப் பார்கள்? மாசா மாசம் பத்து இருபது என்று அவிழ்த்துக் கொடுத்தாலும், இந்த நாளிலே, பட்டணக் கரையிலே, நம்பிக்கை யான ஆள் கிடைக்குமா? நாமிருக்கக் கண்டு தானே அறுத்து விட்டதாம் கழுதை எடுத்து விட்டதாம் ஓட்டம் என்று, மீட்டிங்குக்கும் கூத்துக்கும் போகப் படுகிறது. இளங் கன்று பய மறியுமா? எல்லாம் நாமில்லா விட்டால் தெரியும்.

ஐயா :—இப்படி வயிறு வளர்ப்பதிலும், பிக்ஷை யெடுத்தாவது பிழைக்கலாம். ஊருக்குப் போனோ மானால், எங்கே யாவது ஒரு நம்பர் கணக்கு, சத்திரம் புண்ணியம், ஏதாவது ஒரு வேலை கிடையாமலா போகும்? எப்படி

யாவது மானமாய்க் காலக்ஷேபம் பண்ணிக் கொள்ளலாம். இவ்வளவுக்கு வரவிட்டு, என்றால் இனிமேல் இங்கிருக்க முடியவே முடியாது.

இதற்குள் ஸோபாவின் மேல் தூங்கின குழந்தை விழித்து, "அம்மா! அம்மா!" என்று அழத் தொடங்கிற்று. சுப்பம்மாள் உள்ளே போய், "அம்மா, அழாதே; என் கண்ணே, அழாதே; என் கண்ணுட்டி, அழாதே. இதோ பிஸ்கோத்திருக்கு, தின்னு." என்று சொல்லிக் குழந்தையைக் கையில் எடுத்துக் கொண்டாள். அது பின்னும் "அம்மா!" என்று அலறி அழவே, சுப்பம்மாள் கோபங் கொண்டு: "ஓம்மா, ஓம்மா, என்று என்னத் துக்குத் தொண்டையைக் கிழித்துக் கொண்டு கத்துகிறாய் சனியனே? உங்கம்மாவை, கவர்னர் பெண்டாட்டி வரா விட்டால் தீரா தென்று வருந்தி யழைத்தா ளாம்; மானங் கெட்ட சிறுக்கிக ளெல்லாம் கூடிக் கொண்டு ஏதோ நம்மைச் சீர் திருத்தப் போகிறார் களாம்; அதற்காக மீட்டிங்குக்குப் போயிருக்கிறாள், மீட்டிங்குக்கு. சோற்றிலே கிடக்கிற கல்லைப் பொறுக்க மாட்ட வில்லையாம், சொக்கனார் கோவில் மதிற் கல்லைப் பிடுங்கப் போகிறார்க ளாம்! வேலை வேணுமோ வேலை" என்றாள். இந்தத் தாலாட்டைக் கேட்டுக் குழந்தை முன்னினும் அதிக மாகக் கத்தி விசிக்க லாயிற்று. உடனே சுப்பம்மாள், அதைத் தோளில் அணைத்துக் கொண்டு மெது வாய்த் தட்டிக் கொடுத்துச் சீராட்டினாள்; அழுகை நிற்கு முன்னமே வாசலில் ஒரு 'கோச்சு' வண்டி வந்து நின்றது. வண்டிக் காரன் கீழே யிறங்கிக் கதவைத் திறக்கவே, நம் கதா நாயகி யாகிய பத்மாவதி யம்மாள் ஒரு குதியிற் படி யேறி ஓடி வந்து வீட்டுள் நுழைந்து, தன் தாயிட மிருந்த குழந்தையை வாங்கி மார் போடணைத்து முத்த மிட்டுக் கொண்டு, "அம்மாடி! உன்னை விட்டு

விட்டுப் போய் விட்டேனு? நீ அழுதையா?" என்று கொஞ்சிச் சமா தானப் படுத்திக், குழந்தைக்குப் பால் கொடுத்தாள். குழந்தையின் அழுகை நிற்கவே, அவள் தன் தாயைப் பார்த்து, "அம்மா! இப்பொழுது தான் எழுந் திருந்ததோ, இல்லா விட்டால் அப் பொழுதே முதல் படுத்துகிறதோ?" என்று கேட்டாள்.

சுப்பம்மாள்:—"நாலு நாழிகை யாச்சு; கத்து கத் தெனக் கத்துகிறது. வைத்துக் கொண் டிருக்கப் பட்ட பாடு தெய்வம் அறியும். இப்படி யொரு குழந்தையைக் கதற விட்டு விட்டு, 'மீட்டிங்கு' என்ன வேண்டி யிருக்கு 'மீட்டிங்கு'? எல்லாம் தலை கீழாகத் தான் இந்த நாளிலே!" என்று, முகத்தைச் சுழித்து வலித்துக் கொண்டு சொன்னுள். "இம்! எல்லாம் கர்மம்; யாரை என்ன சொல்ல இருக்கு?" என்றுர் ஐயாவையர்.

இதற்குள் நாராயணையரும், வண்டியை இராத்திரி எட்டரை மணிக்கு நாடகத்துக்குப் போகக் கொண்டு வரும்படி சொல்லி யனுப்பி விட்டு, உள்ளே வந்து சேர்ந் தார். மருமகனைக் கண்ட வுடன், ஐயாவையர் கொல் லைப் பக்கம் போய் விட்டார்; அவரோ, மேடைக்குப் போய் விட்டார்.

அந்த வீட்டு மாடியில், இரண்டு பெரிய அறைகளும், சூழ 'வராந்தாவும்,' திறந்த நிலா முற்றமும் உண்டு. வராந்தாத் தூண்களைச் சுற்றிப் பூத் தொட்டிகள் வைக் கப்பட் டிருந்தன. உள் ளறை படுக்கை யறை; முன் னறை படிக்கும் அறை. முன் னறையில், ஒரு பெரிய மேஜையும், இரண்டு மூன்று நாற்காலி களும், கண்ணுடிக் கதவுக ளுள்ள இரண்டு புஸ்தக அலுமார்களும் இருந் தன; சுவர்களில் இரண்டு உடுப்பு மாட்டிகளும், அனேக படங்களும், ஒரு நிலைக் கண்ணுடியும் மாட்டப் பட்டிருந் தன. படுக்கை யறையின் வாசலோ, விசித் திரமான

ஜப்பானியத் திரையால் மறைக்கப்பட் டிருந்தது. வராந் தாவில் இரண்டு சாய்மான நாற்காலி களும், கை யில்லாத சில நாற்காலி களும் கிடந்தன. நாராயணையர், தலைப் பாகை நீங்கலாக, ஐரோப்பியர் போலவே உடை யுடுத் திருந்தார். மேலாடை களைக் கழற்றி விட்டு, வராந் தாவில் ஒரு நாற்காலியிற் சாய்ந்துக் கொண்டு, நிலா முற் றத்தில் கரிக் கோடிட்டுப் பாண்டி யாடிக் கொண் டிருந்த தன் மகனையும் மைத்துனனை யும் கூப்பிட்டார். அவர்கள் அவர் வந்ததைக் கவனிக்க வில்லை. அவர் சத்தம் கேட்ட வுடன், அவர் மகன் சீதாபதி, "அப்பா, நீ வந்து விட் டாயா?" என்று சொல்லிக் கொண்டே ஓடி வந்து, அவ ரைக் கட்டிக் கொண்டான். அவனை யெடுத்து முத்த மிட்டுக் கொண்டு, பின்பு, அவர்கள் பாண்டி யாட்டத்தின் தோல்வி ஜயத்தைப் பற்றி விசாரித்தார். அவர் மகன்: "எனக்கு நாலு உப்பாச்சு; இராமு வுக்கு ஒன்று தான் ஆயிருக்கும். பாதி யாட்டத்தில் வந்தோம். எனக்குக் கன்னுன், அவனுக்கு சமுத்திரம். இராமு, வா; குறை யும் ஒரு கை பார்ப்போம்" என்று சொல்ல, இருவரும் விளை யாடப் போய் விட்டார்கள். பின்பு நாராயணையர், பக்கத்தில் ஒரு நாற்காலி மேலிருந்த ஹிந்து பத்திரி கையை எடுத்து வாசிக்கத் தொடங்கினார். அதில் எதோ விசேஷத்தைப் பற்றி வாசிக்கவே, "பத்மீ! பத்மீ! இங்கே வா, ஒரு சங்கதி; சீதுவையும் கொண்டு வா," என்று கூப்பிட்டார். கொஞ்ச நேர மாயும் தன் மனைவி வராமையால், அவர், தன் மகனை யழைத்து, "அடே ராஜா, உங்கம்மாவைக் கூட்டிக் கொண்டு வா; அவசர மாம் என்று கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு வா," என்று சொன்னார்.

சீதாபதி, "எனக்குத் தானே ஐந்துப்பு! எனக்குத் தானே ஐந்துப்பு!" என்று குதித்துக் கொண்டே கீழே

போனான். "ஹே! ஹே! எனக்கு அன்றைக்கு ஐந்துப்பு ஆக வில்லையோ?" என்று சொல்லிக் கொண்டே இராம பத்திரனும் அவன் பின்னால் இறங்கிப் போனான்.

சற்று நேரத்தில் பத்மாவதி யம்மாள் மேலே வந்தாள்; குழந்தை அவள் தோள் மேல் தூங்கிக் கொண்டிருந்தது. பத்திரிகையை வாசித்துக் கொண் டிருந்த அவள் கணவர், அடிச் சத்தம் கேட்ட வுடன், "இதைக் கேட்டாயா, குட்டி? இந்த வருஷம் ஏழு இந்தியர்கள் கலெக்டர் பரீக்ஷையில் தேறி யிருக்கிறார்கள். என் சகபாடி ரெங்கசாமி ஒருவன், 'கேம் பிரிட்ஜ் ஸீனியர் ராங்கிளர்,'' என்று இங்கிலீஷில் சொல்லிக் கொண்டே அவளைப் பார்த்துத் திரும்பினார். அவள் முகத்தைப் பார்த்த வுடன், "இதென்ன இது? ஏன்? எதற்காக அழுகிறாய்? யார் என்ன சொன்னார்கள்?" என்று பரபரப் புடன் தமிழில் கேட்டுக் கொண்டு எழுந்து போய், அவள் கண்ணீரைத் துடைத்தார். முதலில் அவளால் பதிற் சொல்ல முடிய வில்லை. அவள் தோளில் தூங்கின குழந்தையை மெதுவாய் எடுத்துப் போய் படிப் பறையி லிருந்த ஸோபாவின் மேல் விட்டு விட்டு வந்து, அவளை அணைத்துத் தன் மடியின் மேல் ஒரு நாற்காலியில் உட் கார்த்திக் கொண்டு, மறு படியும், "ஏன்? அதற்குள் என்ன நடந்தது?" என்று கேட்டார்

பத்மா:—இல்லை, ஒன்று மில்லை; அம்மாமி என் னவோ சொன்னாள்; என்னால் பொறுக்க முடிய வில்லை; தன்னை யறியாமல் துக்கம் வந்து விட்டது.

நாரா:—அம் மாமி என்ன சொன்னாள்?

பத்மா:—மாமா வார்த்தையைத் தட்டி விட்டு நாம் 'மீட்டிங்கு' க்குப் போனது அவர் களுக்குக் கோபம்; ஊருக்குப் போகப் போகிறார்களாம். நான் இன்றிராத்திரி நாடகத்துக்கு வர வில்லை.

நாரா :—அதிருக் கட்டும்; இப்படி யானால் என்னமாய் முடியும்? இந்த மாதிரி விஷயங்களி லெல்லாம் இவர்கள் பிர வேசித்தால் எப்படி? எங் கப்பாவை விட எனக்கு மாமாவைத் தான் நன்றாய்த் தெரியும்; நான் இவ்வளவு தூரம் முன்னுக்கு வந்ததும் அவரால் தான். அம்மா செத்துப் போன நாள் முதல், தெய்வத் துக்கு அடுத்த ஸ்தானமாக அவரை நான் பாவித்து நடந்து வருகிறேன். கொஞ்ச நாளாக என் நட வடிக்கைகள் அவருக்கு அவ்வளவு பிடிக்க வில்லை யென்பதும் எனக்குத் தெரியும்? அவர் கர்னாடக மாதிரி; வைதிகம்; அதை யறிந்தே, அவர் மனசு நோகாதபடி, நான் எவ்வளவோ ஞாபக மாயும் பய பக்தி யோடும் நடந்து வருகிறேன்; உனக்குத் தெரியாதா? பஞ்சம ஏழை களுக்கு ஒரு நாள் விருந்து செய்ய வேண்டு மென்று எவ்வளவோ ஆசை; பார்கன் துரையையும் துரை சானியையும் இன்னும் சிற்றுண்டிக்கு ஒரு முறை கூட அழைக்க வில்லை; பிராமண ரில்லாத சிநேகிதர் ஒருவரையுமே நான் சாப்பிடக் கூப்பிடுகிற தில்லை. அழைத்து அவமானப் படுத்து வதிலும் சும்மா இருந்து விடுவது நலம் என்றிருக்கிறேன்; உன்னுடன் சாப்பிடுகிறது கூட இல்லை; இதெல்லாம் அவருக்குப் பயந்து தான். இன்னும் அதிகமாக உபத்திரவப் படுத்தினால் எப்படி? இவரைப் போலவே நானும் இருந்து, இவர் அபிப் பிராயங்களின் படியே நானும் நடக்க வேண்டு மென்றால், என் படிப்பினால் என்ன பலன்? நான் என் மனச் சாக்ஷிக்கே பொய்ய னாக மாட்டேனே?

பத்மா :—எனக்கு அதெல்லாம் தெரியாமலா இருக்கு? என்ன செய்கிறது? அவர்களுக் காகத் தெரிய வேணும். இன்று நான் 'மீட்டிங்கு' க்குப் போன தற்காக என்னை ஒரு தேவடி யாளிலும் கீழாகத் தான் அம்மாமி நினைக்கிறாள். மாமா வுக்குக் கோபம் ஜொலிக்கிறது. என்னிடத்

தில் பேசவே யில்லை; வலுவே பேசினேன், பதில் கூடச் சொல்ல வில்லை. இன்று நான் நாடகத் துக்கும் போனுல் நாளையே ஊருக்குப் புறப் பட்டு விடுவார்கள்.

நாரா:—அம்மா இருக்க வில்லையா? அவளை விடவா இவர்கள் பக்தியும் வைதீக சிரத்தையும்? ஒரு நாள் ஒன்று சொன்ன துண்டா? 'ஆயிரங் காலத்துப் பயிர்கள், நீங்கள் வாழ வேணும், நீங்கள் சந்தோஷமா யிருக்க வேணும், உங்க ளிஷ்டம்,' என்பதைத் தவிர, வேறு பேச் சுண்டா? ஏதாவது நமக்கு அபாயமோ அவ மானமோ வரலா மென்று பயந்தால் மட்டும், "அப்பா, இது வேண்டாம்; நன்ருய் யோசித்துச் செய்,' என்று சொல்லுவளே யொழிய, வேறு எதற் காவது தடை சொன்ன துண்டா? இது தர்ம சங்கடம். இன்று நாட கத்துக்கு நீ வர வேண்டாம்; நானுமே போக வில்லை என்று வைத்துக் கொள்வோம்; பின்னும் ஒவ் வொரு நாளும் ஒவ் வொன்றிலும் இப்படித் தானே. செக் கடிக் கும் தம் பூருக்கும் ஒத்து வருமோ?

பத்மா:—வேறு என்ன செய்கிறது? எப்படி யாவது கூடிய வரையும் ஒப் பேற்றிக் கொண்டு போக வேண்டி யது தான்.

நாரா:—கூடிய வரை யேது கூடாத வரை யேது? நமக் குள்ளேயே இந்தக் கஷ்டந் தான். தொட்டிலி லிருந்து சுடு காடு மட்டும்,—அப்படிச் சொன்னுலும் போதாது,—பிறப்ப தற்கு முன் தொட்டு இறந்த பின் னும் கூட,-எடுத்ததெல்லாம் மதாசாரம், சாதி யாசாரம் குலா சாரம், குடும் பாசார மென்று, மனுஷனை முன் பின் அசைய வொட்டாமல், ஓய் வொழி வில்லாத நிர்ப் பந்தந் தான். பழைய வழக்கங் களால் இவ்வளவு கட் டுண்டு அடிமை களிலும் அதிகம் கிடந் துழலும் நாம், தலை முறை தலை முறை யாகப் பரா தீனமா யிருந்தலும்

ஆச்சரியமா? நான் இராஜதானியில் முதலாக எம். ஏ. பரீக்ஷை தேறி, இரண்டு தங்கப் பதக்கப் பரிசுகளும் பெற்றிருக்கிறேன்; நூற்றுக் கணக்கான வாலிபர்களுக்கு ஆசிரியனாகவும் இருக்கிறேன்; என் படிப்புக்கும் அந்தஸ்துக்கும் ஏற்றபடி என் மனையாளையும் படிப்பித்திருக்கிறேன்; கூழோ கஞ்சியோ ஒருவர் கையை எதிர்பாராமல் சம்பாதித்துச் சாப்பிடுகிறோம்; அதி மேதாவிகளும், என்னையும் தங்களில் ஒருவனாக மதித்து, எனக்கு மரியாதை செய்கிறார்கள்; 'ஓதுவதிற் சிறந்தன்று ஒழுக்க முடைமை' என்றும், 'கற்றபின் நிற்க அதற்குத் தக' என்றும், "தன்னெஞ் சறிவது பொய்யற்க, பொய்த்த பின் தன்னெஞ்சே தன்னைச் சுடும்' என்றும், கூறும் பெரியோர் வாக்கியங்களையே கைக்கொண்டு, என்னாலென்ற மட்டும், என் புத்திக் கெட்டிய மட்டும், நானும் ஒழுங்காய் நடந்து, பிறருக்கும் உதவி செய்ய வேண்டுமென்று ஆசைப் படுகிறேன். பொய் யில்லை, களவில்லை, புலா லில்லை, கள் ளுண்ணுத லில்லை, நமக்கோ பிறர்க்கோ ஸந்தோஷத்தையோ, நன்மையையோ, இரண்டையுமோ கொடுக்கக் கூடிய எதொன்றையும் செய்வதற்கு, எனக்குச் சுதந்தரம் இல்லா விட்டால், என் படிப்பினாலென்ன பயன்? மற்றெதனால் தான் என்ன பயன்? எனக்கும் ஓர் அடிமைக்கும் என்ன பேதம்? பத்மீ, நான் சொல்வதைக் கேள், இது சத்தியம்: இந்த மாதிரியான நிர்ப்பந்தங்களெல்லாம் தொலைந்து, பிறர்க்குத் தீங் கில்லாத படி, அவரவர் மனச் சாக்ஷிக்கு விரோத மின்றி நடக்கும் சுதந்தரம் நமக்குள் இப் பொழுதினும் நூறில்லை ஆயிர மடங்கு பெருகும் வரை, வெளி வேஷமும் ஆஷாடபூதித் தனமும் பாசாங்கும் நமக்குள் அனாவசிய மாகும் வரை, நமக்கு வேறு சுதந் தரங்கள் கிடைக்கப் போகிறது மில்லை; நம்முடைய நாடு முன்னுக்கு வரப் போகிறது மில்லை."

தன் கணவர் பர பரப்பையும் மனக் கொதிப்பையும் கிலேசத்தையும் கண்டு சிறிது பயந்து, பத்மாவதி யம்மாள் ஒன்றும் பேசாமல் நின்றாள். அவரோ, தன் கை களால் முகத்தை மறைத்துக் கொண்டு, சிந்தனையில் ஆழ்ந்த வரா யிருந்தார். சற்று நேரத்துக்குப் பின் தன்னை யறி யாமல் மனத்திற் பொங்கும் ஸந்தோஷத்தினாலும் பெரு மையினாலும், அவள், அவரை மெதுவாய்க் கையின் மேல் முத்த மிட்டாள். அவரும் கனவி லிருந்து விழித்தவர் போல் எழுந்து, மனக் கசப்புடன், "இதெல்லாம் சுயங் கிருதா அனர்த்தமே யொழிய வேறில்லை. முன்னவர் பேரில் குற்றமே யில்லை; தங்கள் காலத்துக்கும் வாழ்க் கைக்கும் ஏற்றபடி அவர்கள் ஏற்படுத்தி னார்கள். நாமும் இப்பொழுது ஆரணியங்களிலும் ஆசிரமங்களிலும் வேதாத்தியயனம் செய்து கொண்டிருந்தால், அப்படியே நடக்கலாம். காலத்துக்குத் தக்கபடி மாறக் கூடா தென்று அவர்கள் விதிக்கவு மில்லை; நாம் மற்ற விஷயங்களில் மாறாம லிருக்கவு மில்லை, நடுவே வந்த சில தூர் வழக் கங்களை மட்டும் சர்வ சாம்பிராச்சியமாக வைத்துக் கொண்டு, நாம் இப்படித் திண்டாடுகிறோம்; என்று விடியுமோ தெய்வத் துக்குத் தான் தெரியும்." என்று சொன்னார்.

அன்று 'மீட்டிங்கில்' பிரசங்கஞ் செய்தவர்களில் அவரொருவர்; விஷயம்: "ஏக குடும்பமாய் வாழுதல் இக் காலத்துக்கு ஏற்குமோ?" என்பதே. அன்றிரவு அவர் "ஹாம் லெட்" நாடகம் பார்க்கப் போக வில்லை,



## நான்காவது அதிகாரம்.

"நாளை நம்ம ராஜா பிறந்த நாள்; மாமா நக்ஷத்திர ஹோமம் செய்ய வேணும் என்கிறார்." என்றாள் பத்மா வதி யம்மாள்.

"நக்ஷத்திரமாவது! ஹோமமாவது! இதெல்லாம் நான் சம்மதிக்க மாட்டேன். பணச் செலவுக்காக நான் சொல்லவில்லை: எனக்கு நம்பிக்கையில்லை, என் குழந்தைக்கு வேண்டாம். இராமு பிறந்த நாளன்று ஆயுஸ் ஹோமம் வேண்டுமானாலும் செய்யட்டும், நான் தடுக்கவில்லை," என்று நாராயணையர் பதிற் சொன்னார்.

பத்மா:—கூட இரண்டு பிராமணர்களைக் கூட்டிக் வரும்படி வாத்தியாரிடத்தில் சொல்லியாய் விட்டது. சனிக்கிழமை வருகிறது: குழந்தைக்குப் பீடையெல்லாம் தீரும், ஆயுஸ் விருத்தியாகும், செய்யத்தான் வேண்டும் என்கிறார். ஏதாவது சொன்னால் சண்டை தான் வரும்.

நாரா:—சரி, நடக்கட்டும்; என்னை மட்டும் தொந்திரவு பண்ண வேண்டாம்; நான் புகையில் கண்ணை அவித்துக் கொள்ள மாட்டேன்; சாப்பாட்டுக்கு முன் கீழே வரவே மாட்டேன்.

பத்மா:—போகட்டும், சாப்பிடவும் வரமாட்டேன் என்காமல் இவ்வளவாவது தயவு பண்ணினது பெரிய காரியம் தான்." என்று, சிரித்துக் கொண்டு போய்விட்டாள்.

மறுநாள் வீட்டில் விருந்துச் சமையற் புகையும் ஹோமப் புகையும் வைதீகர் கோஷமுமா யிருந்தது. நாராயணையர் தன் மனைவி கையில் செலவுக்கென்று ஐந்து ரூபாவைக் கொடுத்து விட்டு, ஸ்நானத்துக்குப் பின்பு மாடியிலேயே இருந்தார்; சனிக்கிழமையானதால் அவர் பள்ளிக் கூடத்துக்கும் போகவில்லை. பத்து மணிக்கே ஆசுபத்திரியி லிருந்து திரும்பி விட்ட கோபாலையரும் அவருடனிருந்தார். சுமார் பன்னிரண்டு மணிக்கு, அலங்காரமான ஆடை குங்குமம் சந்தனம் புஷ்பம் எல்லாம் அணியப் பெற்றிருந்த அவர் மகன் சீதாபதி வந்து, அவரையும் கோபாலையரையும் நமஸ்காரஞ் செய்து, சாப்பிடக் கூப்

பிட்டான். அவர்கள் அவனை வாழ்த்தி முத்த மிட்டுப் பரிகாசஞ் செய்து தூக்கிக் கொண்டு, கீழே இறங்கினார்கள். இலைகள் போட்டுத் தயாராகப் பரிமாறி யிருந்தது. ஐயா வையரும் நான்கு வைதீகரும் இலைகள் முன் வீற்றிருந்தார் கள். இவர்களும் போய் உட்கார்ந்தார்கள்.

"யாராவது திடீரென்று உள்ளே வரப் போகிறார் கள், வாசற் கதவைத் தாழிட்டு விடு," என்றார் ஐயாவையர். பத்மாவதியம்மாள் அப்படியே சென்று தாழிட்டாள். பின்பு அவளும் அவள் தாயுமாகக் குறையும் பரிமாறினார் கள். சாஸ்திரோக்தமாக சுப்பம்மாள் தீர்த்தம் வார்த் தாள்; உபாத்தியாயர் கிருஷ்ண கனபாடிகள், "ஹரி:!" என்று தீர்த்தம் வாங்கிக் கொள்ள உத்திரவு கொடுத்தார். இரஸம் எடுக்கும் சமயத்தில் வாசற் கதவு பலமாய் அடுத் தடுத்துத் தட்டப் பட்டது. சுப்பம்மாள் போய்க் கதவைத் திறந்து பார்த்தாள். உடனே ஒருவர் நடைக்குள் நுழைந் தார். அவள் சாப்பாட்டு வேளை யென்று சொல்லியும் கேட்க வில்லை. அவள் திடுக்கிட்டு உள்ளே திரும்பி வந்து, "யாரோ ஒருத்தன், சட்டைக்காரன் மாதிரி யிருக்கு, நடைக்குள்ளே வந்து நிற்கிறானே!" என்றாள்.

அதற்குள், "உள்ளே வரலாமாடா, பயலே! எனக் கும் நாய் போல் பசிக்கிறது; நல்ல சமயத்தில் வந்தேன்." என்று இங்கிலீஷில் சொல்லிக் கொண்டே, நடைக் கதவை யும் திறந்து, ஒருவர், இவர்கள் சாப்பிடும் இடத்துக்கே வந்து விட்டார். ஐரோப்பியர் உடை யுடுத்துக் கையில் ஒரு தொப்பியுடன் வந்தார்; தலை கத்தரித் திருந்தது. ஐயாவையரும் வைதீகர்களும் திடுக்கிட்டுத் திகைப்பதைக் கண்டு, அவர், "நானும் பிராமணன் தான்." என்றார்.

"ரெங்குவா!" என்று நாராயணையரும் கோபாலைய ரும் ஏக காலத்தில் ஆச்சரியத்தோடு கூவினார்கள்.

"பின்னை யார்? இங்கே ஒரு இலையைப் போடச் சொல்லு. மற்றவை அப்புறம் பேசிக் கொள்ளலாம். என்ன! வடை, அப்பளம், போளி, பழம்! நான் தந்தி கொடுக்கா விட்டாலும், நாணு, விருந்து தயாராய் வைத் திருக்கிறயே! இதோ வண்டியை நிற்கச் சொல்லிக், கைப் பையை மாத்திரம் உள்ளே எடுத்துக் கொண்டு, வந்து விடுகிறேன். அதற்குள் ஒரு இலையில் பரிமாறச் சொல்லு."

நாரா :—வண்டி நிற்பானேன்? உடனே போகவேண்டு மா என்ன?

வந்தவர் :—"இன்று சாயங்காலம் வரவேண்டிய 'ஸ்டீமர்' பதினொரு மணிக்கே வந்து விட்டது. பக்கத்தி லிருப்பதால், உங்களையும் பார்த்து விட்டுச் சாப்பிட்டு விட்டுப் போகலாமென்று நேராக இங்கே வந்தேன். எங் கண்ணு வந்திருப்பான்; அவன் எங்கே யாருடன் இறங்கி யிருக்கிறனே உடனே பார்க்க வேண்டும். இல்லாவிட் டால் அவன் 'ஸ்டீமரு'க்குப் போய்விடுவான்." என்று சொல்லிக் கொண்டே வெளியே போனர்.

ஐயாவையர் :—நாணு! இவர் யார்? பிராமணுள்தானு? ஸ்டீமரேது ஸ்டீமர்?

நாராயணையர் உடனே பதிற் சொல்ல வில்லை.

கோபாலையர் :—இவர் எங்களுடன் வாசித்தவர்; ரெங்கசாமியையர் என்று பேர்; எங்கள் ஜாதி; சீமைக் குக் கலெக்டர் பரீக்ஷை கொடுக்கப் போயிருந்தார். பரீக்ஷை தேறி விட்டது; இப்பொழுதே திரும்பி வந்திருக் கிறுர் போலிருக்கிறது. சீக்கிரம் பெரிய ஜில்லா கலெக்டர் உத்தியோகம் கூட ஆய்விடும்.

கிருஷ்ண கன பாடிகள் :—அப்படியா! பெரிய கலெக் டர் உத்தியோக மாகுமா?

கோபா :—ஆமாம், அதிற் சந்தேக மில்லை; அதற்கு மேலான உத்தியோகம் கூட ஆகும்.

இதற்குள் தன் கணவர் சொல்லியபடி, பத்மாவதியம்மாள், அவர் பக்கத்தில் ஒரு பெரிய இலையைப் போட்டுப் பரிமாறினாள்.

ஐயா :—அதிருக்கட்டும், கோபு; இவருக்குச் சீமையிலே சமைய லெப்படி, சாப்பா டெப்படி, கூட யார் போயிருந்தார்கள் ? அதைச் சொல்லும் கேட்போம்.

கோபா :—கூட வேது கூட? அவர்தான் போயிருந்தார் : அங்கே ஒரு வீட்டிலாவது களப்பிலாவது சாப்பிட்டுக் கொண்டிருந் திருப்பார்.

ஐயா :—வெள்ளைக்காரர் கூடவா ?

கோபா :—பின்னே யென்ன செய்கிறது? ஆபத்துக்குப் பாபம் இல்லை யென்று சொல்வ தில்லையா? பட்டினியே கிடக்க முடியுமா ?

கனபாடி :—அது முடியுமா ? ஒரு நாளா இரண்டு நாளா ? ஆபத்துக் காலத்தில்,————

ஐயா :—திவ்யம்! திவ்யம்! நல்ல ஆபத்திது, நன்றாய் வந்தது! அடியே! எங்களுக்கு மோரை விடு, நாங்கள் சீக்கிரம் எழுந்திருக்கட்டும்; இன்றைக்கு இவ்வளவு போதும்.

சுப்பம்மாள் பாயஸத்தை எடுத்துக் கொண்டுவந்ததைக் கண்டு, "மோரை எடு என்கிறேனே!" என்று அவள் கணவர் மறுபடியும் சினந்து சொல்ல, அவள் மோரை யெடுத்து வந்து அவருக்கும் வைதீகர்களுக்கும் பரிமாறினாள். அவர்கள் அவசரமாய்ச் சாப்பிட்டார்கள்.

நாரா :—அவரும் நம்மைப் போல பிராமணன் தானே, மாமா! இப்படிச் செய்வது அவருக்கு எவ்வளவு அவமானமா யிருக்கும் ?

ஐயா :—எல்லாம் நீங்கள் கூட இருந்து சாப்பிட்டு வெகுமானப் படுத்தினால் போதும்; வெள்ளைக்காரர் மாதிரி, அவனையும் வேண்டுமானால் கூட உட்கார வைத்துக் கொள். கெட்ட கேட்டுக்குப் பிராமணன் வேறு!

இதற்குள் ரெங்கசாமியையர், 'பூட்ஸை' மட்டும் கழற்றி வைத்து விட்டுத் திரும்பி வந்து விடவே, ஐயா வையரும் வைதிகர்களும் தாமே உத்திரா போஜனம்



வார்த்துக் கொண்டு எழுந்திருந்து விட்டார்கள். ரெங்க சாமியையர் முகம் சுண்டிப்போய் விட்டது; முன் வைத்த காலைப் பின்னிழுத்துக் கொண்டு அவர் திகைத்து நின்றார்.

நாரா:—சும்மா, வா, ரெங்கு; இதோ, இந்த இலையில், என் பக்கத்தில் உட்காரு; அவர்கள் கிடக்கட்டும்; அவர்கள் சங்கதி நமக்குத் தெரியாதா?

ரேங்கு:—இல்லை, நான் பின்னால் சாப்பிட்டுக் கொள்கிறேன்; நீங்கள் சாப்பிடுங்கள்.

உடனே நாராயணையர், தன் கலகத்தை விட்டு எழுந்து போய், இடது கையால் அவரைப் பிடித்திழுத்து வந்து, தன் பக்கத்தில் உட்காரவைத்தார். அவர்கள் மூவரும் பேசிக் கொண்டே சாப்பிடலானார்கள்.

அன்று மாலை நாலு மணிக்கு, அவர் மனைவி மரண திசையி லிருப்பதாயும் உடனே புறப்பட்டு வரவேண்டு மென்றும் கோபாலையருக்குத் தந்தி வந்தது. ஆறு மணி ரயிலிலேயே அவர் திருநெல்வேலிக்குப் புறப்பட்டு விட் டார்; ஐயாவையரும் சுப்பம்மாளும் அவருடன் தங்க ளூருக்குப் போய் விட்டார்கள். சீதாபதியுடன் பள்ளிக் கூடத்தில் வாசித்துக் கொண்டிருந்த அவர்கள் மகன் இராமபத்திரன் மட்டும் இருந்தான். நாராயணையர், அவர்களைத் தன்னுடனிருக்கச் சொல்லி நிர்ப்பந்தப் படுத்த வில்லை; மரியாதைக்கு மட்டும் சொன்னார்; பத்மாவதி யம்மாளுக்கோ, அதிக மனவருத்தம் தான்.



## ஐந்தாவது அதிகாரம்.

மறுநாள் முதல் பத்மாவதி யம்மாள் காலையில் ஐந்து மணிக்கே எழுந்து வீட்டு வேலைகளை யெல்லாம் தானே செய்ய வேண்டியதாயிற்று; அவள் கணவர், கடைகளுக் குச் சென்று வீட்டுக்கு வேண்டிய சாமான்களை வாங்கி வருவதுடன், குழந்தைகளையும் அடிக்கடி பார்த்துக் கொள்ள வேண்டியதாயிற்று; இம் மட்டோ, தன் கணவர் கலாசாலைக்கோ வேறு வேலையாகவோ வெளியே போன பொழுதெல்லாம், பத்மாவதி யம்மாள், வீட்டில் தனியே இருக்க வேண்டியதாயிற்று. "அத்தை அருமை செத் தால் தெரியும்," என்னும் பழமொழியின் பொருள் அப் பொழுது தான் விளங்கிற்று. ஒரு நாள் மாலை பத்மாவதி யம்மாள் வீட்டு வாசல் திண்ணையில் நின்று தன் கணவர் வரவை எதிர் பார்த்துக் கொண்டிருந்த பொழுது, ஒருவன் வந்து, "ஐயர் அதோ கடையில் ஆரஞ்சுப் பழம் வாங்கு கிறார்; ஒரு ரூபா வாங்கிக்கொண்டு வரச்சொன்னார்" என்று கேட்டான்; நிஜமென்று நினைத்து அவளும்

கொடுத்தாள்; அவனை இதுவரையும் திரும்பிக் காண வில்லை!

இந்த அசௌகரியங்களை எல்லாம் உத்தேசித்து நாராயணையர் வேலையாள் விசாரிக்கத் தொடங்கினார். தன்னாலேன்ற மட்டும் பார்த்தும், சரியான பிராமண ஸ்திரீகள் ஒருவரும் அகப்பட வில்லை. ஒருவிதந்து மட்டும் சாப்பாடு தவிர மாதம் ஆறு ரூபா என்று பேசி வந்து இரண்டு நாள் வேலை பார்த்தாள். "எச்சிலும் நீண்டலுமாக இந்த வீட்டில் யார் இருப்பார்கள்?" என்று ஏசிக் கொண்டு போய் விட்டாள். பின்பு பிராமணப் பையன்கள் பார்த்தார்: "பெண் பிள்ளைகள் இருக்கும் வீட்டில் மாசம் நூறு ரூபா கொடுத்தாலும் நம்மா லிருக்க முடியாது," என்றான் ஒருவன். "நான் சந்நியாசம் வாங்கிக் கொண்டால் எனக்கு வேலையாள் எதற்கு?" என்று அவனை அனுப்பிவிட்டு, வேறொன் விசாரித்தார். "ஸார்! நான் அடுப்பு அடிக்களை மெழுக மாட்டேன்; பெண்டுகள் எச்சிலெடுக்க மாட்டேன்; பழையது சாப்பிட மாட்டேன்; பற்றுப் பாத்திரங்கள் தேய்க்க மாட்டேன்; பத்து மணிக்குள் சாப்பாடு ஆகிறதா யிருந்தால் மூன்று மணிக்கு டீ வேணும்; இல்லா விட்டால் உதயத்திலே காப்பி வேணும்; மாஸம் பன்னிரண்டு ரூபா கறார்; சம்மதமானால் நம்மிடத்தில் பேசலாம்," என்றான் ஒருவன். "காலமே எட்டு மணிக்கு வருவேன், பதினொரு மணிக்கு விட்டு விடவேணும்; ஸாயங்காலம் 4½-மணிக்கு வருவேன் ஒன்பது மணிக்குப் போய் விடுவேன். நமக்குச் சம்பளம் பன்னிரண்டு தான்" என்றான், மூலைத்தார் சந்தனப்பூச்சு தாம்பூலம் சாந்துப்பொட்டு தலைச்சொருக்குடன் இலங்கும் ஒருவன்; பொடி டப்பி இடுப்பு வேஷ்டியிற் சொருகி யிருந்ததால், நாம் முதலிற் சொல்ல வில்லை. "நான் சமையற் காரன் தான்; வஞ்சகமில்லாமல் வேலை பார்க்கிறேன்;

ஆனால் நான் சண்டு சொல் பொறுக்கமாட்டேன்; கூர் தான். முதலில் பதினொரு ரூபா கொடுத்தால் போதும்; வேலையைப் பார்த்துக்கொண்டு நீங்களே தருவீர்கள்," என்றான் மற்றொருவன். அவனுக்கு இருபத்தைந்து வயதிருக்கலாம்; கொஞ்சம் தைரியமாயும் சுத்தமுள்ளவனாயும் இருந்தான்; அவனொருவன்தான் தன்னைப்பற்றி 'நாம்' என்று பேசாதவன். நாராயணையர் அவனைத் திட்டம் செய்து கொண்டார்.

ஒரு நாள் மாலை அவன் முதலில் வேலைக்கு வந்தான். அன்றிரவு சாம்பாரில் நாலு பலம் புளியும், கறியில் கால் படி உப்பும் தான் அதிகம்; ஒருவராலும் சாப்பிட முடியவில்லை. அடுப்பில் ஒரு குப்பி மண்ணெண்ணெயையும், கறியில் அரைக்காற்படி நெய்யையும் விட்டு விட்டானென்றும், அவன் அடுக்களையிலிருக்கும் பொழுது தனக்கு உள்ளே போகப் பயமாயிருக்கிறதென்றும், பத்மாவதியம்மாள் குறை கூறினாள்.

"என்ன, வைத்தி, சமையல் இப்படியிருக்கிறது?" என்று சாப்பிடும் பொழுது நாராயணையர் முகத்தைக் கடுத்துக் கொண்டு கேட்டார்.

"இதெல்லாம் ஒரு வாய்ப்புத் தானே: உங்களுக்கு அதிர்ஷ்டமில்லை. நான் இன்றைக்குத் தானா சமைக்கிறேன்?" என்றான் வைத்திய நாதன்.

நாராயணையர் :—இவ்வளவு புளியும் இவ்வளவு உப்பும் என்னமாய் வந்தது? மறந்துபோய் இரண்டு தரம் போட்டு விட்டாயா?

வைத்தி :—இல்லை, நான் கொஞ்சமாய்த்தான் போட்டேன்; ஒரு தரம்தான் போட்டேன். இப்படியெல்லாம் 'கிளாஸ் கேள்வி' கேட்கிறதாயிருந்தால் நம்மால் முடியாது; வேண்டுமானால் அம்மாள் சமைத்து வைக்கட்டும், நான் எடுத்துப் பரிமாறுகிறேன்.

நாராயணையர் இதைக் கேட்டவுடன், வாய்ச் சாதம் பிரையேறிக் கொள்ளும்படி சிரித்து விட்டார். அவர் மனைவியும் சிரித்துக்கொண்டு, "நாளைச் சமையலையும் பார்ப்போம்," என்றாள். சாப்பாடு முடிந்தவுடன், "ஓய், வைத்தியநாதையரே! நான் குழந்தையை எழுப்பிக் கஞ்சி கொடுக்கிறேன், நீர் உயரப் போய்ப் படுக்கையை சற்று உதறிப் போட்டுவிட்டு வந்துவிடும்," என்றாள். உடனே வைத்தியநாதையர், "அதெல்லாம் நம்ம வேலையு மில்லை, நம்மால் முடியவும் முடியாது; படுக்கை போடு கிறது, வேஷ்டி துவைக்கிறது, லாந்தர் துடைக்கிறது, இதெல்லாம் நம்மால் முடியாது. இந்த ரூபா ஒரு மிட்டாய்க் கடையிலோ, காப்பி கிளப்பிலோ, நிமிஷத் திலே கிடைத்துப் போம். இந்தச் சள்ளைக் கெல்லாம் நாம் ஆளில்லை, இதோ நான் வெளியி லிறங்கிவிடுகிறேன்," என்று புறப்பட்டார்.

"அப்படியே செய்கிறது," என்றார் நாராயணையர். இப்படி இரண்டு மூன்று பரிசாரகர்களைப் பரீக்ஷை பார்த் தும் சரிப்படாமல், கடைசியில், வீட்டுச் சில்லறை வேலை களைச் செய்து பத்மாவதி யம்மாளுக்கு எப்பொழுதும் துணை யிருக்கும்படி ஒரு சூத்திர வேலைக்காரியையும்; படுக்கை போடுதல், வேஷ்டி துவைத்தல், லாந்தர் துடைத்து ஏற்றுதல், கடை சாமான் வாங்கி வருதல், வேண்டியபோது வெந்நீர் போடுதல் முதலிய வேலைகளுக் காக ஒரு சூத்திரப் பையனையும், நாராயணையர் திட்டம் செய்து கொண்டார்; அவர் மனைவியே சமையல் செய்தாள்; அவளால் சௌகரியமாய் முடியாத போதும், இருவரு மாக மாலையில் வெளியே போக நேரிட்ட காலங்களிலும், பக்கத்திலிருந்த 'கிளப்'பிலிருந்து வேண்டியபடி சாப்பாடு தருவித்துச் சாப்பிட்டு வந்தார்கள். கடைசியாக வந்த பிராமணப் பையன், தில்லும் பில்லுமாக எதிர்த்துப் பேசி விட்டு ஓடிப்போன தினம் நடந்த சம்பாஷணை கவனிக்கத்

தக்கது. அன்று 'கிளப்'பிலிருந்து சாப்பாடு தருவித்துச் சாப்பிடும்படி ஆயிற்று; கோபாலையரும் வந்திருந்தார். 'போஜனத்துக்குப் பின் நிலவிலிருந்து வெற்றிலை போட்டுக்கொண் டிருந்தார்கள்.

கோபாலையர் :—ஒன்றையும் தூக்கிக் கொண்டுபோய் விட வில்லையே ?

நாராயணையர் :—இல்லை ; அந்த மட்டும் யோக்கியன் தான்.

கோபா :—இனி என்ன யோசனை ? இவன் நாலாவதோ, ஐந்தாவதோ ?

பத்மாவதி :—பாட்டியைச் சேர்த்து ஆருவது.

நாரா :—யோசனை யென்ன ? பத்மியும் நானுமாகச் சமைப்போம் ; அல்லது இன்றிராத்திரிப் போல 'கிளப்' இருக்கவே யிருக்கு. மற்றதற் கெல்லாம் சூத்திர வேலைக்காரர் வைத்துக் கொள்கிறேன். பத்மி! இன்று சாயங்காலம் ஒரு பதம் உண்டாக்கினையே, அதைக் கொஞ்சம் பாடு ; கோபு கேட்கட்டும்.

பத்மா :—அண்ணு கேலி பண்ணப் போகிருர்.

நாரா :—சும்மா கேலி பண்ணட்டும் ; பாடு.

பத்மாவதி மெதுவாய்ப் பாடத் தொடங்கிஞள் :—

பல்லவி.

கஷ்டமெல்லாம் பொறுப்பேன்; பட்டினியும் கிடப்பேன்—நான்.

சரணங்கள்.

மற்றொருத்தர் குற்றமுரைக்கும் மாற்றம் பொறுக்கமாட்டேன் நான். (கஷ்ட)

நாரா :—என் சங்கதியாச்சு ; உன் சங்கதியையும் சொல்லு ; அதை மாத்திரம் ஏன் மறைக்கிருய்? குறையும் பாடு.

(பத்மாவதி பாடுதல்.)

மணமும் ருஜியும் பணமும் கெடுக்கும்
மடையர்ப் பொறுக்க மாட்டேன்— நான். (கஷ்ட)

கோபா :—அதெல்லாம் சரிதான்; எத்தனை நாளைக்குப் பொறுப்பீர்கள்? நடக்கிற சங்கதியா இது?

நாரா :—நடக்காமலென்ன? வேறு விதியில்லாவிட்டால் நடந்துதானே தீரும். பழைய னாளை வழக்கங்களின் பலனாக இந்த நாளில் நமக்குண்டாயிருக்கும் சங்கடங்களில், இந்தப் பரிசாரக விஷயம் ஒன்று.

கோபா :—பழைய வழக்கமென்ன செய்யும்? இந்த நாளைப் பெண்களால் முடியவில்லை. சொற்ப சம்பளக்காரனுக்கும் பரிசாரகனில்லாமல் தீரவில்லை. இதைப் பாரேன்: என் மாமனார் வீட்டில் தினமும் வேலைக்குக் குருணி அரிசிக்குக் குறையாமல் கூட்டமுண்டு; பரிசாரகன் கிடையாது; எல்லாம் பெண்டுகள்தான்; சாதாரண விசேஷங்களன்று பதக்கு முக்குருணி வடிக்கும்பொழுதும், அவர்கள்தான் சகலவேலையும். என் னும்படையாளையும் உன் னும்படையாளையும் செய்யச் சொல்லேன், பார்ப்போம்.

நாரா :—இதென்ன பேச்சு? உன் மாமனார் வீட்டுப் பெண் பிள்ளைகள் என்ன படித்திருக்கிறார்கள்? ஏதேனும் மூளையுழைப்புண்டா? பிள்ளை குட்டி யென்ற கவலைகளின்றி, இரண்டு மூன்று கைம்பெண்டாட்டிகளாவது வீட்டி லில்லையா? பகலில் ஒரு படி யரிசிச் சாதமும் இராத்திரி எட்டு அடையும் தின்று கொண்டு, வீண்வம்பு அளப்பவர்களுக்கு இது ஒரு பெரிதா? ‘மலை விழுங்கி மகாதேவருக்குக் கதவு ஒரு அப்பளாம்’ தானே. முதலில், பெண்கள்தான் சமையல் முதலிய வீட்டு வேலைகளையெல்லாம் செய்யவேண்டுமென்று வைத்திருப்பதே பிசகு.

கோபா :—அதை நான் ஒப்ப வில்லை: அவசியத்தின் பேரிலும் சௌகரியத்தைக் குறித்தும் ஏற்பட்ட வழக்கமே அது; புருஷன் வெளியேறிப் பாடுபட்டுச் சம்பாதிக்கிறது, ஸ்திரீ ஆக்கி யிடுகிறது.

நாரா:—பொதுவாய் அது சௌகரியந் தான்; ஆனால் ஆண்மக்கள் பிரவர்த்திகளுக்கே ஏற்ற பெண்களும், பெண்மக்கள் பிரவர்த்திகளுக்கே தக்க புருஷர்களும் எத்தனையோபே ரிருக்கிறார்கள். லக்ஷ ஸ்ரீமானான உன் மாமனார் வீட்டுப் பெண்டுகள் ஏன் அடுப்படியில் வெந்து வாடவேண்டும்? பிள்ளைப் பெறுவதையும் மடைத் தொழிலையும் தவிர வேறொன்றுக்குமே யோக்கியதை யில்லாமல், பெண்களை முழு மூடர்களாய் வைத்திருப்பதி னால்தான் இப்படியாகிறது. இதோ, பத்மிக்கு இயல்பா யுள்ள சாரீரத்துக்கும் ஞானத்துக்கும், அவளை மட்டும் பாலிய முதல் சங்கீத சாஸ்திரத்தில் சரியாகப் பழக்கி யிருந்தால், கச்சேரி யொன்றுக்கு ஐந்நூறு ஆயிரம் என்று வாங்கும் வித்வான்களைவிட, அவள் மேற்போ யிருப்பாள் என்பதிற் சந்தேகமில்லை. வேண்டிய பரிசார கர்களும் வேலைக்காரரும் வைத்துக் கொண்டு, எவ்வளவோ சுகமாயும் கௌரவமாயும் வாழலாம். குலஸ்திரீகள் பாடக் கூடாது; அப்படியே பாடினாலும், ஒழுங்காய்ப் படித்து பகிரங்கமாய்ப் பாடக் கூடாதென்று வைத்துக் கொண்டு, இப்படிப்பட்ட ஒருத்தியை அடுப்பூதவிட்டு இம்சை செய்கிறோம். யார்யார்க்கு எதெதில் மூளை நன்றாய்ச் செல்கிறதோ அதிலேயே விட்டுப் பழக்கித் தேற்றினா லன்றோ, அவர்களுக்கும் சுகமுண்டு, அறிவும் விருத்தி யடையும், தேசமும் முன்னுக்கு வரும்.

கோபா:—எல்லாரும் சுகவழியிலேயே திரும்பி விட் டால் கஷ்டமாயும் கீழாயும் உள்ள வேலைகளை யார் செய்கிறது?

நாரா:—கோபு! உளறாதே. உனக்கு முப்பது வரு ஷம் சிக்ஷை சொல்லி வைத்தாலும் ஸ்வரபேதமாவது தெரிந்திருக்குமோ, யோசித்துப் பார். அல்லது பத்மி டாக்டர் ஆய்விடுவாளோ? எல்லாருமா மேதாவிகள்? எல் லாருமா தனவான்கள்? எத்தனை பேர் சமையல் வேலை

யையே வெகு குதூகலத்துடனும் ஆசையுடனும் செய்கிறார்கள்? எத்தனை கோடிப்பேர், தம்மிஷ்டப்படி நடக்க முடியாமல், தாரித்திர தோஷத்தால், கிடைத்த வேலையைச் செய்து பிழைக்க வேண்டியதா யிருக்கிறது? வேலைகளில், கீழேது மேலேது? உயிர் வாழ்க்கைக்கும் நாகரிக விருத்திக்கும் இன்றியமையாதன வெல்லாம், தோட்டி முதல் தொண்டமான்வரை எல்லார் வேலைகளுமே மேலானவை தாம். "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்; மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர்," என்றார் நாயனாரும். அப்படிப் பார்த்தால், நாமெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவரே. நீ பயப்படுகிறது வீணே. பொய் களவாதியவே இழிவானவை, மற்றெந்த வேலையும் மனிதனுக்கு ஏற்றதே என்ற உண்மை மட்டும் நம்மவர்க்குள் உறைத்து விட்டால், ஜாதிக்கட் டொழிந்து, ஸ்திரீகள் தாழ்ந்தவர் என்னும் எண்ணம் தொலைந்து, அவரவர் புத்திக்கும் சக்திக்கும் தக்கபடி உழைக்கிற தென்றாகி விட்டால், இந்தச் சங்கடங்க ளெல்லாம் சூரியனைக் கண்ட பனி போல் நீங்கி விடும். தாழ்வாக நினைக்கப்படும் வேலைகளுக்கும் ஒரு நாளும் ஆள் கிடையாமல் போகாது. இந்தப் பரிசாரகன் விஷயத்தையே யோசித்துப் பார்: மாதம் முந்நூறு நானூறு சம்பள முள்ள ஒருத்தியோகஸ்தன், பத்தோ பதினைந்தோ கொடுத்து, ஒரு பரிசாரகனைத் திட்டம் செய்கிறான்; முதலில், பெண்கள் சுதந்தர மில்லாதவர்க ளென்றும், எப்பொழுதும் பராதீனத்துக்கே அருகரென்றும், கேவலம் காமபாத்திரங்க ளென்றும் நாம் நினைத்து நடந்தும் நடத்தியும் வருவதால், எஜமானி பாலியமா யிருந்தால், தன் வேலைக்காரனையே புருஷனென்று பயப்படுகிறாள்; அவனும், அவளை, எப்படியிருந்தாலும் ஒரு ஸ்திரீதானே யென்று இகழ்ந்து நடத்துகிறான். எஜமானியாக அவளுக்குரிய ஸ்தானத்திலும், புருஷனாய்ப் பிறந்ததால் மட்டும் அவனுக்குள்ள அந்தஸ்துப் பெரிதாயிருக்கிறது; ஆகவே, அவன் அவளை அவ

மதிக்கிறான். அநேக வீடுகளில், சாணி யெடுத்து மெழுக்கிடுதல் பெண்டுகளே செய்ய வேண்டிய தென்று, எண்ணப் படுகிறது; தன் எஜமானர் வஸ்திரங்களைத் துவைத்து, அவருக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்யும் பரிசாரகன், அவர் மனைவி வஸ்திரங்களையோ, பெண் குழந்தைகள் பாவாடைகளையோ சுத்தஞ் செய்யவும், பிறர் சுத்தம் செய்து வந்தவற்றைப் பிழிந்து உலர்த்தவும் கூட, ஒப்புக் கொள்கிற தில்லை; அவ்வேலையைத் தன் புருஷத்துவத்துக்குக் குறைவாக எண்ணுகிறான். தான் பிராமணனாய்ப் பிறந்ததனால் மட்டும், எவ்வளவோ படித்தவனும் யோக்கியனும் தனவானுமான ஒரு சூத்திரப் பிரபுவைத் தனக்குக் கீழாக எப்படி யெண்ணுகிறானோ, அப்படியே, தான் புருஷனானதால், எந்த ஸ்திரீயையும் தனக்குக் கீழாகவே நினைக்கிறான். "பெண் ஜன்மமோ: புண் ஜன்மமோ," என்று நமக்குள் வசனமுண்டு. நாம் நடத்தும் விதத்தினாலேயே, பெண்கள், தம்மைக் காத்துக் கொள்ளவும், புருஷரென்று பயப்படாமல் தக்கபடி நடந்து கொள்ளவும் தெரியாமற் போய் விடுகிறார்கள். இன்று நேற்றல்ல, பல நூற்றாண்டுகளாக இப்படியே பெண்கள் சுதந்திரம் இழந்து, அவர்களும் கீழாய் விட்டார்கள்; புருஷராகிற நாமும், ஸ்திரீகளும் நம்மைப் போல் சுதந்திர முடையவர்களே, கேவலம் காமபாத்திரங்கள் மட்டு மல்ல, பரஸ்பரம் நன்மையும் சந்தோஷமும் உண்டாகும்படி ஸ்திரீ புருஷர் கூடிப் பழகலா மென்பதையே மறந்துவிட்டோம். நமது முன்னோர்கள் இப்படி யில்லவே யில்லை.

கோபா:—நீ நினைக்கிறபடி எப்பொழுது திருந்தப் போகிறது? நம்முடைய நாளிலில்லை!

நாரா:—ஆனால் நாம் கஷ்டப்பட வேண்டியது தான். இது மட்டும் நிச்சயம் தான்: ஜாதி யாசாரம் குறைந்து பெண் கல்வியும் விருத்தி யானால், எல்லாம் சீக்கிரம் சீராகிவிடும். பெண்கள் நன்றாகப் படித்துப் புத்தி விசா

லம் அடைந்து விட்டால், பாலிய விவாகமும் அதனால் விளையும் பெருங் கேடுகளும்கூட நீங்கி விடும்; அவர்களை நீக்கி விடுவார்கள்.

பத்மா :—பாலிய விவாகம் உள்ளவரையும் பெண்கள் தான் அதிகம் படிக்க முடியாதே: மாமியார் ஒட்டினால், அகமுடையான் ஒட்டான்; அகமுடையான் ஒட்டினால் மாமியார் ஒட்டாள்; இருவரும் ஒட்டினாலும் குழந்தைகள் ஒட்டாது. பத்திலும் பதினைந்திலும் பிள்ளைகளும் பெற்றுக்கொண்டு, வீட்டு வேலைகளையும் செய்து கொண்டு, நாங்கள் வாசிப்பதெப்படி?

நாரா :—வாஸ்தவம் தான்: நம்முடைய கெட்ட வழக்கங்களெல்லாம் ஒன்றோடொன்று பிணைப்புண்டு ஒரே சிக்கலாய்க் கிடக்கின்றன; நாமும், சணப்பன் வீட்டுக் கோழி மாதிரி, தளைப்பட்டுத் தத்தளிக்கிறோம். ஆயினுமென்ன? அவரவரால் ஆனமட்டும், அவரவர் குடும்பங்களிலும் தம்மைச் சேர்ந்தவர்களுக்கும், சிறிது சிறிதாய், எறும்பூரக் கல்லுந் தேயும் என்பதை நினைந்து, பெண்களைப் படிப்பித்தும், சரியாக நடத்தியும், பாலிய விவாஹத்தையும் மௌட்டிய வழக்கங்களையும் நிறுத்தியும், ஜாதி யகங்காரத்தை யொழித்து எல்லாரையும் சகோதரரைப் போல் நடத்தியும் வருவோமானால், நாம் கண்காண எவ்வளவோ திருந்திவிடும்.

கோபா :—ஏன், நாணு, உன் மாமனாரையும் மாமியாரையும் கொஞ்சம் திருத்துகிறது தானே?

நாரா :—ஐந்திலே வளைத்தாலன்றி ஐம்பதில் வளையுமா? நம்ம குழந்தைகளையாவது இவ்விதக் கொள்கைகளில் வளர்த்து வந்தோமானால் அடுத்த தலைமுறையில் எவ்வளவோ சுகமுண்டு.

கோபா :—சீதுவுக்கு மூன்றாவது வயது நடக்கிறதே; எப்பொழுது கலியாணம்? மாப்பிள்ளை பார்த்திருக்கிறாயா? இந்த நாளில் ஆயிரம் இரண்டாயிரம் கொடுக்க வேணுமே.

நாரா :—போடா, கேலி பண்ணாதே. நான் உயிரோடிருந்தால் சீது பெரியவளாகுமட்டும் கலியாணம் செய்வதில்லை யென்று தான் தீர்மானித்திருக்கிறேன்.

கோபா :—பெரியவளாய்விட்டால் மாப்பிள்ளை யாரு? அப்புறம் ஐயாயிரம் கொடுத்தாலும் யார் பண்ணிக்கொள்வார்கள்?

பத்மா :—ஏன், அண்ணுபிள்ளை சாமிக்கே பண்ணிக் கொள்ளட்டுமேன்.

கோபா :—"நாங்கள் சோழதேசம், நீங்கள் வடதேசம், குடிகெட்டுப் போகாதா?" என்று சொல்லிச் சிரித்தார்.

நாரா :—அது கிடக்கிறது ; தாம் போகாதே? இரண்டு வயசு தானே வித்தியாசம்? இருபது வருஷம் கழித்து நடக்கிறதா யிருந்தால் செய்யலாம் ; அது இப்போதைக் கில்லை.



## ஆறுவது அதிகாரம்.

செங்காட்டுப் பண்ணை முத்தையர், பண்ணை சேஷையரினும் பணக்காரர். கல்யாணியம்மாள் அவர் செல்வக் கடைக் குட்டிப் பெண். அவருக்குச் சம்சாரம் தவறிப் போய் விட்டாள்; ஆனால், தன் சம்பந்தியின் கதியைக் கண்டு, அவர் புனர் விவாகம் செய்து கொள்ள வில்லை. அவர் வீட்டில், பெண்களும் நாட்டுப் பெண்களும் பேரர் பேர்த்திகளும் அநேகர் இருந்தார்கள்; அவர் சகோதரி பாகீரதியம்மாள் என்ற விதந்துவும் இருந்தாள். அவர் வீட்டில் அசௌகரியமா யிருக்கு மென்று நினைத்து, தன் மனைவியையும் தமக்கையையும், அவருக்கே சொந்தமான பக்கத்து வீட்டில் தனியா யிருக்கும்படி, கோபாலையர் ஏற்பாடு செய்திருந்தார். அவர் ஏற்பாட்டின்படி, திருநெல்

வேலி டாக்டர் அடிக்கடி வந்து பார்த்து, அவருக்கு எழுதிக் கொண்டிருந்தாரே யன்றி, அவர் மருந்துகள் சரியாய்க் கொடுக்கப் படவில்லை. வீரவநல்லூர் சாஸ்திரிகள் வந்து ஒரு மாதம் மந்திரவாதம் செய்தார்; ஒன்றும் பலிக்க வில்லை. பின்பு செங்கோட்டைத் தாணுவையர் தருவிக்கப் பட்டார்; அவர் பேர்போன மந்திரவாதி; அவர் பிரம்பு, கட்டை விரற் பருமனிருக்கும்; ஏழு வெள்ளிப் பிடிகள் பிடித்திருக்கும்; அவருக்குத் துர்க்கை பிரத்தியக்ஷம் என்று சொல்லிக் கொள்வார். அவர் மாந்திரீகத்தில், குங்குமமும் புளியின் மலார்களும் அதிகம் செலவழியும்; அவர் ஜபித்த குங்குமத்துக்கு அடங்காத பேயும் புளியின் மலாருக்கு அடங்கி விடும் என்பது அவர் கொள்கை. அவர் வந்து ஒரு வாரத்திற்குள், கல்யாணியம்மாள் தேகமெல்லாம் பிரம்புக் கூடைபோல் தடித்து, இரத்தவெள்ள மாகிவிட்டது; பேயாட்டமும் அதிக முழுமூரமாய் விட்டது; அவள் அழகிய கூந்த லெல்லாம் சிக்குண்டு சடைப் பிடித்துக் கத்தரிக்கப் பட்டது.

ஒரு நாள் தாணுவையர், தங்கத்தகட்டில் மகாசக்தியுள்ள சக்கர மொன்று வரைந்து, மூன்று நாள்களாக நெஞ்சளவு ஜலத்தில் நின்றுகொண்டு ஜபித்து, விசேஷ பூஜைகள் செய்து துர்க்காதேவியின் அநுக்கிரகத்தை அடைந்து, ரக்ஷாபந்தனம் செய்தார். கல்யாணியம்மாளைப் பிடித்திருந்த மூன்று பேய்களுள், தரிசடி மாடனுக்கு அன்று வெகு கோபம்; நான்கு புளியின் மலாருகள் தும்பு தும்பாய்ச் சிதறிப்போயும் அடங்கவில்லை; கடைசியில், தாணுவையர் அவன் வாயைக் கட்டிவிடுவதாக ஏதோ ஒரு கோரமான பிரயோகம் செய்யத் தொடங்கவே, தரிசடிமாடன் (அதாவது கல்யாணியம்மாள்) திடீரென்று அந்த யந்திரத் தகட்டைப் பிடுங்கிப் பற்களாற் கிழித்து, முற்றத்தில் எறிந்து விட்டான். உடனே தாணுவையருக்கு (அல்லது, துர்க்கா தேவிக்கோ?) கோபம் வந்து விட்டது. பக்கத்தில் மலா

றொன்றும் காணமல், வேகமாய் எழுந்து தன் கால்களால் கல்யாணியம்மாளை உதைத்தார். கூடவிருந்த சாவித்திரி யம்மாளும்,; பாகீரதியம்மாளும், "ஓ! ஓ!! சூலியே!" என்று கதறினார்கள். "இந்தத் தரிசடிமாட்டை ஊரை விட்டோட்டி, அவன் கோயிலிருந்த இடம் தெரியாமல் எருக்கும் குருக்கும் கலந்து விதைக்கா விட்டால், என் பேர் தானுமில்லை, எனக்கு தேவி பிரத்தியக்ஷமு மில்லை." என்று வீரம்பேசினார் மந்திரவாதி. அன்றிரவே, கல்யாணியம்மாள் கருவுற்றிருந்த சிசுச்சிதைந்து விழுந்து விட்டது. அவள் பட்ட கஷ்டம் சொல்லி முடியாது. மறு நாள் திருநெல்வேலி டாக்டரை அழைத்துப் பார்க்கச் சொன்னார்கள். அவர் புருஷரானதால், சரீரத்திலுள்ள கோளாற்றை மருத்துவச்சி மூலமாகவே தெரிந்துகொள்ள வேண்டுமென்றார்கள். மருத்துவச்சி யிடத்திலோ அவ ருக்கு நம்பிக்கையில்லை; நாளுக்கு நாள் வியாதி அதி கரித்துப் பிராணபாயத்துக்கு வந்து விட்டது; டாக்டர் சொன்னபடி, கோபாலையருக்குத் தந்தி கொடுத்தார்கள்.

அவரும் மறுநாளிரவு வந்து சேர்ந்தார். எலும்பை யும் தோலையும் தவிர வேறு சதைப்பற்றே யின்றி மெலிந்து, மேலெல்லாம் இரத்தக் குழப்பமாகப் புண்ணாகி, ஆட்டங்களெல்லாம் ஓய்ந்து, நாவெடுத்துப் பதிற் பேசவும் சக்தியின்றி, ஜுரம் நெருப்பாய் வறுக்க, தலையும் மொட் டையாகி, கிழித்த நார்போலக் குற்றுயிருடன் கட்டிலின் மேற் கிடந்த தன் அருமை மனையாளைப் பார்த்தவுடன், கோபாலையர் தேம்பித் தேம்பி அழுதார். அவர் மனைவி கண்களி விருந்தும் தாரை தாரையாய்க் கண்ணீர் பெரு கிற்று. மறுநாள் காலையில், கோபாலையர் திருநெல்வேலிக் குச் சென்று, சகல செலவும் போகத் தினம் ஐந்நூறு ரூ வேண்டுமானாலும் தருவதாகவும், உடனே புறப்பட்டு வந்து தன் மனைவியைப் பார்க்கவேண்டுமென்றும், டாக் டர் கான்புட்டுக்குத் தந்தி கொடுத்தார்; தன் வேலை

களையும் மற்ற வியாதிஸ்தரையும் விட்டுவிட்டு அவ்வளவு தூரம் வரமுடியாதென்று உடனே பதில் தந்தி வந்து விட்டது. பின்பு, கோபாலையர், திருநெல்வேலி ஜில்லா ஸர்ஜனாகிய பெரிய டாக்டரைச் செங்காட்டுக்கு அழைத் துப் போய்த், தன் மனைவியைக் காட்டினார். அவர் வந்து நாலு நாள் வைத்தியஞ் செய்ததில், அபாயம் நீங்கிக் கொஞ்சம் குணப்பட்டது. அதற்குள் கோபாலையர் எடுத் திருந்த ரஜா முடிந்துவிட்டது; அதிக ரஜா எடுக்கவும் கூடவில்லை. பாளையங்கோட்டையில் ஒரு வீட்டைத் திட் டம் செய்து, தன் மனைவியைப் பெரிய டாக்டர் பார்வை யில் அங்கே கொண்டுவைத்து, தன் மூத்த மைத்துனரை யும், தமக்கையையும், பாகீரதியம்மாளையும் சகாயத்துக்கு வைத்துவிட்டு, அவர் சென்னைக்குத் திரும்பிச் சென்றார்; அவர் குழந்தைகளிருவரும் செங்காட்டில் தம் பாட்டனார் வீட்டிலேயே இருந்தார்கள். இவ்வாறு தானொரு பக்க மும், மனைவியொரு பக்கமும், மக்கள் ஒரு பக்கமுமா யிருப்பதில் அவருக்குள்ள விசனம் கொஞ்சமல்ல. தன் மனைவி ரயில் பிரயாணம் செய்யக்கூடிய அளவு சுகப் பட்டவுடன், சென்னைக்கு அழைத்துப் போக எண்ணி யிருந்தார். ஆனால், அவள் கஷ்டகாலம், பாயும் படுக் கையுமாகவே ஆறு மாதம் கிடந்தாள்: இராப்பகல் நித் திரையின்றி அவளுக்காகச் சாவித்திரியம்மாள் பட்ட சிர மம் கொஞ்சமல்ல; அவள் தந்தை முத்தையரும், அடிக்கடி வந்து பார்த்துப்போவார். அக்காலங்களில் அவர் சில சம யம் குழந்தைகளையும் கூட்டிக்கொண்டு வருவார். மறு படியும் பிழைத்து உயிர் வாழலாம் என்ற நம்பிக்கை குறையக் குறைய, கல்யாணிக்குத் தன் கணவர், குழந்தை கள் மேலுள்ள வாஞ்சை அதிகரித்தது. 'எப்படிக் குழந் தைகளை விட்டுபோவேன்!' என்று ஏங்கினாள். விடுமுறை யில் வந்திருந்தது தவிர, அவள் கணவர், மூன்று தரம் ரஜா எடுத்து வந்து அவளைப் பார்த்துப் போனார். நாளா

வர்த்தியில், அவள் படும் கஷ்டத்தைப் பார்ப்போர் யாருமே, அவள் சீக்கிரம் போய்விட்டால் நலமென்று நினைக்கும்படி ஆய்விட்டது.

கடைசியில் ஒரு நாள், பெரிய டாக்டரும் கை விட்ட பின், கோபாலையருக்கு மறுபடியும் தந்தி கொடுத்துவிட்டு, மேனாப் பல்லக்கில் வைத்து அவளைச் செங்காட்டுக்குத் தூக்கிக் கொண்டுபோய் விட்டார்கள். அங்கே போன பின், கொஞ்சம் குணப்படுவது போலிருந்தது; வர வேண்டாமென்று பட்டணத்துக்குத் தந்தி கொடுக்க எண்ணினார்கள். "தேமேன சங்கரலிங்கத்திட்டே நாட்டு மருந்து சாப்பிட்டுண்டு. இங்கே யிருந்தாக்கா, இம்பிட்டு வந்திருக்கவே வந்திராது; திராபகம் நீயின்னு! திராபகம் குடிச்சுக் குடிச்சுத்தான் இப்படி யாச்சு; நான் சொன்னேனேபார்; இன்னமே தெளிஞ்சுடும்; அம்மாப் பெண்ணுத்துக் கோமதிக்கும் இப்படித் தானிருந்தது, நான் சொன்னேன், அப்படியே என்வாக்குப் பலிச்சுது பாத்துக்கோ!" என்றாள் முத்துப் பாட்டி. மறு நாளும் குணப்படுவது போலவே யிருந்தது. ஊரில் ஒரு அம்பட்டன், கைம்பெண்டாட்டி பாக்கி யில்லாமல், ஒவ்வொருவர் சொன்ன மருந்தையும் கொடுத்தார்கள். ஆனால் மாலை ஏழு மணி முதல் நோய் அதிகரித்தது; அன்று ராத்திரி தப்பாது என்றார் சிலர்; சங்கரலிங்கப் பண்டிதன் மட்டும் தைரியம் சொல்லிக்கொண்டே யிருந்தான்.

தான் பிறந்த வீட்டு நடுக்கூடத்தில், தரையில் ஒரு பாயின்மேல் கிடந்தாள், கல்யாணி. முத்தையரும், பாகீரதியம்மாளும், சாவித்திரியும் சூழ்ந்து வீற்றிருந்தார்கள். அது பழைய நாளைய வீடு; நன்றாய் வளர்ந்த மனிதனுக்குப் பாக்கட்டை தலையில் தட்டும்; புன்னைக்காயெண்ணெய் விட்டுத் துணித்திரி போடப்பட்ட ஒரு குத்து விளக்கு மட்டும் எரிந்துகொண்டிருந்தது; சங்கரலிங்கப் பண்டிதன் அதின் வெளிச்சத்தில் ஏதோ மருந்து சேர்த்

துக்கொண்டிருந்தான். எப்பொழுது என்ன நேருமோ என்று பயந்து மற்றவர்களெல்லாம் அவசரமாய்ப் பட்டா சாலைப் பக்கம் சாப்பிட்டுக்கொண் டிருந்தார்கள். ஓய்வொழி வில்லாமல், கல்யாணி தலையணைமேல் தன் தலையை இருபுற மும் மாற்றி மாற்றிப் புரட்டி முனகிக் கொண்டும், அடிக் கடி நாவை வெளியே நீட்டிச் சுழற்றித் தண்ணீர் கேட்டுக் கொண்டு மிருந்தாள். வைத்தியன், ஒரு துளி நீர் கூடக் கொடுக்கப்படா தென்று சொல்லி விட்டதால், ஒருவரும் தண்ணீர் கொடுக்கவில்லை. சாவித்திரி, கல்யாணியின் காலைத் தொட்டுப் பார்த்துவிட்டு, "பாதமிரண்டும் வாழைத் தண்டாய்க் குளிர்ந்து போச்சுதேடா, சங்கரலிங்கம்! நீ வந்து கையைப் பாரு" என்றாள்.

"சும்மா இருக்கட்டும் என்கிறேனே. நீங்கள் ஒன் றுக்கும் பயப்பட வேண்டாம்" என்றான் அவன். சற்று நேரம் பொறுத்து, சாவித்திரி, "மரணதாக மெடுத்து நாக்கு வறளுகிறதேடா; ஒரு சொட்டு ஜலமோ பாலோ குத்தக் கூடாதா? இப்படித் தவிக்கிறாளே!" என்றாள்.

"அத்திக் கொதிப்பில்லா இந்தப்பாடு படுத்துது; திராபகத் தண்ணி தேகத்திலுள்ள ஈரத்தை யெல்லாம் உறிஞ்சிவிட்டுது. இதோ, இந்த மருந்து கொடுத்தப்புறம் சாமப்பொளுது போனால், தண்ணியோ, வெந்நியோ, பாலோ, கஞ்சியோ, உங்க இட்டம்போ லெல்லாம் கொடுக் கலாம்." என்றான் பண்டிதன்.

"அடி பாவிகளா! அடி பாவிகளா!" என்று தன் உதடுகளையே நக்கிக்கொண்டு, மிகவும் ஈனஸ்வரத்தில் முனங்கினாள் கல்யாணி. அவள் பேச்சு, காதைக் கிட்டக் கொண்டுபோய் உற்றுக் கேட்டால்தான் தெரியும்படி இருந்தது. சற்று நேரத்துக்கெல்லாம், பண்டிதன் கொடுத்த மருந்தைக் குடிப்பதே வெகு சிரமமாய்விட்டது. பின்பு கல்யாணி சிறிது பொழுது கண்ணை மூடிக்கொண்டு மயங்கிக் கிடந்தாள்; தலைமட்டும் ஓயாமல் ஆடிக்கொண்டே

யிருந்தது. பாகீரதியம்மாள் முத்தையரையும் சாப்பிடப் போகச் சொன்னாள்; ஆனால் அவரதற்கு இணங்கவில்லை.

சாவித்திரி :—(மறுபடியும் தொட்டுப் பார்த்துவிட்டு) முட்டு வரைக்கும் குளிர்ந்து போச்சுதேடா பாவி! அம்மா, கல்யாணி! உனக்கு என்ன செய்கிறதம்மா? கண்ணைத்திற.

பண்டிதன் :—இந்த அரியூர் அம்மா எப்பமும் இப் படித்தான்! நீங்க சும்மா இரிங்க எங்கிறேனே.

கல்யாணி :—(திடீரென்று கனவுகண்டதுபோல் கண் ணைத்திறந்து நாலாபக்கமும் பார்த்துப், பின்பு சாவித் திரியை நோக்கி,) "இன்னும் வரலையா? இன்னும் வர லையா?" என்று கேட்டாள்.

சாவித் :—யார் வரலையா என்று கேட்கிறாய்? உனக்கு என்ன செய்கிற தம்மா?

கல்யாணி :—உங்க தம்பி?......உங்கதம்பி?

முத்தையர் :—இன்னும் வரக்காணோமே? நேற்றுக் காலையிலேயே தந்தி கொடுத்தது; சாயங்காலம் புறப்பட் டிருந்தால் அஸ்தமிக்க வந்திருக்க வேணுமே. புறப்பட வில்லையோ என்னவோ?

கல்யாணி :—அடபாவி!......அடபாவி!

பாகீரதியம்மாள் :—உனக்கு என்ன செய்கிறது, கல் யாணி? அதிக தாகமாயிருக்கா? ஜலம் தரட்டுமா?

சற்றுநேரம் ஒன்றுஞ் சொல்லாமலிருந்து, பின்பு, கல்யாணி, "என் குழந்தைகள் எங்கே? மன்னி,......என் குழந்தைகளைக் கூப்பிடுங்கள்" என்றாள்.

சாவித்திரி :—சாப்பிட்டுக்கொண் டிருக்கிறார்கள்; இது வரையும் இங்கேதா னிருந்தார்கள். எதுக்கு அவர்கள்?

கல்யாணி :—கூப்பிடுங்கள்........சீக்கிரம் கூப்பிடுங் கள்...என் பிராணன் போகப்போகிறது...கூப்பிடுங்கள்.

சாவித்திரி :—ஏதடியம்மா, உனக்கு என்ன செய்கிறது ? அடே சாமீ ! ஓடிவாடா ; குட்டியையும் கூட்டிக்கொண்டுவா, ஓடிவா, அம்மா கூப்பிடுகிறாள்.

சற்று நேரத்தில் கோபாலையரின் இரண்டு குழந்தைகளும், அவர் மைத்துனர் இருவரும், சில பெண்களும் வந்து சேர்ந்தார்கள். சாவித்திரியம்மாள், குழந்தைகளைத் தன் பக்கத்தில் இருத்தி, கல்யாணியம்மாள் கையை எடுத்து அவர்கள் மேல் வைத்து, " கல்யாணி ! சாமியும் குட்டியும் இதோ இருக்கிறார்கள், பார் " என்றாள்.

கல்யாணி :—இன்னும் வரலையா......இன்னும் வரலையா ?

சாவித்திரி :—இதோ இருக்கிறார்களே. இது தான் சாமி, இதுதான் குட்டி ; கண் நேராகத் தெரியவில்லையா ? மயக்கமா யிருக்கா ?

கல்யாணி :—உங்கதம்பி ?......உங்கதம்பி ?...

முத்தையர் :—இப்போ வந்து விடுவன் ; திருநெல்வேலிக்கு வந்தாச்சாம் ; இதோ வந்துவிடுவன்.

கல்யாணி :—ஆ!......வந்தாச்சா ?......எங்கே ?......எங்கே ?......

சாவித்திரி :—இதோ வரலாச்சு. உனக்கு என்ன செய்கிறது ?

கல்யாணி :—அடபாவி !......அடபாவி !

இதற்குள் சாவித்திரியும் மற்றும் சிலரும் கண்ணீர் வடித்து, மெதுவாய் அழத்தொடங்கினர் ; குட்டி, தன் அத்தை மடியிற் சாய்ந்தபடியே தூங்கிவிட்டாள் ; சாமி, பரக்கவிழித்துக்கொண்டு, பதறிப்போய் உட்கார்ந்திருந்தான் ; கல்யாணியம்மாளுடைய கை, குழந்தைகள் மேலேயே கிடந்தது ; கண்கள் மூடி யிருந்தன. தலை, முன் போல அவ்வளவு ஆடவில்லை ; அவள் தகப்பனார், முகமும் கையுமாய்ப் பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தார்.

"இப்பந்தான் உள்ளே போனவர் கொஞ்சம் விசையாய்ப் பிடிக்கிருரு!" என்ருன் பண்டிதன். சற்று நேரத்தில், கல்யாணி மறுபடியும் கண்ணைத்திறந்து, "இன்னும் வரலையா?......என்னெஞ்சு வேகாது..........வேகாது." என்ருள். இதைக்கேட்டு, இதுவரையும் மௌனமாய்க் கண்ணீர் வடித்துக்கொண்டிருந்தவர்கள், தேம்பி விசித்து அழத்தொடங்கினுர்கள். "ஐயோ! பாவம்! பிராணன் எல்லாம் அவன் மேலே" என்ருள், பாகீரதியம்மாள்.



கல்யாணி :—நீங்க சொல்லுங்கோ..........

சாவித்திரி :—(கண்ணீரைத் துடைத்துக் கொண்டு) என்ன சொல்லவேணும், அம்மா? கல்யாணி! கல்யாணி! யாருக்கு என்ன சொல்லவேணும்.

கல்யாணி :—இன்னொரு ஜன்மத்திலாவது......இன்னொரு ஜன்மத்திலாவது......உங்கதம்பிக்கு வாழ்க்கைப் பட்டு...

சாவித்திரியம்மாளால் துக்கம் பொறுக்க முடியவில்லை; ஒன்று பேசவும் நாவெழவில்லை.

பாகீரதியம்மாள் :– பலமான மருந்து கொடுத்திருக்கு: பிழைத்து விடுவாய் ; பயப்படாதே, கல்யாணி. அதோ! கவுளியடிக்கிறது ; தீபமும் புஷ்பிக்கிறது, நல்ல சகுனம்.

கல்யாணி கண்கள் மூடியே இருந்தன. சற்று நேரத்துக்குப்பின், அவள், "அவா மடியிலே......பிராணனை விட வேணும்......அவா மடியிலே......" என்றாள்.

தெருவாசலில் ஒரு குதிரைவண்டிச் சத்தம் கேட்டது ; அடுத்த நிமிஷத்தில் கோபாலையர் உள்ளே வந்து விட்டார். அவரைக்கண்டதும், சாவித்திரி, "அம்பீ!" என்றாள் ; மேற்சொல்ல முடியவில்லை. பாகீரதியம்மாள், "மாப்பிள்ளை! உமக்காகத்தான் தவிக்கிறாள். அவள் தலையை எடுத்து உம்முடைய மடிமேல் வைத்துக்கொள்ளும்" என்றாள். கோபாலையர், மெதுவாய் அப்படியே செய்து, கண்ணீர் தேக்கிய குரலில், "கல்யாணம்!" என்று அழைத்தார். அவர் மனைவி திடீரெனக் கண்களை திறந்து, சிறிதுநேரம் அவர் முகத்தை வெறித்து விழித்துப் பார்த்து, இதுவரையும் பேசின ஹீனஸ்வரமின்றி, ஸந்தோஷமான குரலில், "அத்தான்!" என்றாள் ; அதோடே சுவாசம் அடங்கி விட்டது.

இனியென்ன சொல்வது? மேல்விழுந்து அழுதார்கள் ; அடித்துக்கொண்டார்கள் ; முட்டினார்கள் ; மோதினார்கள் ; குழந்தைக ளிருவரும், "அம்மா! அம்மா!" என்று அலறியழுதனர். "இதற்குத்தானா நான் வந்தேன்! இங்கே கொண்டுபோவதாகத் தந்தியி லடித்திருந்தால், பாளையங்கோட்டைக்குப்போய் அலையாமல், இரண்டு மணி நேரத்துக்கு முன்னாவது வந்திருப்பேனே! கல்யாணம்! இன்னும் ஒரு வார்த்தையாவது சொல்லமாட்டாயா? 'அத்தான்' என்று கூப்பிட்டவள், வேறொன்றும் சொல்லவில்லையே! சாமியும் குட்டியும் "அம்மா! அம்மா! என்று அலறுவது உனக்குக் கேட்கவில்லையா?" என்று, கோபாலையர், முகத்திற் புடைத்துக்கொண்டு, பன்னிப் பன்னி அழுதார்.



## ஏழாவது அதிகாரம்.

கல்யாணியம்மாள் இறந்துபோய்ச் சில வருஷங்களாய்விட்டன. வைத்தியப் பரீக்ஷைதேறி, சென்னை ஆசுபத்திரியிலேயே கோபாலையர் வேலையாயிருந்தார். நாராயணையர் வீட்டுக்கு அடுத்த வீட்டிலேயே அவரும், அவர் குழந்தைகளும், சாவித்திரியம்மாளும் வசித்து வந்தார்கள். நாராயணையர் குழந்தைகளுடன் அவர் குழந்தைகளும் பள்ளிக்கூடத்தில் படித்து வந்தார்கள். வீட்டிலும் படிப்புச் சொல்லிவைக்கப்பட்டது; பெண் குழந்தைகள், சங்கீதமும் தையலும் கூடக் கற்று வந்தார்கள். தாயில்லாத குறையைச் சிறிதுமே உணராதபடி, சாவித்திரியம்மாளும் பத்மாவதியம்மாளும், கோபாலையர் குழந்தைகளைப் பேணிச் சீராட்டி வந்தனர்.

யார் என்ன சொல்லியும், சாவித்திரியம்மாள் பலவிதமாய்ப் போதித்தும், கெஞ்சியும், இடைவிடாது தூண்டியும், கோபாலையர் மறுபடியும் விவாகம் செய்துகொள்ளவில்லை. அவர் மாமனார் முத்தையர், தன் தம்பியின் பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளச் சொன்னார். "வயது பத்தாகிவிட்டது, அடுத்த வருஷம் ருதுவாய்விடுவாள்; ஒன்றுக்குள் ஒன்று, சௌகரியமா யிருக்கும்; தாயில்லாக் குழந்தைகளுக்கும் ஒரு தாரகமா யிருக்கும்" என்று, எவ்வளவோ அழுத்திச் சொன்னார். வேறு சில தனவான்கள், பெண்களைப் பெற்றுவிட்டுப் பரிதவிப்பவர், கோபாலையரின் செல்வத்தையும் உத்தியோகத்தையும் பார்த்து, இரண்டாயிரம் மூவாயிரம் கொடுத்துத் தங்கள் பெண்களைக் 'கன்னிகாதானம்' செய்து கொடுப்பதாக வருந்தி வேண்டினார்கள். ஒன்றுக்கும் அவர் இணங்கவில்லை. சாவித்திரியம்மாளின் தூண்டுதலின் பேரில் நாராயணையர் ஒரு நாள் கேட்டதற்கு, "நாணு! நீயுமா அவளைப் போல் பேசுகிறாய்? நமக்குள் பன்னிரண்டு வயதுப் பெண்கள் கிடைப்பதும் துர்லபம்; ஒரு சிறு பெண்ணை மணந்து கொலைசெய்தது போதாதென்று, இன்னும் ஒரு சிறு

பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளச் சொல்கிறாய்? அப்படிக் கின்றி, பத்துப் பதினொரு வயதில் ஒரு பெண்ணைக் கலியாணம் செய்துகொண்டு, ஐந்தாறு வருஷம் ருது சாந்தி செய்யாமல் வைத்திருந்தால்,—அவளைப் பெற்றவர்கள் அப்படிவைத்துவைக்க ஒருபொழுதும் சம்மதியார்கள்; ஒரு வேளை அவர்களே சம்மதித்தாலும்,—நான் சிரஞ்சீவி யில்லையே? திடீரென்று எனக்கேதாவது நேர்ந்தால், அந்தப்பெண்ணின் கதி என்னவாகும், யோசித்துப்பார். அல்லது, எனக்கு வயதிற் பொருந்திய ஒரு விதவையை விவாகம் செய்து கொள்ளலாமென்றால், அக்கா சம்மதிப்பளா? குட்டிக்கு அப்புறம் வரன் கிடைக்குமா!'' என்று பதறிச் சொன்னார்.

நாராயணையர் :—அது நிஜம்தான்; சாவித்திரியே சம்மதித்தாலும், உன் பெண்ணுக்கு வரன் கிடையாது; இப்பொழுது இரண்டாயிர மானால், அப்புறம் ஐயாயிரம் கொடுத்தாலும் நல்ல வரனாகக் கிடையாது.

கோபா :—நானும் அதுதான் யோசித்துக்கொண்டிருக்கிறேன். குட்டியை மட்டும் கட்டிக்கொடுத்து விட்டால், பின்பு என் இஷ்டம்போற் செய்யலாம். சாமியைப் பற்றி விசாரமில்லை: அறுபது எழுபது வயசுக் கிழவர்களுக்கும், குஷ்டரோகம் பிடித்த பிள்[illegible] தாய்ப் பெண்கள் கிடைக்கும். இந்த நா[illegible] யில்லை, மூன்று விதவைகளை நான் கலியாணம் செய்து கொண்டாலும், அல்லது ஒரு கிறிஸ்துவச்சியையோ துரைசானியையோ மணந்து கொண்டாலும் கூட, பணமுள்ளவரையும், அவனுக்கு மட்டும் 'நான், நீ,' என்று பெண் கொடுக்க வருவார்களென்பது நிச்சயம்.

நாரா :—ஆனால் குட்டியை மட்டும் குழந்தைப் பருவத்திலேயே விவாகம் செய்து கொடுக்கலாமா?

கோபா :—அதுவும் யோசனைதான்: ஆனால், குட்டி விஷயத்தில் என் அக்காளும் ஒட்டாள், என் மாமனாரும்

கன்னிகாதான வயது கழிந்துவிட்டது; இன்னும் தாம
திக்கலாகாது' என்று, அடிக்கடி நெருக்கிக் கொண்டே
இருக்கிறார். உன்னிடம் இதைப் பற்றி நான் சொல்ல
வில்லை: வாரம் தப்பினாலும் அவர் கடிதம் தப்புகிறதில்லை.

நாரா:—ஆனால், ருதுவானபின்பே விவாகம் என்ப
தெல்லாம் வீண் கனவுதானோ?

கோபா:—அப்படித்தான் தோன்றுகிறது. அக்கா
ளின் உபத்திரவமும் நாளுக்கு நாள் அதிகமாய்க் கொண்
டே வருகிறது. என் மாமனார் எழுதுவது அவளுக்குத்
தெரியாது; தெரிந்தால், இன்னும் என்னை விடமாட்டாள்.

நாரா:—குட்டிக்கு இப்பொழுதென்ன,—

கோபா:—பத்தாவது வயதே நடக்கிறது. ஆலை கல்
லூர்ப் பண்ணையார் குமாரனைப் பற்றித்தான் என் மாமனார்
முக்கியமாய் எழுதுகிறார். அவன் பங்குக்கு மட்டும் [illegible]
ரத்துக்குக் குறைவில்லையாம். வயது பன்னிரண்டே.

நாரா:—படிப்போ?

கோபா:—பண்ணையார் பிள்ளை, பன்னிரண்டு [illegible]
என்றால் தெரியாதா? ஏதோ, முதல் பாரத்தி[illegible]
லேயே வாசித்துக்கொண்டிருக்கிறான். [illegible]
உருக்கூடுவது பிள்ளையாரப் முடி[illegible], [illegible]
யுமோ, யார் கண்டது? நம்ம குட்டி [illegible]
அவன் முதல் பாரம்! கலியாணம் [illegible]
திலேயே அழைத்து வைத்துக்கொண்டு, [illegible]
படிப்பிக்கலாமென்று எழுதுகிறார். அதிருக்கட்டும், [illegible]
என் கண்ணைத் துடைப்பதற்காகத் தான்; [illegible]
அவருக்கு முக்கியம்.

நாரா:—ஜமாய் பின்னே! பன்னிரண்டோ [illegible]
பெரும்பண்ணை யாகட்டும். ஒருவேளை உன் மா[illegible]
தலையெடுத்து ஒரு ஜமீனையும் வாங்கலாம்.

கோபா:—போடா, கேலிபண்ணாதே. என் மனோ[illegible]
விசாரத்தை அறிந்தால், நீ இப்படிப் பேசமாட்டாய். அவ[illegible]

எழுதுவதும் ஒருசமயத்தில், சில அம்சங்களில், சரி என்றே தோன்றுகிறது; சில சமயங்களில், வேறு சில விஷயங்களைக் கவனித்தால், அது முழு மூடத்தனம் என்றே தோன்றுகிறது. இது தீராத தர்ம சங்கடந்தான். இந்த இரண்டுங்கெட்டான் காலத்திலே வாழ்கின்றவர் பாடு கஷ்டந்தான்.

நாரா:—யார்தான் இரண்டுங்கெட்டான் காலத்திலே வாழாதவர்? ஒவ்வொரு தலைமுறையோரும், தலைமுறை தலைமுறையாக, இப்படியே நினைப்பதுதான் உலக வழக்கம். நம்முடைய முன்னோர்கள், இவ்வித தர்ம சங்கடங்கள் எதுவுமின்றி, அலையில்லாத குளம்போல அமைதியாய், ஒரே ரீதியாய் வாழ்ந்து வந்தார்கள் என்று, நாம் எண்ணுகிறோம். நம்முடைய பின்னோர்கள், நம்மையும் அப்படியே மதித்து, தாமே தர்ம சங்கடங்களுக் குள்ளாகி வாழ்வதாகவும், தம் காலமே இரண்டும்கெட்ட காலமென்றும் நினைப்பார்கள் என்பது, நிச்சயம். உலகம் நாளுக்கு நாள், தலைமுறைக்குத் தலைமுறை, அபிவிருத்தி யடைந்து வருகிறது என்பதற்கு, இதுவே சாக்ஷி.

கோபா:—உலகம் எக்கேடும் கெடட்டும்! என்பாடு இப்பொழுது பெரிய சங்கடமா யிருக்கிறது. என் மாமனார் அலட்டுதலுக்கும் அக்காள் இமிசைக்கும் இணங்கி, இப்பொழுதே, வருகிற தைமாதத்திலே, குட்டியின் கலியாணத்தை நடத்தி விடலா மென்றே, அநேக வேளைகளில் தோன்றுகிறது.

நாரா:—மனசு எந்தப்பக்கம் சாய்கிறதோ அந்தப் பக்கத்துக்கு அநுகூலமான காரணங்களும் சாக்ஷிகளும் அதிகம் கிடைக்கும் என்பது நிச்சயம். இதற்கும் உன் புனர் விவாக விஷயத்துக்கும் ஏதாவது சம்பந்த முண்டோ? என்ன, பதில் ஒன்று மில்லை?

கோபா:—என்ன பதில் சொல்கிறது? என் மனமே

எனக்குத் தெளிவாயில்லை. நானும் தான் எத்தனை நாள் இப்படியே இருப்பேன்?

"இந்த ஜன்மத்திலே விடுதலை உண்டு!"

என்று ஒருவன் பாடவில்லையா? எனக்கு மட்டும் இந்த ஜன்மத்திலே விடுதலை இருப்பதாகத் தெரியவில்லை."

கடைசி வார்த்தைகளைப் பேசும்பொழுது, கோபாலையர், மிக்க விசனத்தோடு, திடீரென்று கண்ணீர் தேக்கிய குரலிலே பேசினதால், நாராயணையர் சிறிது திடுக்கிட்டுப் பிற்பாடு: "ஏன், ஏன் கோபு, உனக்கென்ன குறை? தெய்வ சங்கல்பம், அவள் தவறிப் போய்விட்டாள். மீண்டும் ஒருத்தியை உன்மனம்போல மணந்துகொண்டு, நீ ஸந்தோஷமாய் வாழவேண்டு மென்றே நாங்கள் எல்லோரும் ஆசைப்படுகிறோம். அதைப்பற்றி உன்னிடம் வற்புறுத்திப் பேசவேண்டு மென்று சாவித்திரி சொன்னதனால்தான், இன்று நான் அந்தப் பேச்சை மீண்டும் எடுத்தேன். நீயோ, இந்த விஷயத்தைப் பற்றி மட்டும் தாராளமாய் மனந்திறந்து பேசுவதில்லை. உன் மனத்துக்குள்ளிருந்து ஏதோ உறுத்துவது மாத்திரம் தெரிகிறதே ஒழிய, அது இன்னதென்று எங்களுக்குத் தெரியவில்லை. நீ சொன்னால், எங்களால் கூடியவரை உன் ஸந்தோஷத்தையே கோரிநடப்பதில் என்ன சந்தேகம்?" என்றார்.

கோபா:—நீ ஒரு கதை கேட்டிருக்கிறாயா, நாணு?

நாரா:—நானா? எத்தனையோ கதை கேட்டும் இருக்கிறேன்; சொல்லியும் இருக்கிறேன். நீ சொல்ல வரும் இந்தக் கதை என்ன? சொல்லு, கேட்போம்.

கோபா:—ஒருவன் இறந்தபின், ஸ்வர்க்கத்திற்குள் நுழைய விரும்பி, வாசற் காப்போனுடன் மன்றாடினான். 'நீ பாபி; உன்னை உள்ளே விடமுடியாது' என்றான், வாசற்காப்போன். 'நான் பாபி என்பது உண்மைதான்; ஆனால், வேண்டுமென்று நான் பாபங்களை விரும்பிச்

செய்யவில்லை. என் கஷ்டங்களினால் அவற்றைச் செய்ய நேர்ந்தது. நான் சம்சாரத்தில் பெண்டு பிள்ளைகளுடன் வாழும்பொழுதும், அவர்களின் நிமித்தம் அதிகம் கஷ்டப் பட்டேன்; என் பெண்டாட்டி இறந்த பின்னும் அதிக[illegible] கஷ்டப்பட்டேன். அதனால் நான் பட்ட [illegible] இரங்கியேனும், என்னை உள்ளே [illegible] அவன் மீண்டும் மன்றாடவே, வாசற்கா[illegible] உள்ளே விட்டுவிட்டான். பிறகு, மற்றொரு [illegible] 'என்னையும் உள்ளே விடு' என்றான். 'நீயும் பாபி, [illegible] உள்ளே விடமுடியாது' என்றான் ஸ்வர்க்க வாசல் காவலாளி. 'அவனை மட்டும் விட்டாயே; அவன் ஒரு முறையே கலியாணம் செய்து கொண்டு கஷ்டப் பட்டான். நானோ, ஒன்றின் பின் ஒன்றாக மூன்று முறை கலியாணம் செய்து கொண்டு, மிகவும் கஷ்டப்பட் டிருக்கிறேன்" என்றான் இவன். இதைக்கேட்ட வாசற்காப்போன், கதவைப்பூட்டி விட்டு: "போ! போ! இதென்ன ஸ்வர்க்கம் என்று நினைத்தாயா? அல்லது பயித்தியக்காரரை அடைத்து வைக்கும் ஆசுபத்திரி என்று நினைத்தாயா?" என்றுசொல்லி அவனைத் துரத்திவிட்டான். இதுதான் என் கதை. ஒரு முறை பட்டும், அநுபவித்தும், புத்திவராதவன் பயித்தியக்காரனே.

நாரா:—நீ ஒரு பாட்டுக் கேட்டிருக்கிறாயா, கோபு?

கோபா:—சொல்லு, கேட்கிறேன்.

நாரா:—"பர்த்தாவுக் கேற்ற பதிவிரதை யாமாகில்
எத்தாலும் கூடி இருக்கலாம்——,"

கோபா:—போதும் போதும்; கேட்டிருக்கிறேன் நான். ஆனால், "ஏற்ற பதிவிரதை" வாய்ப்பதற்கு யார் பொறுப்பாளி? முதல்தாரமே அப்படி யொரு பெண்டாட்டி கிடைத்து, அவளுடன் உண்மைக் காதலின்பத்தை அநுபவித்தவன், அவள் இறந்து விட்டால், மற்றொருத்தியை நாடவேமாட்டான். அப்படிக்கின்றி, முதலிலேயே 'ஏறு

கோபா:—என்ன பேசுகிறார்கள்?

நாரா:—நீ என்னிடத்தில் இதைப்பற்றிப் பேசாத தால், எனக்குப் பிறர் சொல்வதைச் சொல்லவும் கூசுகிறது.

கோபா:—இதிலென்ன, சும்மா சொல்லு.

நாரா:—உன்னுடன் வாசித்த ஒரு சட்டைக்காரப் பெண்ணை நீ வைத்துக் கொண்டிருக்கிறாயாம். குட்டிக்குக் கலியாணமான பின்பு, அவளையே நீ கலியாணம் செய்து கொள்ளப் போகிறாயாம். அதனால் தான் இப்பொழுது கலியாணம் வேண்டாமென்று, வந்த பெண்களை யெல்லாம் தள்ளி விடுகிறாயாம். இன்னும் பலர் பலவாறு பிதற்று கிறார்கள். அதையெல்லாம் நான் நம்பவில்லை.

கோபா:—ஆனால் இதை நீ நம்புகிறாயா?

நாரா:—அப்படியில்லை. இதில் ஒன்றும் அசம்பாவித மாகத் தோன்றவில்லை. இந்த விஷயத்தில் உன் அபிப்பிரா யமும் என் அபிப்பிராயமும் வேறென்பது தெரிந்த விஷ யமே. முன்பு, நீ உன் மனைவி உயிரோடிருக்கும் பொழுதே, சாலாவை வைத்துக்கொண்டிருந்தது நான் அறிந்த விஷ யமே. எனவே, இது ஒருவேளை உண்மையா யிருக்கலா மென்றே எண்ணினேன்.

கோபா:—அக்காள் காதுவரை இந்த சங்கதி எட்டி யிருக்குமோ ?

நாரா:—ஆம், அவளுக்கும் தெரியும்.

கோபாலையர், பெருமூச்சுவிட்டு விட்டுக் கொஞ்சநேரம் ஒன்றும் மேல்பேசாது மௌனமா யிருந்தார். நாராயணையர், தான் அழுத்திக்கேட்கக் கூசினவராய், அவர் பதிலை எதிர் பார்த்துச் சும்மா இருந்தார். இதற்குள், கோபாலையர் மக னும் மகளும், "தாத்தா வந்து விட்டார்!" "தாத்தா வந்து விட்டார் !" என்று சந்தோஷக் கூக்குரலிட்டுக் கொண்டு, இவர்கள் பேசிக்கொண்டிருந்த அறைக்குள் ஓடி வந்தார் கள். உடனே கோபாலையரும் நாராயணையரும் எழுந்து பண்ணை முத்தையரை வரவேற்கச் சென்றனர்.

## எட்டாவது அதிகாரம்.

பண்ணை முத்தையர் திடீரெனப் புறப்பட்டு வந்தது முக்கியமாய்த் தன்னுடைய பேர்த்தியின் கலியாணத்தைக் குறித்தே. அவர் இளையமகன், கோபாலையரின் மைத்துனன், வெங்கிட்டு என்ற வேங்கட கிருஷ்ணனும், அவருடன் வந்திருந்தான். ஒருவரை யொருவர் க்ஷேமம் விசாரித்தானபின், எல்லாரும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கும் பொழுதுதான், அவர் புறப்பட்டு வருவதாகத் திருநெல்வேலி யிலிருந்து முதல்நாள் அனுப்பிய தந்தி வந்து சேர்ந்தது! அதன் பிறகுதான், 'மாப்பிள்ளை கோபாலையர் தன்னிடம் உபேக்ஷையாயில்லை, வேண்டுமென்றே தன்னை அவமதித்து விடவில்லை' என்பது, அவருக்கு ருஜுவாயிற்று. எல்லோரும் சேர்ந்து, தந்தி கொணர்ந்தவன்மேல் பழியைச் சுமத்தி, அவனைக் கோபித்தார்கள். ஏதாவது சுபசமாசாரமா யிருந்தால் நாலணா இனுமாவது கிடைக்குமென்று எதிர்பார்த்துவந்த அவன், தான் தாமதம் செய்யவில்லை யென்று முணுமுணுத்துக் கொண்டு போய் விட்டான். பின்பு கலியாணப் பேச்சுத் தொடங்கிற்று.

"ஓய் நாராயணையரே! நீர் நம்ம மாப்பிள்ளைக்கு அத்யந்த ஸ்நேகிதர் ஆச்சே, நீர்தான் சொல்லும்: நம்ம பெரியவாள் குறிப்பிட்ட கன்னிகாதான வயசெல்லாம் கடந்து போய், குட்டிக்கு வருகிற பங்குனிக்குப் பத்து நிறையப் போகிறதே, இன்னும் ஒரு தாலியைக் கட்டாமல் வைத்திருக்கலாமா? நாமெல்லாம், என்ன, இன்னும் முழு வெள்ளைக்காரர்கள் ஆகிவிடவில்லையே?" என்றார் முத்தையர். "வாஸ்தவம் தான்" என்று, நாராயணையர் கொஞ்சம் மெதுவாய் இழுத்துப் பேசுமுன்,—"அதவா, இதைவிட நல்லவரன் நமக்குக் கிடைக்கப் போகிறதா? பையன் பங்குக்கு மாத்திரம் ஒரு லகாரத்துக்குக் குறைவேயில்லை" என்று மேல் கூறினார் பண்ணையார்.

தன்னுடைய ஆசாரச் சீர்திருத்தப் போதனைகளுக்

குச் சமயமும் இடமும் இதல்லவென்று நாராயணையர் தெளிவாய் அறிந்துகொண்டு, மெதுவாய் வெளிக்கிளம்பும் வழியைத் தேடலானார்; ஆனால் அவர் நண்பர் அவரை விடுகிற வழியாயில்லை. வீட்டுவேலை கையொழிந்தபோதெல்லாம் வந்து, சாவித்திரி யம்மாளும், கலியாணத்துக்கு அநுகூலமாகவே பேசிப்போனாள். வெங்கிட்டுவோ, மகா வெகுளி; வாயாடி; கடைசிப்பிள்ளை யானதால், தன் தகப்பனாரிடத்தில் பயம் மரியாதை ஏதுமின்றி, அருமையாய் வளர்ந்தவன்; குதர்க்க புத்தியும் வாய்த்துடுக்கும் உள்ளவன்; அடக்க வணக்கங்களை அவமதித்து நடப்பவன். அவன் கோபாலையரைப்பார்த்து. "உமக்கு சௌகரியம் தானே, அத்தம் பியாரே! குட்டியைக் கட்டிக் கொடுத்தாய்விட்டதென்றால், அப்புறம் உம்ம இஷ்டம் போலெல்லாம் ஷோக்காய் இருக்கலாம். ஒரு பயலை கவனிக்க வேண்டாம்; ஒன்றுக்கும் அஞ்ச வேண்டாம்; துரைசானியோ, துலுக்கச்சியோ, யாரை வேண்டுமானாலும்,—"

"என்ன பேச்சிது!" என்று, நாராயணையரும், "சீ! சும்மா இரடா; நீ ஒன்றும் சொல்லாதே" என்று, பண்ணை முத்தையரும், அவன் வார்த்தைகளைத் தடுத்துப் பேசியடக்கினர். தன் மைத்துனன் வார்த்தைகளைக் கேட்டவுடன், கோபாலையர் முகஞ்சிவந்து கோபங் கொண்டார்; சாவித்திரியம்மாள், வெட்கமடைந்து, தலை குனிந்து, உள்ளே போய்விட்டாள். கோபாலையர் கண்களில் கோபாக்கினியோடு கூடச் சிறிது கண்ணீரும் தளும்பிற்றே யன்றி, அவர் உதடுகள் ஒருவிதமாய்த் துடிதுடித்து அசைந்தும், அவர் ஒன்றும் பதில் பேசவில்லை. சிறிது நேரம் எல்லாரும் திகைத்து மௌனமா யிருந்தனர். பிறகு, அஞ்சா நெஞ்சினனான வெங்கிட்டு, மீண்டும்: "நான் என்ன சொல்லி விட்டேன், இல்லாததையும் பொல்லாததையும்? இந்தக் குழந்தை விஷயத்திலே எங்களுக்கில்லாதது இவருக்கென்ன வந்து விட்டது?

அக்காள் போய்விட்டால், அப்புறம் எங்களுக்கு பாத்ய தையே இல்லையா? எல்லாம், குட்டியின் க்ஷேமத்தையும் லாபத்தையும் உத்தேசித்துத் தானே அப்பா சொல்லு கிறார்கள்? தெருக்கேலி தேர்க்கேலி திருநாட்கேலி யாக, ஊரெல்லாம் சிரிப்பாய்ச் சிரிக்கிறதை, நான் சொன் னல் மட்டும் பொல்லாப்பு வந்துவிட்ட தாக்கும்? எல்லாம், உள்ளதைச் சொன்னல் நொள்ளாப்புத்தான்!'' என்றான்.

கோபாலையர், தன் கோபத்தையும் கிலேசத்தையும் ஒருவாறு அரிதில் அடக்கிக்கொண்டு: "என்ன உள்ளது, நீ என்னதைக் கண்டுவிட்டாய், இந்த மாதிரி உளறு கிறாய்?'' என்று கேட்டார்.

"எல்லாம் கண்டும் கேட்டும் தான் இருக்கு; நீர் யாரோ ஒரு துரைசானி முண்டையை வைத்துக்கொண் டிருக்கிறீராம்; அதுதான் 'இரண்டாம் தாரம் கலியாணம் செய்துகொள்ள மாட்டேன்' என்கிறீராம்; நாடெல்லாம் பறையறைகிறது; சென்னப்பட்டணத்து வண்டோலங்க ளெல்லாம் எங்களுக்குத் தெரியாதா, என்ன?'' என்று வெங்கிட்டு பதிலுரைத்தான்.

இதைக் கேட்டவுடன், கோபாலையரின் கோபம் முன் னிலும் அதிகம் பொங்கிற்று; ஆனல் ஒரு பதிலும் பேச அவருக்கு நாவெழ வில்லை. வெங்கிட்டுவின் குரலும், அவன் பேசும் விதமும் உச்சரிப்புக்களும், கலியாணியின் குரல் பேச்சுக்கள் போலவே யிருக்கும். அவன் இப் பொழுது தன்னைப் பழித்துக் கூறியதானது, அவளே உயிர்பெற்று வந்து பேசுவது போலவே அவருக்குக் கேட் டது. அவர் கண்களி னின்றும் இரண்டு சொட்டு நீர் விழுந்ததன்றி, பதிலாக வாய்ப்பேச் சொன்றும் வெளி வர வில்லை.

உண்மை எவ்வாறு யிருப்பினும், தான் வந்த காரியம் சித்தி பெறுவதற்கு வழி யிதல்ல, என்றுணர்ந்த முத்தை யர், தன் மகனை மீண்டும் அதட்டி யடக்கி, பேச்சுப்

8

போக்கை வேறு வழியிலே திருப்பினார். ஆனால் வெங்கிட்டுவின் விஷமத்தினால், கல்யாணப் பேச்சு அதிகம் மேற்போகவில்லை. சற்று நேரத்துக்குப் பின், நாராயணையர், தனக்கு நேரமாகி விட்டதென்று புறப்பட்டார்; கோபாலையரும், தனக்கு ஆசுபத்திரிக்குப் போகவேண்டுமென்று புறப்பட்டு விட்டார். வெங்கிட்டுவின் பேச்சுத் துடுக்கினால், அவனுக்கும் கோபாலையருக்கும் பெரிய மனஸ்தாபம் ஏற்பட்டுவிடுமென்று, நாராயணையரும் சாவித்திரியம்மாளும் அஞ்சினார்கள்; ஆனால், அப்படியொன்றும் நிகழவில்லை. அவன் விஷயத்தில், கோபாலையர் இவ்வளவு பொறுமை செய்ததன் காரணத்தை ஊன்றி நோக்கின், ஆச்சரியத்துக்கு இடமிராது: முதலாவது, அவன், பய மறியாத இளங்காளை, கள்ளம் கபடற்றவன்; இரண்டாவது, அவனுடைய குரலும் பேச்சும் சாயலுமே, அடிக்கடி, கலியாணியை அவருக்கு நினைப்பூட்டின. இதனால், அவன் மீது அவருக்குக் கோபம் நீடித்து நிற்கவில்லை; அவனும் அவரிடம் உண்மையில் பக்ஷமுள்ளவனாகவே இருந்தான். இவ்வாறாக, மாப்பிள்ளைக்கும் மைத்துனனுக்கும் உள்ளூரச் சிநேகமும், பரஸ்பர வாஞ்சையும் உண்டு.

கோபாலையரும் நாராயணையரும் போன பின்பு, முத்தையரும் வெங்கிட்டுவும் ஸ்நாநம் செய்து சாப்பிட்டார்கள். சாவித்திரியின் உதவி முக்கியமானது, அவள் பேச்சைக் கோபாலையர் சாதாரணமாய்த் தட்டமாட்டார் என்பது, முத்தையருக்குத் தெரியும்; தான் உத்தேசிப்பது போலவே தன் பேர்த்திக்குக் கலியாணம் செய்வது, அவளுக்குச் சம்மதம் தான் என்பதும் தெரியும். அம்மட்டோடு நின்று விடாமல், இன்னும் தன் பக்ஷமாக அவள் முனைந்து வலிந்து பேசிக் கோபாலையரை இணங்கச் செய்ய வேண்டுமென்று கருதி, சாப்பிடும் பொழுது, முத்தையர், மீண்டும் அவ்விஷயத்தைப் பற்றிப் பேசலானார்.

முத்தையர்— மணி என்றால் மணிபோ லிருக்கிறான் பையன்; அவன் பங்குக்குமட்டும் ஒரு லகாரத்துக்குக் குறை யில்லை. நம்ம குட்டிக்கு இதைவிட நல்லவரன் கிடைக்கவே கிடைக்காது. அடுத்த ஊர்; அறிந்த மனுஷி யாள்; இந்தத் தை தப்பக்கூடா தென்கிறார்கள். எத்தனை யோ பேர், 'நான்' 'நீ' என்று, பெண்களை வைத்துக் கொண்டு காத்திருக்கிறார்கள் அவனுக்காக.

சாவித்திரி— அம்பிக்கு அதெல்லாம் தெரியாதா, தெரியுமே. அவனுக்கும் அரைமனது, முக்கால் மனது சம்மதந்தான். நாராயணையரும் அவனும் இன்னும் சில பேரும் என்ன என்னமோ சபதம் செய்திருக்கிறார்களாம்: தங்கள் பெண்கள் பெரியவர்க ளாகவிட்டுத்தான் கலியா ணம் செய்துகொடுக்க வேணுமாம்.

வெங்கிட்டு— இதென்ன, நடக்கிற காரியமா? அப்பு றம் யாருக்குக் கலியாணம் பண்ணிக் கொடுக்கிறது?

சாவித்— அதுதான் நானும் சொல்லுகிறேன். எல்லாம் இசைந்து விடுவன்.

முத்தை— ஒருவேளை நாராயணையர் தடுப்பரோ?

சாவித்— இவனுக்கு இஷ்டமானால், அவர் குறுக்கே நிற்க மாட்டார்; ஆனால், அவரைக் கேளாமல் இவன் நடக்கவுமாட்டான்.

வெங்கிட்டு—எப்படியாவது, இதை முதலிலே முடித் துக் கொள்ள வேணும். அப்புறம், அத்தம்பியாருக்கும் நம்ம வழியிலேயே ஏற்பாடுசெய்து, அதையும் முடித்து வைக்க வேணும்.

சாவித்— அதென்னவோ, ஒரே பிடிவாதமா யிருக் கான். யார் என்ன சொன்னாலும், கேட்கிற தில்லை. நாராய ணையருக்கும் அப்படிச்செய்வது இஷ்டம்தான். ஆனால் இதில் மட்டும் இவன் ஒரே முறண்டா யிருக்கான்.

முத்தை— ஆனால், ஊரிலே,—சொல்லிக் கொள்கிறது, —நிஜம், தானே?

இந்தக் கேள்விக்குச் சாவித்திரி உடனே பதில் சொல்ல வில்லை. வெங்கிட்டு மட்டும்: "பின்னை என்ன பொய்யா ஊரெல்லாம் பறையறைகிறது? ரயிலிலே வந்த டாக்டர் ஒருத்தர், நாம் இன்னார் என்று தெரியாமல், அகஸ்மாத் தாய்ச் சொல்ல வில்லையா?" என்றான்.

முத்தை— அது எப்படியானாலும் சரி: நீ தாறுமாறாய் உளறி, அவனுக்கு வீணில் கோபத்தை உண்டு பண்ணாதே; நாம் வந்த காரியம் கெட்டுப்போம். அவன் என்ன, பச்சைக் குழந்தையா, பாலனா, நாம் கண்டிக்கிற தற்கு? சாவித்திரி! நீ மாத்திரம் கொஞ்சம் நல்ல மனசு வைத்து, அழுத்திச் சொன்னால், 'இப்படித்தான் செய்ய வேண்டும், இந்த வரனை விட்டுவிடக் கூடாது' என்று கட் டாயப் படுத்தினால், காரியம் நடக்கும்.

சாவித்திரி, தனக்கு அது முழுச் சம்மதமே யென் றும், தன்னா லானமட்டும் சொல்லுவதில் தடையில்லை யென்றும், பதில் சொன்னாள்.



## ஒன்பதாவது அதிகாரம்

ஆசுபத்திரி வேலை முடிந்தவுடன் நேராக வீடு திரும் பாது, டிராம்வண்டி யேறி, கோபாலையர் வேப்பேரி சென் றார். நடுவழியிலே வண்டியை விட்டிறங்கி, ஒரு முடுக்குத் தெருவில் திரும்பி, தெருவின் மத்தியி லுள்ள ஓர் ஓட்டு வீட்டுக்குள் நுழைந்தார். அவ் வீட்டு வராந்தாவில் நாலைந்து பூத்தொட்டிகள் இருந்தன; வெளித் தூணில் மாட்டியிருந்த பெயர்ப் பலகையினால், அவ்வீடு, மிஸ்ஸிஸ் மூடி என்ற மருத்துவச்சி குடியிருப்பது என்று துலங் கிற்று. கோபாலையர் போய்ச் சேரும்போது, வெளிவராந் தாவில் ஒரு வேலைக்காரி நின்றுகொண்டிருந்தாள். அவள், பறைச் சாதி; வயது முப்பதுக்கு மேலிராது; வெள்ளை வெளேலென்ற சேலையும், பச்சைப் பூ வேலைசெய்த சிவப்புச் சீட்டிரவிக்கையும் உடுத்து; கைகளில் பலவர்ணக் கண்ணாடி

வளையல்களும், கழுத்தில் பொய்மினுக்குப் பொன் மாலையும், காதில் சாயச் சுருட்டோலையும், கை கால் விரல்களில் நெளி மோதிரம் மெட்டிகளும் அணிந்து; தன் இயற்கை நிறத்துக்குத் தோற்பதை விளக்குவதற் கென்றோ, நெற்றியில் கருஞ்சாந்துப் பொட்டிட்டு; தலைமயிரை வாரி வகிர்ந்து சவரியுடன் சேர்த்துச் செருகி முடித்து; வாய் நிறையத் தாம்பூலமும் புகையிலையும் கன்னங்கள் புடைக்க மென்று, வெகு ராங்கிக்காரியாய் இலங்கினாள். கோபாலையரைக் கண்டவுடன், சளப்பென்று பூத்தொட்டிக்குள் துப்பிவிட்டு, நெற்றியைத் தொட்டுச் சலாம் செய்து, சிரித்த முகத்துடன்: "ஐயரைக் காணவே யில்லையே? மிசி இப்பம் தான் வெளியே போச்சு; இன்னு வந்திடரேன் என்னு சொல்லிட்டுப் போச்சு." என்றாள்.

"அப்படியா! எங்கே போனாள் தெரியுமா?" என்று கோபாலையர் கேட்டார்.

"அண்டைச் சந்திலே, பாப்பார வீட்டிலே, ஆருக்கோ சுகமில்லையாம்; வந்து கூப்பிட்டாங்க, இப்பந்தான் போச்சு. சின்ன மிசியும் ஊரி லில்லை. நான் போயிப் பாத்து வாரேன், நீ உள்ளே போயிரு" என்று பதில் சொல்லி விட்டு, அவள் வேகமாய் வெளியேறினாள்.

"நீயும் போய்விட்டால் எப்படி, பொன்னி? நான் அதிகம் காத்திருக்க முடியாது, போகவேண்டுமே" என்றார், கோபாலையர்.

"இன்னு நொடிப் பொழுதிலே வாரேன்" என்று சொல்லிக்கொண்டே அவள் போய்விட்டாள்.

கோபாலையர் வீட்டுக்குள் சென்று, மூன்றுந் தரமான சிலமேஜை நாற்காலிகளும், ஒரு பழைய பிரம்புச் சோபாவும் போட்டிருந்த தலைக் கூடத்திலே, ஒரு நாற்காலியில் உட்கார்ந்து, தலைப்பாகையைக் கழற்றி மற்றொரு நாற்காலியின் மீது வைத்துவிட்டு, கைக்குட்டையை எடுத்து முகத்தைத் துடைத்துக்கொண்டு, சிறிது நேரம் தன் சிந்தனையில் ஆழ்ந்தவரா யிருந்தார். பிறகு வாசலை எட்டிப் பார்த்து

விட்டு, அக் கூடத்தி லுள்ள சாமான்களையும் சுவரில் மாட்டி யிருந்த விவிலிய புராண சம்மந்தமான படங்களையும் வேறு வேலையின்றிப் பார்த்துக்கொண் டிருக்கையில், ஒரு மூலையி லிருந்த எழுது மேஜையின் மேல் வைத்திருந்த ஒரு படம் கண்ணுக்குத் தட்டுப்படவே, ஆச்சரியத்தை யும் சந்தோஷத்தையும் அடைந்தவராகி, விரைந்து சென்று, அந்தப் படத்தைக் கையி லெடுத்து உற்றுப் பார்க்கலானார். அந்தப் படம் இருபத்தைந்து வயதுக்கு மேலில்லாத ஒரு துரைமகளின் படம்போ லிருந்தது. ஆனால், முகச் சாயலையும் களையையும் பார்த்தால், அங்கி லேயப் பெண்ணல்ல, இந்தியப் பெண்ணே என்று தோன் றிற்று. காதணி யொன்றும் இல்லையெனினும், காதில் குத்தப்பட்ட துளைகள் இந்த அநுமானத்தைப் பலப்படுத் தின. ஆடையும் தலையலங்காரமுமோ, துரைமகளையே குறித்தன. சந்தேகம் நமக்கே யன்றிக் கோபாலையருக் கில்லை. "எப்பொழுது பிடித்த படம் இது?" என்று, அவர் மகிழ்ந்து கூறி ஆச்சரியப்பட்டது மன்றி, இரண்டு மூன்று தரம், அந்தப் படத்தைக் கண்ணில் ஒற்றியும் முத்தமிட்டும் அருமை பாராட்டினார். அந்தப் புகைப் படத்தைப் பிடித்தவனது பெயரும் விலாசமும் நுண்ணிய அச்செழுத்தில் கீழே ஒரு மூலையில் குறித்திருந்ததைக் கவனித்து வாசித்து, தம் அங்கிப் பையிலிருந்து குறிப் புப் புஸ்தகத்தை எடுத்து, அதில் அவற்றைக் குறித்துக் கொண்டார்.

இதற்குள் அந்த வீட்டு வாசலில் ஒரு ரிக்ஷாவண்டி வந்து நிற்க, அதிலிருந்து மிஸ்ஸிஸ் மூடி தோற்பையும் கையுமாக இறங்கி உள்ளே வந்தாள்.

"குட் ஈவனிங், மாதாம்!" என்று கோபாலையர் உல் லாசக் குரலில் சொன்னதற்கு, அவள், "ஹல்லோ கோ பால்! இந்த வீட்டுக்கு வழியும் தெரிந்ததா? மறந்து போயிற்றென்றே நினைத்தேன்" என்று, இங்கிலீஷில் சொல் லிக்கொண்டு உள்ளே வந்து, தோற்பையை ஒரு மேஜை மேல் வைத்து விட்டு, அவருடன் கைகுலுக்கி, அப்படியே



அவளை அழைத்துச் சென்று சோபாவில் உட்காரவைத்து, தானும் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள். அவர்கள் பேச்சு இங்கிலீஷிலேயே நடந்தது. அவளுக்கு வயது முப்பத்தைந் திருக்கலாம். சாதாரண துரைசானிகள் இந்தியர் கண்களுக்குத் தோற்றுவது போல, அவ்வளவு விகாரமானவ ளில்லை. சோபாவில் உட்கார்ந்த பின்புதான் அந்தப் படத்தை அவள் கண்டாள்.

மூடி:— அதற்குள் இதைப் பார்த்து விட்டாயா? கோபாலுக்கு எப்பொழுதும் தன் காரியத்திலேதான் கண்; பிறர் சங்கதிதான் மறந்து போகும்.

கோபா:—ஏன், உன்னை நான் எப்பொழுது மறந்தேன்? அதிருக்கட்டும், மூடி: இந்தப் படம் எப்பொழுது எடுத்தது? அவள் எப்படி இதற்குச் சம்மதித்தாள்?

மூடி:—போன மாதம் இங்கே வந்திருந்தாள். அப்பொழுது, அவளுக்கு எங்கள் உடை உடுத்தினால் அழகாயிருக்கு மென்று நான் சொன்னேன்; அப்படியே என்

தங்கையின் உடையை அவளுக்கு உடுத்திஞேம். அது அழகாய் விநோதமாயிருந்ததால், என் தங்கை, அப்படியே படம் பிடிக்க வேண்டுமென்று சொல்ல, வெட்கத்திஞலும், தன் தகப்பஞர் கோபிப்பாரென்றும், முதலில் அவள் இணங்கவில்லை. பிறகு என் தங்கையின் கட்டாயத்தின் பேரில் இணங்க, இந்தப் படத்தைப் பிடித்தோம். நன்ரு யில்லையா இது?

கோபா:—நன்ரு யில்லை யாவா? எப்பொழுதுமே, புதுமை, ஒன்று விகாரமாய்த் தோன்றும்; அல்லது, அதிக அழகாய்த் தோன்றும். இந்தப் பட விஷயத்தில், இயற்கையி லுள்ள பேரழகு நூறு மடங்கு சோபிக்கிறது. அவள் உயரத்துக்கு, உங்கள் உடையே பொருத்தம் போல் தோன்றுகிறது. இந்தப் படம் எனக்குத்தான்!

மூடி:—இந்தப் படம் உனக்கா? என் தங்கை ஒரு நாளும் தரமாட்டாள்; அவளும், அதற்கிசைவளோ என்னவோ, சந்தேகம்.

கோபா:—இதற்கு இவ்வளவு வீம்பா! படக்காரனிடத்தில் காசு கொடுத்து, நான் ஒன்றுக்கு இரண்டு பிரதிகள் வாங்கிக் கொள்கிறேன், பார்.

மூடி:—அப்படி நீ செய்து விட்டால், ஆயிரம் ரூபாய் பந்தயம் கட்டுகிறேன். உன் சாமார்த்தியத்தைப் பார்ப்போம்.

கோபா:—ஏன் இவ்வளவு உறுதியாய்ச் சொல்லுகிருய்? ஏன் முடியாது?

மூடி:—அப்படி ஏதாவது நடக்காமல் தடுக்க வாக்குக் கொடுத்த பின்புதான், அவள் சம்மதித்தாள். மொத்தம் இரண்டு பிரதி தான் எடுத்தது; ஒன்று, எனக்கும் என் தங்கைக்கும் பொதுவாக, இது; மற்ருென்று, அவளிடம் இருக்கிறது. படம் பிடித்தவனுக்குக்கூட, பிரதி கிடையாது; பிடித்த மூலக்கண்ணுடியை உடைத்து விட்டாள். உனக்கு வேண்டுமாஞல், அவளைக் கேட்டு வாங்கிக் கொள்; அவள் தருகிருளோ பார்ப்போம்.

கோபா ;— அவளை நீ கடைசியாக எப்பொழுது பார்த்தாய்?

முடி :—போனவாரம் பார்த்தேன்—அவளுடைய அத்தை மகளுக்கு உடம்பு சுகமில்லையென்று கூப்பிட்டார்கள், போயிருந்தேன்; அப்பொழுது நெடு நேரம் பேசிக்கொண்டிருந்தேன்.

கோபா :—என்னைப்பற்றி ஏதாவது பேச்சுண்டோ?

முடி :—உன்னைப்பற்றியா? பேச்சுண்டு; ஆனால் நான் உன்னிடம் நான் சொல்வேனென்று அவள் எதிர்ப்பாக்கமாட்டாள். சொன்னால் நீ எனக்கு என்ன தருவாய்?

கோபா :—என்ன வேண்டுமானாலும் தருகிறேன்; படத்தை மட்டும் தரமாட்டேன்

முடி :—ஐயையோ! அதுமுடியாது; நீ இப்படித் திடீரென வருவாயென்று தெரிந்திருந்தால, அதைப் பெட்டிக்குள் வைத்திருப்பேன். என் தங்கை என்னை இலேசில் விடமாட்டாள். அவளும் ஒருவேளை சம்மதித்தால் நீ வைத்துக் கொள்ளலாம்.

கோபா :—உன் தங்கையெங்கே?

முடி :—அவள் பெங்களூர் போயிருக்கிறாள். நாளைக் காலையில் திரும்பி வரலாம்.

கோபா :—அதிருக்கட்டும், முடி; உன்னிடம் இப்பொழுது ஓர் அவசர காரியமாய் வந்தேன்.

முடி :—இல்லாவிட்டால் முடி வீடு இந்த நாளிலே வழி தெரியுமா? என்ன அவசரகாரியம்?

கோபா :—எப்படியாவது, நாளை மாலைக்குள், செய்வதாக வாக்குக் கொடுத்தால், சொல்லுகிறேன்.

முடி :—சரி, சொல்ல வேண்டாம், போ. காரியம் இன்னதென்று தெரியாமல், நான் எப்படி வாக்குக் கொடுப்பது? காரியம் இன்னதென்று சொன்னால்,—

கோபா :—உன்னால் முடியாத காரிய மில்லை; நீ மனசு வைத்தால், இன்றே, இப்பொழுதே முடித்து விடுவாய்.

மூடி :—கைகாரனடா நீ, கோபால்! வேளைக்குத் தக்கபடி, வேண்டியபடி பேசுவாய், ஜல்லாப் போடுவாய்; காரியம் ஆகிவிட்டால், அப்புறம் மூடி என்றொருத்தி யிருப்பதே மறந்து போய்விடும்.

கோபா :—இது தருமமா? இது நியாயமா? அப்படி நான் உன்னை என்று மறந்து போனேன்?

மூடி :—இந்த மாதம் ஏழாம் தேதி மாலையிலே, நீயும் அவளும் இங்கே வந்திருந்தீர்களே, ஞாபக மிருக்கிறதா? அன்று நீ என்ன சொல்லிப் போனாய்?

கோபா :—மன்னித்துக்கொள், மன்னித்துக் கொள், மூடி! என்மேல் தப்பிதம் தான்; முதலில், பில் வருமென்றிருந்தேன்; பிறகு மறந்து விட்டேன். முப்பத்தேழு ரூபா யென்றோ, ஏதோ சொன்னாயில்லையா? இதோ, இந்த ஐம்பது ரூபா நோட்டை வைத்துக்கொள்.

கோபாலையர் தன் பணப்பையி லிருந்து ஒரு நோட்டை யெடுத்துக் கொடுக்க, அவள் அதை வாங்கித் தன் பணப்பைக்குள் வைத்துக் கொண்டாள். அப்பொழுது அவள் பையைக் கண்டு, கோபாலையர், "கனத்துக் காண்கிறதே; உன் பாடு குசால்தான் போலிருக்கே" என்று பரிகாசமாய்ச் சொன்னார்.

மூடி :—இதோ பார், இப்பொழுது போய் வந்தேனே, அந்தக் கேஸிலே, ஒரு ரூபாய்க்குக் காசு கொடுத்து விட்டார்கள்.

கோபா :—என்ன கேஸ் அது?

மூடி :—ஒரு பிராமணப் பெண்; பதின்மூன்று வயது நிறையவில்லை இன்னும்; அதற்குள்ளே பிரசவம்! இந்த அநியாயம் வேறெங்கு மில்லை. இதை நிறுத்த ஒரு சட்ட மில்லையே!

கோபா :—நான் வந்த சங்கதியும் அப்படிப் பட்டது தான் : என் மாமனாரும் மைத்துனனும் வந்திருக்கிறார் கள் ; இன்னும் ஒரு மாதத்திற்குள், என் மகளுக்குக் கலி யாணம் முடித்துவிட வேண்டுமென்று கட்டாயப் படுத்து கிறார்கள். இடம் பெரிய இடம், லக்ஷரூபா சொத்திருக்கு.

மூடி :— பையன் பி. ஏ. க்கு வாசிக்கிறானா?

கோபா :—பையனுக்கு வயது பன்னிரண்டு ; முதல் பாரம் தான். பெண்ணுக்கு வயது பத்து, இரண்டாம் பாரம்.

மூடி :—பேஷ்! பேஷ்! பொம்மைக் கலியாணம்!

கோபா :—அதற்காகத்தான் இன்று வந்தேன். ஜானகி முடிவாய் என்ன சொல்கிறாளென்று, நாளை மாலைக்குள்ளா வது, நீ தெரிந்து சொல்ல வேணும். காரியம் என்றைக் காவது பழமாவதா யிருந்தால், இப்பொழுது என் மகளைக் கட்டிக்கொடுக்க நான் இசையவே மாட்டேன் ; ஏனென் றால், என்மகளைப் பின்பு என் வீட்டுக்கு ஒரு நாளும் அவள் புக்ககத்தார் விடவே மாட்டார்கள். அவர்கள் குக் கிராமவாசிகள் ; வைதிகப் பற்றுள்ளவர்கள். செக்கடியும் தம்பூரு மாகிவிடும். இல்லை, இது முடியாத காரியம், காய் தான், என்பதா யிருந்தால், பணக்காரவரனையும் இழந்து, என் மாமனார் மனத்தையும் வீணிற் புண்ணாக்குவதைப் பற்றி, யோசிக்க வேண்டும்.

மூடி :—சரிதான் ; ஆனால், அவள்தான் எப்படி சொல்லமுடியும்? ஜோஸிய மில்லையே இது ?

கோபா :—இருந்தாலும், தன் மனதாவது தனக்குத் தெரியாதா? எப்படியாவது ஒருவழியில் உறுதி செய்து கொள்ள வேணும். இந்தக் கடிதத்தில் நான் சொல்ல வேண்டியதை யெல்லாம் எழுதி யிருக்கிறேன். அவள் தகப்பனார் அறியாமல் அவளிடத்தில் இதைக் கொடுத்து, எனக்காக நீயும் எடுத்துப் பேசி, எப்படியாவது நீ தான்

நல்ல பதிலை வாங்கித்தர வேணும். நீ மனசு வைத்தால் முடியாத தில்லை. நாளை உன் தங்கையும் வந்து, அவளும் நீயுமாகச் சேர்ந்துபோய்ப் பார்த்து, என் கடிதத்தையும் கொடுத்து, சங்கதியின் அவசரத்தையும் எடுத்துச் சொன்னால், காரியம் நிச்சயம் பழமே. உங்களால்தான் இது முடிய வேணும். என் ஆயுள் உள்ளமட்டும் இந்த உதவியை மறவேன்.

முடி:—உதவி மறக்கிற திருக்கட்டும்,—

கோபா:—என்ன கேட்டாலும் தருகிறேன். எனக்குள்ள காதல்தான் உனக்குத் தெரியுமே: ஊரெல்லாம் என்னைப் பொய்யும் புளுகுமாகத் தூற்றுவதையும் ஒரு பொருட்டாக்காமல், அவளுக்குக் கொடுத்த வாக்குக்காகப் பொறுத்துக்கொண் டிருக்கிறேன். மூன்று வருஷம் பொறுத்தாய்விட்டது; இன்னும் மூன்று வருஷமானாலும், நான் பொறுத்திருக்கத் தடையில்லை. ஆனால், இந்த அவசரத்தினால், ஒரு வழியாக உடனே தீர்மானிக்க வேண்டியிருக்கிறது.

முடி:—கோபால்! நீ சொல்லவேண்டிய தெல்லாம் சொல்லி விட்டாய். நானும் முடிவாகச் சொல்லுகிறேன் கேள்: அவளுக்கு நீ எழுதின கடிதம் ஒன்று, அவள் தகப்பனார் கையில் அகப்பட்டதனால், உங்களுக்குள் கடிதப் போக்கு வரவு ஒழிந்தது முதல், எங்கள் மூலமாயேஏதாவது நடந்து வருகிறது. எனக்கும் என் தங்கைக்கும் நீயும் சிநேகிதன் அவளும் சிநேகிதி. உங்கள் சிநேகம் எங்களால் உண்டான தில்லையென்றாலும், அவள் சிநேகம் ஆசுபத்திரியில் முதல் முதல் உனக்கு ஏற்பட்ட நாள் தொட்டு, நீ முற்றிலும் வேறு மனுஷனாகி விட்டாய். அப்படி யிருந்துங்கூட, பழைய சிநேகத்தையும், அவளுடைய பரிதாப கதியையும் உத்தேசித்து, நான் உங்களுக்கு அநுசரணையாய் நடந்துவந் திருக்கிறேன். இதை உன் மனம்போல முடித்துத் தந்தால், என்னதருவாய்?

கோபா :—நீ எது கேட்கிருயோ அது தருகிறேன்.

இதைக்கேட்டவுடன், மூடி, சிறிது நேரம் யோசித்து, ஒரு துண்டுக் கடிதத்தில் ஏதோ பென்ஸிலால் எழுதிக் கோபாலையர் கையில் கொடுத்து, மிக்க ஆவலுடன் அவர் முகத்தை நோக்கினுள். கோபாலையர், அதைப்பார்த்து விட்டு, மற்றொன்றும் பேசாது யோசனை செய்து, முடிவில், "சரி, சம்மதம்," என்று சொல்லி, தன் பணப்பைக்குள் அந்தச் சீட்டைப் பத்திரமாய் வைத்துக்கொண்டார். உடனே, மூடி, "அது எனக்கு; என் தங்கை சங்கதி, அவள் வந்தபின், அவளைக் கேட்டாகவேண்டும்" என்று, சிறிது நாணத்தோடு சொன்னுள்.

இதைக் கேட்டவுடன் கோபாலையருக்குத் திகைப் புண்டாயிற்று. "ஆ! அப்படியா?" என்று மீண்டும் யோசிக்கலானுர். பிறகு: "சரி: அது என்ன என்று, அதையும் இப்பொழுதே சொல்லிவிடு; அல்லது இது போல் எழுதிக் கொடுத்துவிடேன்" என்ருர்.

மூடி :—நான் எப்படி இந்த விஷயத்தில் அவளுக் காகச் சொல்லமுடியும்? அவள் வந்துதான் ஆகவேண்டும்; அவள் மனம் எப்படியோ, உத்தேசம் ஏதோ?

கோபா :—அப்படியே ஆகட்டும்: அது என்னவாயி னும் சரி, என்னுல் சாத்தியமாயிருந்தால் தடையிராது. நீங்கள் மட்டும், எப்படியாலும், நாளை இந்நேரத்துக் குள் காரியத்தை முடித்து, அநுகூலமான அவள் பதில் கடிதத்தை வாங்கி வைத்திருக்க வேண்டும். நாளை இந் நேரம் நான் வருவேன். நாளை இரவே என் மாமனுர் ஊர் திரும்ப வேண்டியதாயிருக்கும்; அதற்குள் அவருக்கு முடிவான பதில் சொல்ல வேண்டும்.

மூடி :—அவள் பதில் எழுதித்தர முடியாவிட்டா லோ? வாய் மொழியாய்ப் பதில் அனுப்பினுலோ?

கோபாலையர் மீண்டும் யோசிக்கலானுர்.

மூடி:—எங்கள் வார்த்தை நம்பிக்கை யில்லையா?

கோபா:—அப்படியில்லை. இருந்தாலும், அவள் கைப் பட இருந்தால்தான் என் மனதுக்குச் சமாதானமாகும். எப்படியாவது அவள் பதில் கடிதத்தை வாங்கிவர வேணும். உன் தங்கை பெங்களூரிலிருந்து திரும்பியவுடன், நீங்கள் காலையிலே போய்ப் பார்த்து, வேண்டுமானால் மாலையும் சென்று பார்த்தால், எப்பொழுதாவது நாலுவரி எழுதித் தரச் சவகாச மேற்படும். அப்படியே செய்யுங்கள். காலையிலேயே காரியம் முடிந்துவிட்டால், ஆசுபத்திரியில் என்னை வந்து பார்.

மூடி:—சரி; இல்லாவிட்டால்,—சாயங்காலமானால்?

கோபா:—சாயங்காலமா? ஐந்து மணிக்குள் நான் இங்கே வராவிட்டால், ஹைகோர்டுக் கெதிரே, கடற் கரைப் பக்கம் வந்து பார்.



## பத்தாவது அதிகாரம்.

மறுநாளிரவு சாப்பாடு வீட்டுவேலை எல்லாம் முடிந்து, குழந்தைகளும் தூங்கியானபின், நாராயணையரும் பத்மா வதி யம்மாளும், தம்வீட்டு நிலாமாடத்திலே தினசரிப் பத்திரிகை படித்துக்கொண்டும், இடையிடையே சல்லாப மாய்ப் பேசிக்கொண்டும் இருக்கும் பொழுது, நாராய ணையர்: "கோபு மாமனுக்குக் கடுங்கோபம்; அவன் மச்சினன் வெங்கிட்டுவுக்கு அதைவிட. நேற்றுச் சொன் னது போதாமல், இன்றைக்கு, இன்னும் பச்சைப் பச்சை யாக வாயில் வந்தபடி யெல்லாம் சொல்லித் திட்டினான். அடிதடி வந்துவிடுமோ என்றுகூடப் பயந்தேன் நான். கோபு ஒன்றுக்கும் வாயே திறக்க வில்லை. இவனுக்கு இவ்வளவு பொறுமையும் சாந்தமும் என்றுமுதல் ஏற் பட்டதென்று, எனக்கே ஆச்சரியமா யிருந்தது. 'குட்டி

கலியாணம் இப்பொழுது முடியாது' என்று தீர்மான மாய்ச் சொல்லிவிட்டு, அப்புறம் யார் என்ன சொன்ன லும் வாயே திறவாமல், மண்சுவர் போல் இருந்து விட் டான். கடைசியிலே, 'சட்டைக்காரச்சியையும் துலுக் கச்சியையும் கண்ட கண்ட பேரை யெல்லாம் வைத்துக் கொண்டு இவன் தாறுமாறுமாய் நடப்பதினால், குட்டி இவன் வசம் இருக்கக் கூடாது; இவன் ஒரு பிராமணப் பெண்ணுக்கு ஏற்ற கார்டிய னில்லை; பெண்ணின் பாட் டனார் தான் அவளுக்குக் கார்டியனாக விருந்து, தகுந்த வரன் பார்த்து, சாஸ்திரோக்தமாய்க் கலியாணம் செய்து கொடு த்து, எல்லாம் செய்யவேண்டும்' என்று, கோர்ட்டிலே வியாச்சியம் செய்வதாகக்கூட, வெங்கிட்டு பயமுறுத்தி ஞன். அதற்கும் வாய் திறக்க வில்லை.'' என்று சொன்னார்.

பத்மி :—ஆனால், அப்படி வியாச்சியம் செய்தால், அவர்கள் இஷ்டப்படி நடக்குமோ ?

நாரா :—ஆ ! நடக்கிற காரியமா ! அவர்களால் ருஜுப் படுத்தத்தான் முடியுமா ? சும்மா, மிரட்டு.

பத்மி :—சட்டைக்காரச்சியைப் பற்றித்தான் நீயும் சொன்னாய் ; இன்னும் துலுக்கச்சி யாரவள் ?

நாரா :—எனக்குத் தெரியாது : ஒன்றை நூறாகச் சொல்வது லோகத்திலே ஸகஜந்தானே. சட்டைக்காரச்சி விஷயம் என்னவோ நிச்சயமாகத்தான் தோன்றுகிறது. இன்று சாயங்காலம் நானே நேரிலே கண்ணாரக் கண்டு விட்டேன்.

பத்மி :—எங்கே ? என்ன கண்ணாரக் கண்டாய் ? என்னிடம் சொல்லவில்லையே.

நாரா :—கனம பதமாவது யமமாளட்டததால், எல்லாம் நிமிஷத்துக்கு நிமிஷம், பாடம் ஒப்புவிக்க வேணுமாக்கும்.

பத்மி :—அதிருக்கட்டும் ; எங்கே, என்ன நீ நேரிலே பார்த்தாய் ? சொல்லு.

நாரா:—அன்டேர்ஸன் ஹாலிலே பேச்சு முடிந்து கூட்டங் கலேயவிட்டு, அப்படியே கடற்கரைப் பக்கம் நானும் சங்கரையருமாய்ப் போனோம். அப்பொழுது, ஹைகோற்டுக்கு எதிரே கடற்கரை யோரமுள்ள சவுக்குத் தோப்பிலே, கோபுவும் ஒரு சட்டைக்காரியும் நின்று பேசிக் கொண்டிருந்தது தென்பட்டது. கொஞ்ச நேரத்தில் பிரிந்து வெவ்வேறு வழியாய்ப் போய்விட்டார்கள். சங்கரையர் கூட: 'என்ன நாணுவையரே! உம்ம சிநேகிதருக்கு த்விதீய விவாகம் பிடியாதது மாத்திர மில்லே, நம்ம ஹிந்து ஸ்திரீகளே பிடிக்க வில்லேப் போலிருக்கே. வெள்ளேக்காரரைப்போல் அவர் ஸூட்டுப் போட்டுக் கொள்வதுபோல, வெள்ளேக்கார ஸ்திரீகள்தான் வேண்டியிருக்கும் போலிருக்கு?' என்று பரிகாசம் பண்ணினர். 'டாக்கரானபடியினலே பல பேரைத் தெரிந்திருக்கும்; சந்தித்த போது பேச நேரிடும். அதைக்கொண்டு, மூட்டை கட்டிவிடலாகாது' என்று, நான் ஒரு விதமாய்ச் சம்மாளித்து விட்டேன். நேரிலே இன்று பார்த்தாச்சு. இனிச் சந்தேக மில்லே. தீ இல்லாமல் புகைய வில்லே.

பத்மி:—ஏன், ஒரு வேளே நீ சம்மாளித்துப் பேசினதே உண்மையா யிருக்கப்படாதா? அவர் டாக்டரானதினலே, நர்ஸுகள், மருத்துவச்சிகள், வேறு டாக்டர்கள், பேஷயண்டுகள், பலபேர் சட்டைக்காரரைத் தெரிந்திருக்கும். உன்னேப் போலவே அவரும் பீச்சுக்குப்போய், அங்கே அப்படிப்பட்டவர் யாரையாவது சந்தித்துப் பேசியிருந்தால் ஆகாதா?

நாரா:—ஆஸாமி இன்னரென்று பார்க்க வேண்டாமா? கோபுவை எனக்கு இன்று நேற்ரு தெரியும்? அதுவும் தவிர, அவர்கள் சவுக்குத் தோப்பின் மத்தியிலே, வேறெவரும் இல்லாத இடத்திலே, சமயத்திலே, நெருங்கி நின்று பேசினதும், இவன் ஏதோ ஜேபியிலிருந்து பாக்கட்டி எடுத்து அவள் கையிலே கொடுத்ததும், அப்புறம் அவர்

கள் பிரிந்து வெவ்வேறு வழியாக விரைந்து சென்றதும், எல்லாம் பார்த்தால், என் மனசிலே சமுசயமே யில்லை. நல்ல வேளை, அவன் எங்களைப் பார்க்க வில்லை. அக்கம் பக்கம் திரும்பாமல், வேகமாய்ப் போய்விட்டான்.

பத்மி :—அப்படி யிருந்தாலும் கூட, அவரென்ன யாருக்காவது பயந்தவரா, பீச்சிலே சவுக்குத் தோப்பிலே தானு கண்டு பேசவேணும்? அவள் வீட்டுக்கு நேரே போனுல், அவரை யாராவது அடிக்கிறுர்களா? அவள் தான் இவர் விட்டுக்கு வர முடியாது, சாவித்திரி யக்காள் இருக்கிறுள்.

நாரா :—அதென்னவோ, அவள் யாரோ, எப்படியோ, நாமென்ன கண்டோம்? அவள் வீட்டிலே என்ன என்ன நிர்ப்பந்தங்களோ?

பத்மி :—அது போகட்டும்: அவளை நீ நன்றுய்ப் பார்த்தாயா? அழகா யிருக்காளா? சிறுப்பமா?

நாரா :—நாங்கள் கடற்கரை போய்ச் சேரும் போது, அங்கே இரண்டு சட்டைக்காரிகள் இருப்பதைக் கண் டோம். ஒரே மாதிரியாக உடுத்திக்கொண்டு, அக்காள் தங்கைகள் போலிருந்தார்கள். மூத்தவளுக்கு முப்பதிருக் கும்; இளையவளுக்கு இருபத்தைந் திருக்கலாம். இரண்டு பேருமே அவலக்ஷண மில்லை; அவ்வளவுதான் எனக்குத் தோன்றிற்று. துரைமகளா யிருந்தா லென்ன, நம்மவளா யிருந்தா லென்ன? எல்லாருமா பத்மாவதி யம்மாளைப்போல் அழகாயிருக்கிறுர்கள்?

பத்மி :—அடபோடா, கேலி பண்ணுதே—கூச்சங் காட்டாதே, என்னுல் தாங்க முடியாது. எனக் கென் னவோ, அத்தான்,—நான் அவரை அடிக்கடி பார்க்கிறது மில்லை, பேசுகிறது மில்லை யென்றுலும், எனக்குத் தோணு கிற மட்டிலே, கோபாலண்ணு இப்பொழுது முன்னைப் போல் இல்லை என்றே படுகிறது. அப்படிப் பட்ட நடத்தை

யொன்றும் இப்பொழுது இருக்கிறதாகத் தோணவில்லை. முன்னாலே சாலர்வையும் கிலாவையும் வைத்துக்கொண்டு இரிந்தபோது மாதிரி வேறே, இப்பொழுது வேறே.'

நாரா:—இருக்கலாம்; எனக்கென்னவோ அப்படி வித்தியாசமொன்றும் தெரியவில்லை. ஆனால், ஒரு சங்கதி மட்டும் விளங்கவில்லை: அவன் வாஸ்தவமாய் ஒரு சட்டைக்காரியை வைத்துக்கொண்டிருந்து, அவளைக் கலியாணமும் செய்துகொள்ள இஷ்டப்பட்டால், இதை விட நல்ல சமயமேது? மாமனாரும் மச்சினனும் உடற் பிறந்தாளும் வேண்டுகிறபடி, குட்டியைக் கட்டிக்கொடுத்து விட்டால், அவர்களை யெல்லாம் திருப்தி செய்ததுமாகும்; அப்பால் தன்னிஷ்டப்படியும் செய்யலாம்; பெண்ணுக்கு வரன் கிடைக்குமோ கிடையாதோ என்கிற கவலையே யில்லை. அது வாஸ்தவமா யிருந்தால், இவன் ஏன் இப்படி ஒரே பிடிவாதமாய் மறுத்து விட்டான்? அது தான் புரியவில்லை எனக்கு; அதனால்தான் சந்தேகம்.

பத்மி:—நீ உடைத்துக் கேட்கிறது தானே.

நாரா:—கேட்டேன், ஒரு நாள், ஜாடையாய்; ஆனால் ஒன்றும் பிடிகொடுத்துப் பதிற்சொல்லவில்லை. நாங்கள் பேசிக்கொண்டிருக்கும்பொழுதே யாரோ வந்து விட்டார்கள். அப்புறம் நான் கேட்கவில்லை. எப்படி இதைப் பற்றிக் கேட்கிறது? எனக்கு ஸங்கோசமா யிருக்கு. இந்த விஷயத்திலும் தோழர்களா யிருந்தால், ஒருவேளை ஸகஜமாய்ப் பேசமுடியலாம்; என்னால் இதைப் பற்றி வாய் விட்டுக் கேட்க முடியவில்லை.

பத்மி:—அவர் தம்பி, சங்குவின்பாடு என்னவாச்சோ? ஏதாவது அவனைப்பற்றித் தெரியுமோ?

நாரா:—ஒன்றும் ஒருத்தருக்கும் தெரியாது. அவனுக்குள்ள சொத்தை யெல்லாம் விற்றுப் பணமாக்கிக் கொண்டு, அவனும் ஐயங்காரும் சாலாவும் பம்பாய்க்குப்

போய், ஒரு வியாழவட்டத்துக்கு மேலாகிறது. ஏதோ பாரபரமாய், ஜெயிலுக்குப் போய்விட்டா னென்றும், துலுக்கனுகிவிட்டா னென்றும், செத்துப்போய்விட்டா னென்றும், சொல்லிக் கொள்வதைத் தவிர, நிச்சயமாய் ஒரு செய்தியும் தெரியாது.

பத்மி :—அம்மாடியோ! மகா துஷ்டன் அவன்! அவனை இப்பொழுது நினைத்தாலுமே, என் மனம் நடுங்கு கிறது. மகாதுஷ்டன்!

நாரா :—இரண்டு பேருமே தூர்த்தர்கள் தான் என் ருலும், அவன் மாதிரி வேறு, இவன் மாதிரி வேறு.

பத்மி :—இவர் படித்தவரே யில்லையோ,—

நாரா :—ஆ! படிப் பென்ன செய்யும்? படித்தவர் எத்தனைபேர் சங்குவைவிட நூறு மடங்கு கேடாக நடக்க வில்லை?

> “ பலநல்ல கற்றக்கடைத்தும், மனநல்லர்
> ஆகுதல் மாணர்க் கரிது ”

என்று, உலகம் தெரியாமலா நாயனர் பாடியிருக்கார்? சர்வகலாசாலையிலே இரண்டு மூன்று பட்டங்கள் பெற்று, மாதம் ஆயிரக்கணக்காய்ப் பணம் சம்பாதித்துக் கொண்டு, நாட்டுக்குப் பெரியவராய் விளங்கி, ராஜாங்க சட்டசபை யிலே மெம்பர்களா யிருப்போர்கூட, சிலர், வெட்கம் மானம் ஏது மின்றி, சட்டசபைக் கூட்டத்துக்குப் பட் டணம் வரும்போதே, தங்கள் வைப்பாட்டிமார் சகிதமாய் ரயிலில் பிரயாணம் செய்துகொண்டு வருகிருர்களே, இதைவிட வேறென்ன வேண்டும்! கோபுவாவது ஓர் அற்ப மனுஷன், பெண்டாட்டியை இழந்தவன், சிறுப்பம்.

பத்மி :—

> “ எத்தாயர் வயிற்றினும் பின்பிறந் தார்க ளெல்லாம்
> ஒத்தால், பாதன் பெரிதுத்தமன் ஆதல் உண்டோ ?”

என்று இராமர் சொன்னதுபோல, எல்லாருமே உன்னைப் போல் இருந்து விட்டால், அப்புறம் என் அத்தானுக்கு என்ன மகிமை?

நாரா:—ஓகோ! வைஷ்ணவாள் நமஸ்காரமோ? நான் சற்றுமுன்னாலே அம்மங்கார் அழகைப்பற்றிச் சொன்ன தற்குப் பதிலோ இது? சரி, சரி; ஆனால் நீ சொல்வது மெய்தான்,—கேவலம் மெய். உலகம் அப்படித்தானிருக்கு.

பத்மி:—மணி பன்னிரண்டாகிறது. படுத்துக்கொள்ளப் போகலாமா? ஊர் வம்பளந்தது போதாதா?

நாரா:—இது ஊர் வம்பாகாது. இது மட்டும் உண்மையா யிருந்தால், எப்படியாவது அவனைத் திருத்தி, இதைத் தடுக்கவேண்டும். கோபு சட்டைக் காரச்சியைக் கலியாணம் செய்துகொண்டு விடுவா னென்று நான் பயப்பட வில்லை. அவன் கிறிஸ்தவ னானாலொழிய, ஒரு சட்டைக் காரச்சியும் அவனுக்கு வாழ்க்கைப்பட மாட்டாள். ஆனால், இப்படிக் காலம் கழிந்தால், அப்புறம் அவன் ஒரு நாளும் கலியாணம் செய்துகொள்ள மாட்டான். புருஷாயுசு பூராவும் கஷ்டப்பட வேண்டியது தான். இரண்டுங் கெட்டான் வயசிலே தாரம் போய்விட்டால், அதிலேயும் சிறு குழந்தைகளும் இருந்து விட்டால், நமக்குள்ளே பெரிய தர்ம சங்கட மாய்விடுகிறது. 'பத்து அல்லது பன்னிரண்டு வயதிலே ஒரு பெண்ணைக் கலியாணம் செய்து கொள்' என்று, கோபுவைப் பார்த்து எப்படிச் சொல்கிறது? கலியாணி செத்ததே பாலிய விவாகத்தினால்தான் என்று, அவன் நம்புகிறான்; அவனோ டாக்டர்; இன்னும் ஒரு சிறு பெண்ணை இந்த வயதிலே கட்டிக்கொண்டு, அவன் என்ன செய்வன்? கலியாண மில்லாவிட்டாலும், என்ன செய்வன்? கஷ்டம் தான்!



## பதினேராவது அதிகாரம்

தாமஸ் கே என்பவர் சாதியில் திராவிடர்; மதத்தில் கிறிஸ்தவர்; நடையுடை பாவனைகளில் ஐரோப்பியர் என்கலாம். அவர் பாட்டனார் திருக்குற்றாலலிங்கம் பிள்ளை, சிறு பிராயத்திலே கிறிஸ்தவராகி, ஜான் கே என்ற ஐரோப்பியரிடம் வேலையிலிருந்து, பெருகி வாழ்ந்தவர். அவர் மகன் மார்டின் கே திருக்குற்றாலம் என்பவர், தாம்ஸன் கேசவையர் என்ற பிராமண-கிறிஸ்தவரின் மகளைக் கலியாணஞ் செய்துகொண்டார். அந்தத் திராவிட-ஆரிய-கிறிஸ்தவ தம்பதிகளின் ஒரே மகன்தான் தாமஸ். இவர், தன் பெயரைத் தாமஸ் கே என்று மாற்றிக்கொண்டார்; அதுவுமன்றி, இங்கிலாந்து சென்று படித்து, பாரிஸ்டர் பட்டம்பெற்று மீண்ட பின்பு, ஐரோப்பியர் நடையுடை பாவனைகளை அநுஷ்டிக்கலானார். தாமஸ் கே, ஏராளமான பூர்வ சொத்தைப் பெற்று, பல்லாயிரக் கணக்காகத் தானும் சம்பாதித்து, இப்பொழுது லக்ஷப் பிரபுவாயிருந்தார். அவர் இங்கிலாந்திலே படித்துவந்த காலத்தில், தான் குடியிருந்த வீட்டுக்காரியின் மகளை மணந்துகொண்டனரென்றும்; அவளை அழைத்துவர யோசித்துக் கொண்டிருக்கையில், அவள் திடீரென இறந்து போயினளென்று செய்தி எட்டியதென்றும், கூறுவர். அப்பால், தாமஸ் கே, தனது தாய்மாமன் குடும்பத்தைச் சேர்ந்த மிஸ் ஞானபுஷ்பம் கேசவையர் என்னும் பெண்ணைக் கலியாணஞ் செய்துகொண்டு, நான்கே ஆண்டுகள் அவளோடு சந்தோஷமாய் இல்லறம் நடத்தினார். அப்பால், ஜேன் என்ற ஒரு பெண் குழந்தையை மாத்திரம் தங்கள் காதற் கனியாக விட்டுவிட்டு, அவளும் இறந்துபோனாள். ஞானபுஷ்பம் இறக்கும் தறுவாயில், தன் காதலரிடம், ஒரு வரன் வேண்டினாள்: அதாவது, தன் மகள் ஜீவனோடிருந்தால், ஐரோப்பிய துரைசானிகளைப் போல உடை யுடுத்தவோ, ஓர் ஐரோப்பியனை மணம்புரியவோ, கூடாதென்

படாதே; தன்னால் இயன்றமட்டும் அப்படியே நடத்த, தாமஸ் கே வாக்களித்து, நடத்திவந்தார்.

தன் ஆசை நாயகியைப் பறிகொடுத்த தாமஸ் கே, அப்பால் வேறு விவாகம் செய்துகொள்ளவில்லை; பாரிஸ்டர் தொழில் செய்து பணம் சம்பாதிப்பதையும் நிறுத்திவிட்டார். தீராத சோகத்தில் ஆழ்ந்தவராய், தன் மகளைப் பேணி வளர்ப்பதொன்றே கவலையாகக் காலம் கழித்து வந்தார். தாமஸ் கே, நன்கு படித்தவர்; கல்வியில் அபிருசியுள்ளவர்; ஆங்கில காவியங்களில் அதிகம் பழகியவர்; சாதுரியமாய், மாதுரியமாய்ப் பேசவல்லவர். தன் கண்மணி போன்ற ஒரே மகள் ஜேனுக்குத் தானே தாயும் தந்தையும் தாதியுமாகி அவளை வளர்த்து வந்ததன்றியும், தானே அவளுக்கு ஆசானுமாகிக் கல்வி கற்பித்துவந்தார்.

சென்னையிலிருந்து திருவொற்றியூர் செல்லும் ரஸ்தாவின் கீழ்பால், தென்னை, மா, பலா முதலிய மரங்கள் அடர்ந்த ஒரு பெரிய தோட்டத்தின் நடுவே யிருந்தது, தாமஸ் கேயின் பங்களா. நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக அழகிலும் அறிவிலும் அன்பிலும் வளர்ந்தோங்கிவந்த ஜேன் கே, தன் தந்தையின் முழு மனத்தையும் கருத்தையும் கவர்ந்து, அவர் துக்கத்தை மறந்து மகிழ்வெய்தும்படி செய்து வந்தாள். அவளுக்கு உலகமே தெரியா தென்னலாம். அவள் தந்தையும், முன் போல் வெளிச் சென்று பலருடன் பழகுவதை நிறுத்திவிட்டார்; பெரிய சோலையின் நடுவே வாழும் அவர்கள், கடற்கரை செல்வதுமே துர்லபம். தாமஸ் கேயின் பழைய நண்பர்கள் சிலர் மாத்திரம், எப்பொழுதேனும் ஒருவேளை அவரைக் காண வருவர்; ஆண்டுகள் செல்லச் செல்ல, அதுவும் அத்தி பூப்பதுபோலாய்விட்டது. தாமஸ் கே, தன் மகளை நாலைந்து வயதுக் குழந்தைபோலவே நினைத்து, நெடுங்காலம் நடத்திவந்தார்: அதாவது, சாதாரண விஷயங்களில்; கல்வி விஷயத்திலோ, அவள் எழுத்துக்கூட்டிப்

படிக்கத் தெரிந்த காலந்தொட்டே, தான் படித்து அநு பவித்த காவிய ரசங்களையெல்லாம் அவளுக்கும் ஊட்ட முயன்றார். இவ்வாறு, அப்பன் மகள் இருவருமே தம்மைச் சுற்றியுமுள்ள உலகத்தை மறந்து, பரஸ்பர அன்பிலும் மகிழ்ச்சியிலும் காலங் கழித்து வரும் நாளிலே ஒரு நாள், ஜேன் கே அயர்ப்பிற் சொன்ன யாதோ ஒரு வார்த்தை, அவள் தந்தையின் கனவைக் குலைத்துவிட்டது. தன் மகள் ஈடெடுப்பில்லாத பேரழகும் கல்விப் பயிற்சியும் பொருந்திய யுவதி என்பதை, அன்றே அவர் உணர்ந்தார். அன்றுமுதல், அவர் மனத்தில் புதியதோர் கவலை குடி கொண்டது; பலவிதச் சந்தேகங்களும் எழலாயின. அவ ளிடத்தில் அதைப் பற்றிப் பேசுவதோ, அசாத்தியமாய்த் தோற்றிற்று; இன்ன செய்வதென்று அவருக்கு நிச்சய மாய்த் தெரியவுமில்லை. தானும் அவளும் அதுகாறும் வாழ்ந்து வந்த தனிமையைத் தவிர்த்து, நகர வாழ்க்கை யில் முன்போற் கலந்து பழகலாமோ, அவளையும் தன்னோடு பல பொதுஸ்தலங்களுக்கு அழைத்துக்கொண்டு செல்லலாமோ, என்றெண்ணினார். உலகம் இன்னதென்று தெரியாமலே வளர்த்துவிட்டு, திடீரென அவளை உலக நாடகசாலையில் கொண்டுவிடுவது, விபரீதமாய் முடியலா மென்று பயந்தார். தான் முன்போ லின்னுமிராமல், பல ருடன் மீண்டும் பழகி, அவளுக் கேற்ற ஒரு வரனைத் தேடுவது, இனித் தன் கடனாகுமென்று எண்ணினார்.

இப்படி யோசித்துக் கொண்டிருக்கும் காலத்திலே ஒரு நாள், திடீரென ஜேனுக்கு ஜுரம் கண்டு, நோய் முதிர்ந்து, கடைசியில், பெரிய ஆசுபத்திரிக்குத் தூக்கிச் சென்று அங்கேயே வைத்துச் சிகிச்சை செய்தால்தான் ஒருவேளை பிழைக்கலாகுமென் றாகிவிட்டது. அவ்வாறே வைத்தியஞ் செய்ய, ஜேன் அரிதிற் பிழைத்தாள். அவள் தந்தையாரோ, அந்த இரண்டு மாதங்களிலே இருபது வயது மூத்துவிட்டன ரென்னும்படி, மாறிவிட்டார்.

ஆசுபத்திரி நீங்கி வீடு வந்தவுடன், தாமஸ் கே, ஜேனைப் பேணி போஷிக்குமாறு, தனக்கு ஒன்றுவிட்ட சகோதரியும், ஜேனுக்கு அத்தைமுறை யானவளுமான தேவநேசம்மாள் என்ற ஏழை விதவையை வரவழைத்துத் தன் வீட்டில் வசிக்கும்படி செய்தார். தேவநேசம்மாள் பாக்கியம் என்ற தன் மகளோடும் வந்து, அவ்வாறே வசிக்கலானாள். தேவநேசம், அன்பே உருவெடுத்தாற்போன்ற கிழவி; தன் வாழ்நாளெல்லாம் பிறருக்கு உதவிகள் ஊழியங்கள் செய்வதிலேயே கழித்தவள். அவள் போஷணையில், நோயாளியின் உடம்பு விரைவில் தேறி, பழைய வளமையையும் வனப்பையும் பலத்தையும் பெறலாயிற்று. தேவநேசத்தின் பராமரிப்பிலே, தாமஸ் கேயும் பல கவலைகள் நீங்கி, மனம் ஒருவாறு அமைதியடைந்து, தன் மகளுக்குத் தக்க வரனை நாடி முயன்று வந்தார். முன்போலின்றி, அவர்கள் மாலையிற் கடற்கரை செல்வதும், பிறரைக் காணச் செல்வதும், பிறர் வந்து அவர்களைக் காண்பதும், சகஜமாயின.

ஆயினும், தாமஸ் கே உத்தேசப்படி காரியம் கைகூடும் குறிகள் ஒன்றும் தென்பட வில்லை; அவர் மனக்கவலை நாளுக்கு நாள் அதிகரித்தது.

தன் மனத்துக்கிசைந்த மாப்பிள்ளை யென்று தாமஸ் கே அங்கீகரித்தவர், பீட்டர் சாமிவேல் ஒருவர்தான்: அவர், கண்ணுக்கு லக்ஷணமானவர், வயது இருபத்தைந்துதான். எம். ஏ. பரீக்ஷை கொடுத்துப் பட்டம்பெற்று, மாதம் ரூ. 120 சம்பளத்தில் உபாத்தியாயராயிருந்தார். செல்வத்தைப் பற்றி, கே சிந்திக்கவேயில்லை. தன் ஒரே மகளின் மணவாளருக்குப் போதிய செல்வம் தன்னிடம் இருந்தமையால், மற்றக் குணங்களையே அவர் கவனித்தார். சாமிவேல் ஆங்கில பாஷையில் எம். ஏ. பரீக்ஷை கொடுத்தவராதலின், தனக்குப் பிரியமான ஆங்கில காவியங்களையும் புலவர்களையும் பற்றி அவருடன் அளவளாவிப்

பேசப் பேச, தாமஸ் சேக்கு அவர் மீதுள்ள பிரீதி அதிகரித்தது. ஒரு நாள், ஒரு சங்கத்தில், சாமிவேல், யேசு கிறிஸ்துவின் தெய்வீகத் தன்மையைப் பற்றிச் செய்த பிரசங்கத்தைச் செவியுற்ற பின், அவருக்கே தன் மகளைக் கொடுத்து விடுகிறதென்று தன் மனதில் தீர்மானித்துக் கொண்டார். பிறகு, சாமிவேலின் குலங் கோத்திரங்களைப் பற்றி விவரமாய் விசாரணை செய்யத் தொடங்கினார். மேலே கூறியுள்ளபடி, தாமஸ் சே, சைவாசாரத்தைக் கைவிட்டு இரண்டு தலைமுறைகளாயின. அவர் தன் பெயரையுமே மாற்றி, ஓர் ஐரோப்பியப் பெண்ணை முதல்தாரமாக மணந்தது மன்றி, இப்பொழுதும், ஐரோப்பியரைப் போலவே வாழ்ந்து வந்தார். ஆயினும், திருக்குற்றாலலிங்கம் பிள்ளையின் பேரனும் ஒரு பிராமணத்தியின் குமாரனுமான அவர், தன் மகளை மணம்புரிந்து கொடுக்கும் விஷயத்திலே, வரம்பு மீறிச்செல்ல மனமிசையவில்லை. தன் மனத்துக் கிசைந்த மாப்பிள்ளையான பீட்டர் சாமிவேலின் சரீரத்திலுலாவும் இரத்தத்தில், சக்கிலி, அம்பட்டமரபினோர் இரத்தக் கலப்பிலும், திருகாளைப்போவான், ஏனாதி நாயனார் மரபினரின் இரத்த சம்பந்தமே அதிகமென்பதை அறிந்தவுடன், காரியம் மேற்போகாமல் அதைத் தடுத்துவிட்டார். ஆயினும், இனி வேறென் செய்வதென்ற கவலை அவர் மனதிற் குடிகொண்டது.

இப்படியிருக்கையில் ஒரு நாள், ஜேனுக்குத் தபாலில் ஒரு கடிதம் வந்தது. அப்பொழுது அவள் வெளியே போயிருந்தாள். தாமஸ் சே அந்தக் கடிதத்தைக் கையில் வாங்கிக்கொண்ட பின், விலாசத்தின் கையெழுத்து ஒரு பெண் எழுதியது போலன்றி, ஆண் எழுதியது போலிருந்ததைக் கவனித்தார். மேல் நாட்டார் முறைப்படி ஒருவருக்கு வந்த கடிதத்தை வேறொருவர் திறந்து பார்க்கக் கூடாதென்பது, அவருக்குத் தெரியும்; அதுவரை ஜேனுக்கு வரும் கடிதம் எதையும் அவர் பிரித்துப்

பார்த்ததுமில்லை. ஆயினும், அக்கடிதத்தைப் பிரித்துப் பார்க்கும் வேட்கை, அவர் மனத்தினுதித்தது. அவள் வீட்டிலிருந்தால் உடனே அவள் கையில் கொடுத்திருப் பார்; அவளுமில்லை. ஆகையால், முதலிற் சிறிது திகைத்து, பிறகு அக்கடிதத்தைப் பிரித்து வாசித்துப் பார்த் தார். கடிதத்தின் விவரத்தையும் கையெழுத்தையும் பார்த்தவுடன், அவருக்குண்டான ஆச்சரியத்துக்கும் கோபத்துக்கும் அளவு சங்கை யில்லை.

மேல் விலாசத்தைக் கொண்டும், உள்ளே கண்ட சில விவரங்களைக் கொண்டும், அது தன் மகள் ஜேனுக்கு டாக்டர் கோபாலையர் எழுதிய காதற் கடிதம் என்று தாமஸ் கே நிச்சயித்தார். ஆயினும், அக் கடிதம், "என் காதலி ஜானகிக்கு" என்று எழுதப்பட்டிருந்தமை, சிறிது சந்தேகத்தை உண்டுபண்ணிற்று. ஆசுபத்திரியிலே கோபாலையர் பராமரிப்பிலுள்ள பகுதியில் தான், ஜேன் கே நோயாளியா யிருந்தாள்; ஆகையால், கோபாலையரை அவர் களுக்கு நன்கு தெரியும். ஆனால், கோபாலையருக்கும் ஜேனுக்கும் தான் அறியாத அந்தரங்கப் பழக்கமுண் டென்று, அவர் சொப்பனத்திலும் சமுசயித்ததே யில்லை. கடிதத்தை வாசிக்க வாசிக்க, அந்தச் சமுசயம் பலப்பட்டு, டெஸ்டிமோனாவின் கதை அவர் நினைப்புக்கு வந்தது. தன் மகள் ஜேன் திரும்பி வருமுன், தான் சென்று கோபாலையரைக் கண்டு பேசி, சமுசயத்தைத் தீர்த்துக்கொண்டு, அவர் உத்தேசத்தையும் அறிந்து கொள்வதே உசிதமென் றெண்ணி, தாமஸ் கே, உடனே ஒரு வாடகை வண்டியில் வெளிச் சென்றார்.

சிறிது நேரத்தில் ஜேன் திரும்பிவந்து, தூண்டித் துளைத்து விசாரித்ததில், தபால்காரன் ஏதோ ஒரு கடிதம் கொண்டு வந்ததும், அப்பால் அவள் தந்தை ஒரு வாடகை வண்டியில் வெளிச் சென்றதும் மாத்திரம் துலங்கிற்று. அதை யறிந்தவுடன், அவள் மனம் அச்சத்தையும் கவலை

யையும் அடைந்தது. அன்றிரவு தந்தையும் மகளும் நெடு நேரம் தனிமையில் கோபமாய் வாதாடிக்கொண்டிருந்தனர்; ஜென் பிறந்ததுமுதல் அதுவரை, அவ்வாறு நிகழ்ந்ததே யில்லை. 'கிறிஸ்து வேதத்தை மதியாத ஒரு பார்ப்பானுக்கும் உனக்கும் என்ன உறவு?' என்பதே தந்தையின் வாதம். முடிவில், கோபாலையருக்குத் தான் இனி எழுதுவது மில்லை, அவர் எழுதினால் கடிதங்களை அங்கிகரிப்பது மில்லையென்று, ஜென் சபதம் செய்து கொடுக்க வேண்டியதாயிற்று.

தேவநேசம்மாளின் மகள் பாக்கியம் ஒரு மங்கம் பெண்; தன் தாயைப்போலன்றிக் கொஞ்சம் தமிழ்ப் படித்தவள்; சாதாரண விஷயங்களைப் பற்றி மற்றவர் இங்கிலீஷில் மெள்ளப் பேசினால், பொதுவாய் அர்த்தமாகும்; அவளும் சிறிது இங்கிலீஷ் பேசுவாள்; தமிழ்ப் பேசுவதிலோ, ஆங்கிலச் சொற்களை விரவி, தடைதட்டின்றி, மணிப்பிரவாளமாக, இலக்கண முடிபுகளை அழுத்திப் பேசுவாள்; அந்நாணிகளான ஹிந்துக்கள் வீடுசென்று, ஹிந்துப் பெண்களுக்குக் கல்வி கற்பித்து, இடையிடையே பைபில் உபதேசமுஞ் செய்து, நாளாவட்டத்தில் அவர்கள் மனத்தைக் கலக்கித் திருப்புவதில் கைதேர்ந்தவள்; தன் கணவனான ஏசுவடியானென்ற பள்ளி உபாத்தியாருடன் வாழுங் காலத்தில், அவளும் மிஷன் சம்பளம் பெற்று, இந்தத் தொழிலையே செய்து வந்தாள். ஒரு வேளாள விதவையும், ஒரு பிராமணப் பெண்ணும், தங்கள் மதத்தை நீங்கிக் கிறிஸ்தவ மதத்தைச் சேரும்படி தூண்டியதற்குத் தானே மூல காரணமென்று, சில சமயங்களில் அவள் பெருமை பேசுவதுண்டு. தன் கணவர் திடீரென வாந்திபேதியினால் இறந்துபோன பின்பு, பாக்கியம், சில காலம் ஒரு தொழிலுமின்றித் துக்கங் காத்திருந்தாள்; அப்பால், மீண்டும் தன் பழைய வேலையைக் கையேற்று, மற்றொரு கணவரையும் நாடி

யடைய யத்தனித்துக் கொண்டிருக்கும் பொழுதுதான், தாமஸ் கேயின் கடிதம் கிடைத்துத் தாயும் மகளும் சென்னை வந்தடைந்து, அவர் வீட்டில் தங்கலாயினர். பாக்கியத்தின் வயது முப்பத்தைந்துக்கு மேலிராது; அவள், வளமையாய் உயர்ந்து வளர்ந்தவள்; நல்ல தேகக் கட்டுள்ளவள்; நீண்டு பரந்து விசாலமான அவள் முகம் எப்பொழுதும் புன்சிரிப்புடன் விளங்கும்; அவளைக் கண்ட பிராமண ஸ்திரீகள், "மஹாலக்ஷ்மி போலிருக்கிறாள்" என்று சொல்வதுண்டு. அவள் குணமோ, அவள் தாய் தேவநேசம்மாளின் குணத்துக்கு நேர் விரோதமானதென்னலாம். எந்தப் பேச்சிலும், எந்தக் காரியத்திலும், தீர்க்காலோசனையோடும் தூரதிருஷ்டியோடும் தன்னயத்தையே கருதுவாள்; ஆனால், அந்நோக்கமும் உட்கருத்தும், அவளைப் போன்ற ஆழ்ந்த நெஞ்சையுடைய நயவஞ்சகருக் கன்றி, சாமானிய மனிதருக்கு வெளிப்பட மாட்டா; இதுவுமன்றி, அவள் எதற்கும் அஞ்சாத துணிவும், விடாமுயற்சியும், மனவுறுதியு முடையவள்; எனவே, அவள் நினைத்ததை நிறைவேற்றாது விட்டது துர்லபம்.

இப்படிப்பட்ட பெண்மணி, தாமஸ் கேயின் வீடு வந்தடைந்த சில நாள்களுக்குள், வீட்டுப் பராமரிப்பும், அவர் கைப்பெட்டியின் சாவி தவிர மற்றச் சாவிகளும், அவள் கைவச மாய்விட்டன. கேயும், அவர் மகள் ஜேனும், பாக்கியத்தைக் கேளாமல் வீட்டில் எதுவும் செய்வ தில்லை; வெளிவிஷயங்களில்கூட, அவள் அபிப்பிராயத்தை யறிந்து நடக்கும் வழக்கம், நாளுக்குநாள் பலப்பட்டு வந்தது; ஆயினும், அவள் அதிகாரத்தைப் பற்றி எவரும் நினையாமலும், உணர்ந்து வருந்தாமலும், பாக்கியம் ஒழுகிவந்தாள். தாமஸ் கேயின் குடும்ப விவரங்களை யறியாதவர் எவரேனும் அவர் வீட்டில் பாக்கியம் வாழ்ந்து வருவதைக் கண்டால், அவள் கேயின் மூத்த மகள், அல்லது வீட்டு யஜமானி, என்றெண்ணுவர்.



## பன்னிரண்டாவது அதிகாரம்

கோபாலையருக்கு மிஸ்ஸிஸ் மூடி மூலமாக ஜேன்கே இரகசியக் கடிதம் அனுப்பியதற்கு இரண்டு நாள்களுக்குப் பின்னர், மாலை ஐந்து மணியிருக்கும், ஏதோ வேலையின் மீது வெளியே போயிருந்த தாமஸ் கே வீடு திரும்பி வந்தவுடன், பங்களாவின் முன்முற்றத்திலே பூத்தொட்டிகளின் நடுவே போட்டிருந்த ஒரு நாற்காலியில் களைப்புடன் சாய்ந்துகொண்டார். பங்களாவின் பின்புறமுள்ள கொட்டகைக்கு வண்டி வந்து சேர்ந்தும் தன் தந்தை பங்களாவுக்குள் வழக்கம்போல் வாராமையினால், ஜேன்கே, வாசற் பக்கம் போய்ப் பார்க்க, தன் கண்களை மூடிக் கொண்டு அவர் படுத்திருப்பதைக் கண்டாள். உடனே பட்லரை அழைத்து டீ கொண்டுவரச் சொல்லிவிட்டு, விரைந்து சென்று, அவர் படுத்திருந்த நாற்காலியின் கையின்மேல் உட்கார்ந்து கொண்டு, அவர் முகத்தை மெது வாய்த் தடவிக்கொடுத்து: "ஏன் அப்பா, களைப்பாயிருக்கிறதா? தலையை வலிக்கிறதா? உடம்பு சுகமில்லையா?" என்று, பக்ஷத்தோடும் பரபரப்போடும் விசாரித்தாள்.

கே—இல்லை, ஒன்றும் விசேஷ மில்லை, ஜென்னி. வரும் வழியிலே ஏதோ. சிறிது நெஞ்சு படபடத்தது; கொஞ்சம் களைப்பா யிருக்கிறது.

ஜேன்— டீ கொண்டுவரச்சொன்னேன், டாக்டருக்கு ஆளனுப்பட்டுமா ?

கே—வேண்டாம்; டாக்டரைப் பார்த்து விட்டுத் தான் வருகிறேன்; ஒன்றும் விசேஷமில்லை யென்றுதான் அவரும் சொன்னார்.

ஜேன்—ஹிருதயத்தைச் சோதித்துப் பார்த்தாரோ?

கே—பார்த்தார்; பயப்படும்படி ஒன்றுமில்லை என்றார்.

இதற்குள் டீ வந்துசேர, ஜேன், தன் தந்தைக்கு ஒரு கோப்பையில் டீ கலந்து கொடுத்தாள். அவர் அதை

வாங்கிச் சாப்பிட்டுக்கொண்டே, மீண்டும் அவளுடன் பேசலானார்.

கே.—உன்னைப் பற்றித்தான் கவலையாயிருக்கிறது. இன்று ஒரு சங்கதி கேள்விப் பட்டேன்: அதைக் கேட்டதுமுதல் கவலை அதிகமே.

ஜேன்.—ஏன், என்ன கேள்விப்பட்டீர்கள்? என்னைப் பற்றி ஏன் அதனால் கவலை அதிகப்படவேண்டும்?

கே.—அந்தப் பிராமண டாக்டர் மீதுள்ள எண்ணம் இன்னும் உனக்கு மாறவில்லையே?

ஜேன், இதற்கு ஒன்றும் உடனே பதிலுரையாமல், தலையைக் கவிழ்ந்து கொண்டாள்.

கே.—அவனைப் பற்றி ஒரு சங்கதி காதில் விழுந்தது. அது உண்மையானால், அப்படிப்பட்டவனை நீ நினைத்தலும் தகாது. வெறும் தூர்த்தனும் அவன்.

இதைக் கேட்டவுடன் ஜேன் நெஞ்சு படபடத்தது; அவள் மனத்தில் கோபமும் தாபமும் துக்கமும் கிளர்ந்து குழம்பின; அவள் கண்கள் நீர்ததும்பின. சிறிது நேரம் ஒன்றும் பேசாதிருந்தாள்; தன் தந்தையாக மேலொன்றும் சொல்லாமையால், அவள், "காதில் என்ன விழுந்தது?" என்று மெதுவாய்க் கேட்டாள்.

கே.—என்னவா? முதல் மனைவி உயிரோடிருக்கும் பொழுதே அவன் தூர்த்தனாய்த் திரிந்தானும். இப்பொழுது யாரோ ஒரு பறங்கிக்காரியை வைத்துக்கொண்டிருக்கிறானும். இன்று நான் டாக்டர் ஹூயியைக் காணப் போனபோது, வக்கீல் சங்கரையர் அவருடன் பேசிக்கொண்டிருந்தார். அவரை நான் வெகுநாளா யறிவேன். 'இந்த நாளிலே பிராமணர்கள் பலவிதயாய்க் கெட்டழிந்து போகிறார்கள்; பழைய நாளைய வருணாசிரம தருமப்படி நடக்கவேண்டும்' என்பதுதான், எங்கும், எப்போதும் சங்கரையர் பாடும் பல்லவி; கருநாடக மனுஷர் அவர். இன்றும் அந்தப் பல்லவியை வழக்கம்போல் பாட ஆரம்

பித்தார். அப்பொழுது, அவர், டாக்டர் லூயியைப் பார்த்து: "பிராமணன் டாக்டர் பரீக்ஷைக்குப் படித்து, அந்தக் காலேஜில் ஜாதி மத பேதமில்லாமல கண்ட பேரோடெல்லாம் கங்குகரையின்றிப் பழகுவதால், தன் ஜன்மத்தையே மறந்து, அப்பிராமணியமான விஷயங்களில் அரோசிகம் என்பதே போய், தாறுமாறாக வெள்ளைக்காரரைப்போலவே நடக்கத் தலைப்பட்டுவிடுகிறான்" என்று சொன்னார். அதற்கு உதாரணமாக, டாக்டர் கோபாலை எடுத்துக்கூறி, அவன் இப்பொழுது ஒரு பறங்கிக்காரியை வைத்துக்கொண்டிருக்கிறானென்றும், அவனும் அவளும் ஹைகோர்ட்டுக்கு எதிரேயுள்ள சவுக்குத் தோப்பில் சாயங்காலம் அளவளாவிக் கொண்டிருந்ததை இரண்டு நாளைக்குமுன் தான் நேரில் பார்த்ததாயும் சொல்லி, தன் பல்லவியைப் பாடினார். அப்படிப்பட்ட மட்டுமரியாதையில்லாத, மானங்கெட்ட ஒரு தூர்த்தனை நீ சொப்பனத்திலும் நினைக்கலாமோ?

ஜேன்.—போன சனிக்கிழமை சாயங்காலமா?

கே.—சனிக்கிழமையென்று நான் சொன்னேனோ? சங்கரையர், 'இரண்டு நாளைக்கு முன்' என்றார்; ஆனால் சனிக்கிழமைதானாகும். எப்பொழுதானால் என்ன? பிராமணர்களுக்குள் வியவஸ்தை கிடையாது. எத்தனை பெண்டாட்டிகள் வேண்டுமானாலும் கலியாணஞ் செய்து கொள்வார்கள்; அதுவும் தவிர, இந்த விஷயத்தில் ஒரு வரம்புமில்லை. சங்கரையர் சொல்வதைக் கேட்டால், பிராமணர்களுக்குள்ளுமே, இவன் பேர்போன தூர்த்தனென்று தோன்றுகிறது. இன்றுதான் எனக்கிது தெரிய வந்தது. அதைக்கேட்டது முதல், அவன்மேல் உனக்குள்ள அபிமானத்தை எண்ணி என் மனம் வருந்துகிறது.

தான் இப்படிப் பேசினால், தன் மகளின் மனப்பான்மை வெளிப்படும்; அவள் காதல் முறிபடும்; "நான் தான் அவரைப் பார்த்து பேசுவதுமில்லை, எழுதுவதுமில்லையென்று சபதம் செய்து கொடுத்திருக்கிறேனே;

நீங்கள் ஏன் எனக்காக வருந்தவேண்டும்? இப்படிப்பட்டவரை நான் ஒருபோதும் நினையேன்" என்று அவள் உறுதி கூறுவாள்; அப்பால், அவள் விவாகத்தைப் பற்றித் தான் ஒரு வாரமாய்க் கொண்டிருந்த உத்தேசத்தை வெளியிட்டு, அவள் மனத்தை அறியலாம் என்று தனக்குள் சூழ்ச்சிசெய்து, தாமஸ்கே இவ்வண்ணம் பேசலானார். ஆனால், அவர் எதிர் பார்த்தபடி, ஜேன் ஒன்றும் சொல்லவில்லை; அவள் பதிலே கூறவில்லை. அவரை முகமெடுத்து நோக்காமல், தலையைக் கவிழ்ந்துகொண்டு, தன் சிந்தனையில் ஆழ்ந்தவளாயிருந்தாள். தாமஸ்கே, மேல் இனி எப்படிப் பேச்சைத் திருப்புவது என்று திகைக்கலானார். அந்தச் சமயத்தில்: "தங்கள் உடம்பு சுகமாயிருக்கின்றதா? இந்த நிமிடமே, என்றும் போலின்றிக் களைப்புற்றிருக்கிறீர்கள் என்று, பட்லர் கூறக் கேள்வியானேன். என்ன விசேடம்? கொஞ்சம் விஸ்கியும் ஸோடாவும் கொண்டு வரட்டுமா?" என்று பரிந்து விசாரித்துக்கொண்டே, பாக்கியம் வந்து சேர்ந்தாள்.

"வேண்டாம், அக்காள்; கொஞ்சம் டீ சாப்பிட்டார்கள், இப்பொழுது தாழ்வில்லை" என்று, ஜேன் உடனே பதிலுரைத்தாள்.

தன் தந்தை தினந்தோறும் சிறிது மதுபானஞ்செய்வதும்; அதற்குப் பாக்கியம் உடந்தையாயிருந்து, வேண்டியபோதும் வேண்டாத போதும் தூண்டி வருவதால் அந்த வழக்கம் பலப்பட்டு, அவர் குடிக்கும் மதுவின் அளவு நாளுக்கு நாள் அதிகப்பட்டு வருவதும்; அதனால், அந்த வழக்கத்தை வெறுக்கும் தன்னிடத்தில் தன் தந்தைக்குச் சிறிது கூச்சமும் பயமும், பாக்கியத்தினிடத்தில் அந்தரங்க விசுவாசமும் அந்நியோந்நியமும் ஏற்பட்டிருப்பதும், ஜேனுக்கு நன்கு தெரியும்.

"இல்லை, ஜேன்; உனக்குத் தெரியாது; இப்படிக் களைப்புற்ற சமயத்தில் விஸ்கியும் ஸோடாவும் சிறிதுட்

கொள்ளுதல்தான் ஏற்ற மருந்து; உடனே களைப்பு நீங்கி விடும். நான் சிறிது கொண்டு வருகின்றேன்" என்று சொல்லிக்கொண்டே பாக்கியம் திரும்பினுள்.

"வேண்டாம், பாக்கியம், டீ சாப்பிடவிட்டுக் களைப் பில்லை. நீயும் உட்காரு; ஒரு சங்கதி பேசவேண்டும்; முக்கியமான சங்கதி" என்று கூறி, கேயும் தடுக்க, பாக் கியம் ஒரு நாற்காலியில் வீற்றிருந்து, "என்ன சங்கதி?" என்று கேட்டாள்.

தன் காதலர் தூர்த்தர் என்பதைப்பற்றியே தன் தந்தை பேசப் போகிருர் என்று, ஜேன் எண்ணினுள். மிஸ்ஸிஸ் மூடி தன்னிடம் சனிக்கிழமை யன்று சொன்ன வார்த்தைகளால், சவுக்குத் தோப்பில் தன் கடிதத்தை மிஸ்ஸிஸ் மூடி கோபாலையருக்குக் கொடுத்ததைப் பார்த்து விட்டே சங்கரையர் தன் காதலரைத் தூர்த்தரெனப் பழிக்கலானுர்; அது முற்றும் தவறு, என்பதை ஜேன் கண்டு கொண்டாள்; ஆயினும், உண்மையைத் தன் தந்தையிடம் வெளியிடுவது அசாத்தியமா யிருந்தது. இப்பொழுது மீண்டும் தன் தந்தை பாக்கியத்தினிடத் திலும் தன் காதலரை அவதூருகப் பேசுவதை இருந்து கேட்க விரும்பாதவளாய், "இதோ ஒரு நிமிஷத்தில் வந்து விடுகிறேன்" என்று சொல்லிக்கொண்டு, ஜேன் பங்களா விற்குள் போய்விட்டாள்.

"என்ன சங்கதி, ஐயா?" என்று, பாக்கியம் மீண்டும் கேட்டாள்.

தன் மகள் பிரிந்துபோய், தானும் பாக்கியமும் தனித்தவுடன், கே, முதலில் நினைத்தபடி யன்றி, தன் மகளைப்பற்றிப் பாக்கியத்தின் மூலமாய்த் தான் அறிய விரும்பிய விஷயத்தைப்பற்றிப் பேசலானுர்.

கே.—ஏன், பாக்கியம், உனக்குத் தெரிந்திருக்குமே, இன்னும் அந்தப் பார்ப்பான்மேல் இவளுக்கு அதிகம் காதல் உண்டோ?

பாக்கியம்.—அப்படித்தான் தோன்றுகின்றது ; ஏன் கேட்கின்றீர்கள்.

கே.—அவன் வெறும் தூர்த்தனென்று இன்றே கேள்விப்பட்டேன் ; அவளிடம் சொன்னேன் ; ஒன்றும் பதிலே சொல்லவில்லை ; மனம் வேறுபட்டதாகவும் தெரியவில்லை.

பாக்கியம், "அவர் தூர்த்தரா ? ஐயோ பாவம் ! அப்படிப் பட்டவர் மீதா இவள் காதல் கொண்டிருக்கின்றாள் ? விதிவசமே இது. காதலுக்குக் கண்ணேது, காதேது ? ஜாதிமதம் வயது முதலிய வித்தியாசங்களை அது கவனிப்பதுண்டோ ? தாங்கள் அறியாத விஷய மில்லையே." என்று சொல்லிப் பெருமூச்செறிந்தாள். தாமஸ்கே, பாக்கியத்தைச் சிறிது திகைப்புடன் ஒரு கணம் விழித்துப் பார்த்துவிட்டு, அப்பால்: " ஆனால் இவளுக்கு அவன் மீதுள்ள காதல் மாறவே யில்லையா ?" என்று கேட்டார்.

" நான் எவ் வண்ணம் உறுதி சொல்வேன் ? காதல் விஷயத்தில் மட்டுமே ஒருவர் மனத்தை ஒருவர் அளந்தறிய முடியாது.

" கண்ணொடு கண்கள் கலந்தொத்தால் வாய்ப் பேச்சால்
என்ன பயனு மில"

என்று ஔவையார் கூறி யிருக்கின்றனர். ஒருவர் மனத்தை ஒருவர் அறிய முடியுமா ?" என்று பதிலுரைத்தாள்.

கே.—உன்னிடம் இதைப்பற்றி அவள் பேசுகிற தில்லையா ? நீங்கள் இருவரும் தோழிகளாயிற்றே, உனக்கு உண்மை தெரியாதா ?

பாக்கியம்.—எப்பொழுதாவது பேசுவ துண்டு ; நான் சொல்வதைப்பற்றித் தாங்கள் வேற்றுமையாய் நினைக்கவுங் கூடாது, மனஸ்தாபங் கொள்ளவுங் கூடாது ; அப்படியாயின் நான் ஒரு வார்த்தை சொல்லுகின்றேன்.

கே.—என்ன, என்னதது ?

பாக்கியம்.—தன் தாய்வழி வந்த அபிமானமோ, மற்றென்றோ, நான் அறியேன் ; தங்கள் மகளுக்கே

பொதுவாய்ப் பிராமணரிடத்திலும் அவர்கள் பழக்க வழக்கங்களிலும் ஒருவித அபிமானமிருக்கின்றது. இவ் விஷயத்தில், தங்களைக்கொண்டு பிறந்தவ ளில்லை அவள்; நம்முடைய சத்திய வேதத்திலே அதிகப் பற்றுள்ள வளாகவும் தோன்றிலள், நான் கவனித்த வரை; இது மட்டும் என் மனத்திற் பதிந்திருக்கின்றது; காரணம் யாதோ நான் அறியேன்; தங்கள் மகள் இப்படி யிருப்பது முதலில் எனக்கு ஆச்சரியமாயிருந்தது.

தாமஸ் கே இதற் கொன்றும் பதிற் கூறிலர்; தன் சிந்தனையில் சிறிதுநேரம் ஆழ்ந்திருந்தார்; பாக்கியம், அவர் முகக்குறிகளைக் கவனியாதவள்போல் உற்றுக் கவ னித்துக்கொண் டிருந்தாள்.

கே.—அவளுக்கேற்ற வேறொரு நல்ல வரன் நாலைந்து நாள்களுக்கு முன் தெரிய வந்தது. அதைப் பற்றியே உங்களிடம் பேச எண்ணினேன்.

பாக்கியம்.—அவள் மனம் எப்படி யிருந்தாலுஞ் சரி; மற்றொருவரைத் தெரிந்துகொண்டு, கூடிய சீக்கிரத்தில் மணவினையை முடித்து விடுவதே நலமெனத் தோன்று கின்றது; அப்பால், எல்லாம், தங்கள் மனம்போலத் திருந்தி விடுவாள். தங்கள் சொல்லைத் தட்டமாட்டாள்; ஒருவருக்குக் கட்டுப்பட்ட பின், தன் கடமைப்படியே ஒழுகுவாள்.

கே.—நான் கேள்வியான வரனானால், துரிதமாகக் காரியத்தை முடிக்கவேண்டும்; இல்லாவிட்டால் கை தவறிப் போய்விடும். அந்த வரன் எல்லா விஷயத்திலும் எனக்குத் திருப்தியாயிருக்கிறது. இந்த மாதமே சீமையி லிருந்து திரும்பி வந்தவர்; ஸர்க்காரில் மாதம் மூந்நூறு ரூபா உத்தியோக மாகிவிட்டது; வயதும் சிறுப்பமே; கண்ணுக்கு லக்ஷணமாயு மிருக்கிறார்; எல்லா விஷயத்திலும் சிலாக்கியமானவர்.

பாக்கியம்.—அவர் யார்?

கே.—நாளையே அவரை அழைத்து வரும்படி என் நண்பரிடத்திற் சொல்லி யிருக்கிறேன்; ஆனால், இவளுக்கு இன்னும் அந்தப் பார்ப்பான்மேல் தான் கிறுக்கென்றால், என்ன பிரயோசனம் ?

பாக்கியம்.—அவள் குழந்தையே இன்னும்! வயதுக்குத் தகுந்தபடி உலகத்தை அறியாதவள். அவளுக்கென்ன தெரியும் ? தாங்கள் பார்த்து, இப்படித்தான் செய்ய வேண்டுமென்று தீர்மானமாய்க் கூறிக் காரியத்தை முடித்துவிட்டால், பிறகு எல்லாம் மனமொத்துப் போகும். இந்த விஷயத்திலே தாங்கள் தயவு தாக்ஷணியம் பாராட்டினால் ஒன்றும் முடியாது.

கே.—அவள் மனமுரண் டுள்ளவள்; சாதாரண விஷயங்களில், குழந்தையைப் போல நடந்தாலும், தன் மனத்தில் உறைத்துப்போன முக்கிய விஷயங்களிலே, அவளை அசைக்க முடியாது; பிடிவாதக்காரி; உனக்கு அவள் சுபாவம் இன்னும் தெரியாது.

பாக்கியம்.—ஆனால், அவளிஷ்டப்படியே, டாக்டர் கோபாலையருக்கே கொடுத்து விடலாமே ?

கே.—என் உயிருள்ள வரை அதற்கு நான் இசைய மாட்டேன். அப்படிப்பட்ட ஒரு பார்ப்பானுக்கு என் ஒரே மகளைக் கொடுக்கிறதா ! விவாகமில்லாமல் வேண்டுமானால் அவளிருக்கட்டும்; அவனை மணம்புரிய ஒரு நாளும் நான் சம்மதிக்க மாட்டேன்.

பாக்கியம்.—தங்கள் மனம் அப்படி உறுதியாயிருந்தால், விவாக மில்லாமலும் அவர் மீது காதலோடும் வைத்திருப்பதைக் காட்டிலும், அவளை எவ்வாறாவது, கட்டாயப்படுத்தியாவது, வேறொரு தகுந்த வரனுக்கு மண முடித்து விடுவதே உத்தமமெனத் தோன்றுகின்றது. அப்படியே செய்து விடுங்கள்.

கே.—ஏதோ, நாளை எவ்வாறாகிறது பார்ப்போம். போனவர் இன்னும் திரும்பி வரவில்லை, பார்.

## பதின்மூன்றும் அதிகாரம்

"உன் காதல் மெய்யானால், உன் சபதங்கள் எல்லாம் உண்மையானால், உடனே என் தகப்பனாரை நேரில் வந்து பார்த்து, ஏதாவது ஒரு விதமாக என்னைக் கலியாணஞ் செய்து கொள்ள ஏற்பாடு செய். இந்த நிர்ப்பந்தம், இனி என்னால் பொறுக்க முடியாது. நாம் இருவரும் பரோடாவுக்கோ, நம் கலியாணம் சட்டப்படி ஒழுங்காகும் வேறு எந்த இடத்துக்கோ, இரகசியமாய் ஓடிப்போய், கலியாணத்தை முடித்துக் கொண்டுவந்து விட்டால், அப்புறம் அவர் மனம் ஒரு விதமாய் சமாதானமாகிவிடும்; அதுதான் சரியான யுக்தி என்று, பாக்கியம் சொல்கிறாள். எனக்கு அது பிடிக்கவில்லை; அவர் மனதை அவ்வாறு புண்படுத்த, நான் எப்படி இசைவேன்? அவர், முன் கோபமும் பிடிவாதமும் உள்ளவர்; இல்லை, அது சரியென்று தோற்றவில்லை. எனக்குத் தாயும் தகப்பனுமாய், இவ்வளவு அருமையாய்,—இல்லை, அது என்னால் முடியாது. வேறொரு வரனைக் கூட்டிக்கொண்டு வந்து நெருக்கி, மூன்றும் இரண்டு வாரத்திற்குள் மணவினையை முடித்துவிட வேண்டுமென்று, அவர் நிர்ப்பந்தப் படுத்துகிறார்; இனித் தாமதிக்க முடியாது. உடனே, எப்படியாவது, ஏற்பாடு செய். ஒவ்வொரு நிமிஷமும் உன் பதிலை ஆவலுடன் எதிர் பார்த்துக்கொண்டிருக்கும், உன் காதலி ஜேன்."

இந்தக் கடிதத்தைக் கையில் வைத்துத் திரும்பித் திரும்பிப் படித்து, மனங்குழம்பி, ஆலோசனை செய்து கொண்டிருந்தார், டாக்டர் கோபாலையர். வழி யொன்றும் புரியவில்லை; நாலுபுறமும் புத்தி முட்டாகவே இருந்தது. கடைசியில், தன் சிநேகிதர் நாராயணையரைக் கலந்துகொள்ளத் தீர்மானித்தார். 'அவன் என்ன, எப்பொழுதும் போல் தர்மோபதேசம் செய்வன்; வேறென்ன சொல்லப் போகிறான்? நீ கிறிஸ்தவனாகி, அவளை மணந்துகொள்

என்று சொல்லப் போகிருளு? அல்லது அவளோடு ஓடிப் போய்க் காரியத்தை முடித்துக்கொண்டு வந்து விடு; அப்பால் பார்த்துக் கொள்ளலாம் என்று சொல்லப் போகிருளு?' என்று, தனக்குள் தானே பின்னும் நினைத்தார். அந்தச் சமயத்தில், தற் செயலாய் நாராயணையர் வந்து சேர, அது தெய்வ சங்கல்பம் என்று நினைந்து, அவரிடத்தில் கதை முழுதையும் கொஞ்சம் கொஞ்சமாய் வெளி யிட்டார்.

வேறு விதமாய் எண்ணிக்கொண் டிருந்த நாராயணையர், இவ்வாறு உண்மையை அறிந்தவுடன், அளப்பரிய ஆச்சரியத்தை அடைந்தார்.

"அடா பாவிப்பயலே! ஒருவருக்கும் தெரியாதே. ஏதேதோ சட்டைக்காரச்சி என்றும், துலுக்கச்சி என்றும், ஊரெல்லாம் தூற்றினர்கள். அப்படியே நானும் நம்பி வந்தேன்! 'கண்ணாலே கண்டதும் பொய், காதாலே கேட்டதும் பொய்' என்பது, ருசுவாய் விட்டதே. ஆனால், பத்மி மட்டும், நான் சொன்னதை முழுதும் நம்ப வில்லை; நீ முன்னைப் போலில்லை என்று சொல்லிக்கொண்டே இருந்தாள். உனக்கு இவ்வளவு கரவும் நெஞ்சழுத்தமும் எப்படி வந்தது? என்னிடத்தில் கூட ஒன்றும் சொல்லவில்லையே! உன் மச்சினன் உன்னை ஏசினதை யெல்லாம் எப்படிப் பொறுத்துக்கொண் டிருந்தாய்? ஆனாலும், நீ—"

கோபாலையர்.—அதெல்லாம் இருக்கட்டும், நாணு, நான் அப்பொழுது என்ன சொல்லக்கூடும்? போனது போகட்டும்; இப்பொழுது நீ இதற்கு என்ன வழி சொல்கிருய்? உன் யுக்தி என்ன?

நாராயணையர்.—வழியா? யுக்தியா? என்ன சொல்கிறது? பாக்கியம் என்கிறவள் யாரு?

கோபா.—ஜானகி வீட்டில் அவளுக்குத் துணையாயிருப்பவள்; அவள் தோழி; ஒரு திருட்டு நரி; மாய்மாலக்காரி.

நாரா.—உனக்கு அநுகூலமாகவே அவள் போதனை தோன்றுகிறது?

கோபா.—எல்லாம் சாணக்கிய தந்திரம். அவளுக்கு அவர்மேல், தாமஸ்கேயின் மேல், நாட்டம் என்று எண்ணுகிறேன். ஜானகிக்கும் அவருக்கும் மனஸ்தாபம் வந்தால், ஜானகி வீட்டைவிட்டு வெளியேறி அவர் கோபத்துக் குள்ளானால், தன் காரியம் சுலபமாய்க் கைகூடும்; தானே வீட்டு யஜமானி யாகிவிடலாம் என்பது, அவள் சூழ்ச்சிபோல் தோன்றுகிறது. அதுதான் இப்படிப் போதனை.

நாரா.—ஆனால், இவளுக்கு அது தெரியாதோ?

கோபா.—இவளா,—கறந்த பாலும் சரி, இவளும் சரி; கள்ளம் கபடு கனவிலும் நினையாதவள்;—நீ அவளைப் பார்த்த தில்லையே, நாணு: நானும் படித்த பேர், படியாத பேர், அழகுள்ளவர், அழகில்லாதவர், எத்தனையோ பெண்களைப் பார்த்திருக்கிறேன்; அவளைப் போல எவரையுமே கண்ட தில்லை.

நாரா.—அதற் கென்ன, மனங்கொண்டது மாளிகை, உனக்கு; இவளே ரதியும் ஸரஸ்வதியும் லக்ஷ்மியும் சேர்ந்து வந்து அவதாரமானவள் போல், இப்பொழுது தோன்றுகிறது.

கோபா.—அப்படிச் சொல்லாதே, நாணு: உனக்கு அவளைத் தெரியாது; என் மனத்திலுள்ளதை விண்டு காட்டவும் முடியாது. ஆனால், இந்த ஒரு விஷயத்தை மட்டும் கவனித்துப் பார். என் சங்கதிதான் உனக்குத் தெரியுமே; அதிலும், கல்யாணம் செத்துப்போன பிறகு,-சொல்ல வேண்டாம். ஆனால், ஜானகியை—'ஜேன்கே' என்னும் பெயரை, அப்படி எங்களுக்குள் மாற்றிக்கொண்டிருக்கிறோம்—அவளை ஆசுபத்திரியில் கண்டு, அவள் மேல் நான் காதல் கொண்டது முதல், இத்தனை நாளாக, என் பழைய பழக்கங்கள் எல்லாம் தொலைந்தது மட்டுமோ, வேறு எந்த ஸ்திரீயையும் பற்றி நான் சொப்பனத்திலும் நினைத்த தில்லை. இங்கிலீஷ் புஸ்தகங்களில் நாம் உண்மைக்

காதல் என்று வாசித்த தெல்லாம், இப்பொழுதுதான், இவள் விஷயத்தில்தான், எனக்கு விளங்குகிறது. கல்யாணத்தைக்கூட நான் இப்படிக் காதலிக்க வில்லை என்று தான் தோன்றுகிறது.

நாரா.—அறுபதுக்கு மேலே குறுகுறுப்பு!

கோபா.—அறுபதோ எழுபதோ, அதெல்லாம் தெரியாது. எனக்கும் வயசு முப்பத்தைந் தாகப்போகிறது, குழந்தைகளு மிருக்கிறார்கள்; ஆயினும், இந்தக் காதல், இது வரையில் நான் அறியாத ஒன்று, அதன் ஆவேசம் என்னைப் பிடித்துக்கொண் டிருக்கிறது என்பது, கேவலம் சத்தியம்.

நாரா.—ஆனால், ஒரு வேளை, வேறு வழியில்லா விட்டால், இதற்காகக் கிறிஸ்தவனாகி விடுவாயோ? என்ன, பதிலில்லை?

கோபா.—என்ன பதில் சொல்லுகிறது? நம்ம நாட்டிலே, எத்தனையோ ஏழை ஜனங்கள், வயிற்றுப் பிழைப்பு நிமித்தமும்; மற்றவர் உத்தியோகங்கள், பெண்கள் காரணமாயும், கிறிஸ்தவர்க ளாகிவிடுவது, நமக்குத் தெரியாதா? அது புதிதில்லை. ஆனால், நான் அப்படிச் செய்வேனோ என்பது, எனக்கே சந்தேகமா யிருக்கிறது. ஜானகிக்குக் கிறிஸ்து மதத்திலே அதிகப் பற்றுண் டென்று நான் நினைக்க வில்லை; அவள் தாய், பிராமண குலத்தைச் சேர்ந்தவ ளென்று சொன்னேன் அல்லவா; இவளுக்கும் நம்ம பழக்க வழக்கங்களில் தான் அதிகப் பிரியம். இவள் இன்னும் புடைவை தான் உடுத்திக் கொள்கிறாள்; தகப்பனைப்போல, ஐரோப்பியர் உடை தரிப்ப தில்லை.

நாரா.—ஆனால், அவளை ஒரு வேளை பிராமணத்தி ஆக்கி விடலா மென்று பார்க்கிறாயா? அது கூடுவதானாலும், அவளே இசைந்தாலும், அவர் அதற்குச் சம்மதிப்பரா?

கோபா.—அது தான் திகைக்கிறேன். அவர் கிறைஸ்தவப் பழம், பிராமணத் துவேஷி என்றே, சொல்லவேண்

டும். நான் கிறிஸ்தவனானாலும், உடனே இரட்டைச் சம்மதம்; என்னிடத்தில், நேரிலே, அப்படியே தான் கேட்டார்.

நாரா.—நீ கிறிஸ்தவனானாலுமே, அவளைப் பிராமணத்தியாகப் பாவித்து, நீ வீட்டில் வைத்துக் கொண்டாலுமே, உன் குடும்பத்தின் கதி என்னாகும்? அவர்களும் கிறிஸ்தவர் ஆவார்களா? பிராமணர்களா யிருப்பார்களா? குட்டியின் கலியாணம், சாமியின் உபநயனம், எல்லாம் எப்படி? உன் மாமனார் மச்சினர்களை நீ கவனியாவிட்டாலும், சாவித்திரிக்கு என்ன சொல்வாய்!

கோபா.—நம்மகதி நம்ம குழந்தைகளுக்கும் என்று துணிந்துதான், குட்டியின் கலியாணம் இப்பொழு தில்லை என்று, ஒரே பிடிவாதமாய் என் மாமனாரிடம் சொன்னது.

நாரா.—சாவித்திரியோ? அவளும் இசைவளா, அல்லது, அவளை விட்டுப் பிரிய முடியுமா?

கோபாலையர் ஒன்றும் பதிலுரைக்க வில்லை; யோசனையில் ஆழ்ந்திருந்தார். சிறிது நேரத்துக்குப் பின்:—

கோபா.—எனக்குப் பிதிர்ப்போடவா, உன்னிடத்தில் இவ்வளவையும் சொன்னேன்? எனக்குப் புத்தி முட்டாயிருக்கிறது; ஒன்றும் ஓடவில்லை; ஏதாவது வழி யுண்டானால், யுக்தி யுண்டானால், சொல்லு.

நாரா.—நான் என்ன சொல்லட்டும்? எனக்கும் புத்தி முட்டாகத்தா னிருக்கிறது. நம்முடைய ஆசாரச் சீர்திருத்தங்களை யெல்லாம் கடந்து, அப்பால் போவதாயிருக்கிறது, இந்த சங்கதி. ஜாதிபேத மாத்திர மில்லாமல், மதபேதமும் கூடி, ஒரே சிக்கலாயிருக்கிறது. உன் சுபாவத்தை அறிந்து, வேறு கலியாணம் செய்து கொள் என்று நாங்கள் எல்லோரும், உன் மாமனார் மச்சினர்களுங்கூட, கட்டாயப் படுத்தினதை யெல்லாம், நீ ஒரே தீர்வையாய் மறுத்துவிட்டது, அப்பொழுது ஆச்சரியமாயிருந்தது; இப்பொழுது தான், அதன் காரணம் துலங்கு

கிறது. அவ்வளவு பேய்ப்பிடியாக உன்னை இந்தக் காதல் பிடித்துக்கொண் டிருக்கிறது. இத்தனை வருஷங்களாயும் மாறவு மில்லை, குறையவு மில்லை என்றால், இதுதான் உன் கடமை, இதுதான் நியாயம் என்று, ஹிதோபதேசம் செய்ய என் மனம் துணிய வில்லை.

கோபா.—நாணு! இந்த மட்டும் என் மனோ நிலையை அறிந்து நீ இப்பொழுது சொன்னது, எனக்கு எவ் வளவோ சந்தோஷமா யிருக்கிறது. 'இதெல்லாம் கிறுக்கு; உனக்குத் தடிபோல வயசாக வில்லையா? குழந்தைகள் இல்லையா? பைத்தியமா? காதலும் கூதலும் என்ன பேச் சிது!' என்று, தர்மோபதேசம் செய்வா யென்றே பயந் தேன். இத்தனை நாளாக உன்னிடம் இதைப்பற்றி வாய் திறவாததற்கும், இந்தப் பயம் தான் காரணம்.

நாரா.—அது சரி; மேல் என்ன யோசனை? உள்ளதை எல்லாம் விவரமாய்ச் சொல்லி, சாவித்திரியையே கேட்க லாமா? பத்மினியைக் கேட்கட்டுமா? சில சமயங்களில், நம்ம ஸ்திரீகளுடைய மனோ பாவமும் இயற்கை யறிவும், மெத் தப்படித்த நம்ம யுக்திகளைவிட, சிலாக்கியமா யிருப்பதை நான் கவனித்திருக்கிறேன்.

கோபா.—வேண்டுமானால் நீ கேட்டுப் பார்; அவர்கள் என்ன சொல்லப் போகிறார்கள்? 'இப்படியும் உண்டா!' என்று திகைத்து, ஆச்சரியப்பட்டு, என்னை வெறுப் பார்கள்.

நாரா.—அப்படி யில்லை; நீ தெரியாமல் சொல்கிறாய். நான் கேட்டுப் பார்க்கிறேன்.

கோபா.—செய். எனக்கு என்னவோ, அது பிடிக்க வில்லை; இருந்தாலும், வேறு வழி ஒன்றும் இல்லாததால், அப்படியும் செய்து பார்க்கலாம். உன் ஆமுடையாள், ஒரு வேளை, எப்படி நினைப்பளோ; சாவித்திரி அக்காள், ஒரு நாளும், இப்படி எதற்கும் இசைய மாட்டாள்.

அன்றிரவு, நாராயணையர், தன் மனைவி யிடத்தில்

விவரங்களை மெதுவாய் வெளிவிட்டு, அவள் அபிப்பிரா யத்தை அறிய முயன்றார். அதைக் கேட்டவுடன், 'பார்த் தாயா!. நான் அப்பொழுதே சொல்ல வில்லையா? அவர் எப்பொழுதும் போலில்லை; ஒரு மாதிரியாக மாறி யிருக் கிறார் என்று, எனக்கு வெகு நாளாகத் தோன்றிற்று" என்று சொல்லி, பத்மாவதியம்மாள் கெக்கலித்தாள்.

நாரா.—அதிருக்கட்டும், பத்மி, நீ மகா புத்திசாலி; ஜோஸ்ய சிகாமணி என்று வேண்டுமானாலும் வைத்துக் கொள்வோம். உன் அபிப்பிராயம் என்ன? இந்த தர்ம சங்கடத்திலே அவன் என்ன செய்யலாம்? எது சரி?

பத்மா.—சரியாவது பவழமாவது! அவர் என் றைக்குத் தான், எல்லாரையும் போல, நேரே யிருந்தார்? அவள் இருக்கிறபோதே, சாலா என்றும் கிலா என்றும் தன்னிஷ்டம் போல் திரிந்து, அவள் பாவத்தைக் கொட் டிக்கொண்டார். அதுதான் பாதி மனோ வியாதி, அவ ளுக்கு; அவளும் போய்விட்டாள், தாலியோடு; அந்த மட்டும் மகாராசிதான் இனிமேல் இவருக் கென்ன? என் னைக் கேட்டால், இன்னும் கண்ட முண்டைகளை யெல்லாம் கட்டி யழுது சீரழிந்து போகாமல், ஊர் சிரிக்காமல், இவளைப் பிடித்திருந்தால், இவளோடு சுகமாய் வாழலாம். ஸ்திரீ புருஷன் என்றிருந்தால்,மனம் ஒத்து,ஸந்தோஷமா யிருக்க வேண்டும்; ஊருக்கும் பேருக்கும் வெளிக்கு மட்டும் மெய்ப்பித்து, உள்ளுக்குள் அன்பும் ஸந்தோஷமு மில்லாத வாழ்வு, என்ன வாழ்வு!

நாரா.—நீ என்ன, முன் பின் யோசியாமல் பேசு கிறாய், பத்மி: இவள் ஒரு கிறிஸ்தவச்சி, பெற்ற தகப்ப னோ, துரையாய் இலங்குகிறார். இவளைக் கலியாணம் செய்து கொண்டால் மட்டும் ஊர் சிரிக்காதா? இவன் ஒரு வேளை கிறிஸ்தவனாகி விட்டால், அப்புறம்,இவன் குழந்தை கள் குடும்பம் எல்லாம் என்ன வாகும்?

பத்மா.—இப்பொழுது சந்தியும் ஜபமும் விபூதியும்

பழுக்கிறது! அல்லது, உதய சாயங்கிரம் ஸ்வாமி தரிசனமும் கோவிலுக்குப் போகிறதும் தப்பாதாக்கும்! அல்லது, சூத்திரர் கூடவும் துரைமார் கூடவும் பறையன் சமைத்ததையும் சாப்பிடுகிற தில்லையோ? கிறிஸ்தவன் என்று இவர் பேரை மாற்றிக் கொண்டுவிட்டால், இப்பொழுதை விட என்ன கெட்டுப்போகப் போகிறது? குழந்தைகள் பாடு கஷ்டந்தான்; திரிசங்கு ஸ்வர்க்கம் ஆகிவிடும். குட்டியை முதலிலே கட்டிக் கொடுத்துவிட்டால், அல்லது மாமனுரிடத்திலே ஒப்பித்துவிட்டால், அதுவும் அவ்வளவு அவஸ்தையா யிராது. எப்படியோ, கொஞ்ச நாளாவது, இவர் மனசுக்கு ஸந்தோஷமாய், யோக்கியமாய், இருப்பரோ இல்லையோ? இவர் கிறிஸ்தவராகாதபடி, அவள் இவரோடு வந்திருப்பள் என்ருல், இன்னும் இலை சாய்ப் போய்விடும். நீ சொல்கிறதைக் கேட்டால், அவள் அப்படிச் சம்மதிப்பள் என்று தோன்றுகிறதே?

நாரா.—அவளுக்கும் இவன் மேலே கனத்த கிறுக்காம். இவர்களுக்கு அநுகூலமாக, ஒரு குண்டுணிக்காரியும் ஏற்பட்டிருக்கிருள் போலிருக்கு;—எப்படியாவது இவர்கள் இரண்டு பேரையும் சேர்த்து வைத்துவிட வேண்டு மென்று, அவள் பார்க்கிருள். ஆனாலும், குட்டி, நீ சொல்வது எனக்கு ஆச்சரியமா யிருக்கு; நீ இவ்வளவு விசாலமான நோக்கத்தோடு, தாராளமான மனத்தோடு பேசுவாய் என்று, நான் நினைக்க வில்லை.

பத்மா.—பூவோடு சேர்ந்த நாரும் கொஞ்சம் மணமிராதா? அத்தானோடு இத்தனை நாளாகப் பழகினதற்கு இவ்வளவாவது வேண்டாமா?

நாரா.—அத்தானுக்கு இவ்வளவு மனத்தாராளம் இல்லையே, பயமா யிருக்கிறதே. நீ என்னோடு இத்தனை நாள்களாய்ப் பழகி யிருப்பது போலவே, சாவித்திரியும் என்னோடும் கோபுவோடும் பழகி யிருக்கிருள். அவள் இதற்குச் சம்மதிப்பாள் என்று நீ எண்ணுகிருயா?

பத்மா.—சாவித்திரி அக்காளா? அவர் மாதிரி வேறு; அவர் கைம் பெண்டாட்டி; ஜபம் தபம் விரதம் கோயில் குளம் என்று, நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது. எப்படி யாவது தன் தம்பி சந்தோஷமாய், கண்டபடி நடந்து கெட்டுப் போகாமல், வாழவேணு மென்ற ஆசை நிரம்ப உண்டு. நல்ல பெண்ணைப் பார்த்துக் கலியாணம் பண்ணி வைத்துவிட வேணு மென்று, அவராலான மட்டும் தலை கீழே நின்று பார்த்தார்; அது பலிக்கவில்லை. ஒரு வேளை, தம்பி மனசு இப்படிப்போய் விழுந்திருப்பது தெரிந்தால், அவரும் கூட, ஒரு விதமாய், சம்மதிப்பரோ, என்னவோ; அவர் சங்கதியை நான் நிச்சயமாய்ச் சொல்லமாட்டேன்.

நாரா.—நீ மெதுவாய் நாளைக்குக் கேட்டுப் பார்க்கிறாயா? நானே கேட்கிறேன் என்று, கோபுவிடம் சொன்னேன்; நான் கேட்பதைவிட நீ கேட்பது சுலபம்; என்னிடத்தில் விட உன்னிடத்திலே, பெண்டுகளுக்குள்ளே, மனசில் உள்ளதைத் தாராளமாய் விட்டுச் சொல்லுவள்.

பத்மா.—நான் கேட்கிறதா? அவர் என்ன நினைப்பரோ, என்ன சொல்லுவரோ?

நாரா.—உனக்கென்ன பயமா? அல்லது, அவளை அறியாதவளா? உன்னை என்ன சொல்லப் போகிறாள்? சும்மா கேள்; அவன் என்னிடம் சொல்லி, நான் உன்னைக் கேட்கச் சொன்னேன் என்றே கேள்.

பத்மா.—ஆகட்டும், கேட்டுப் பார்க்கிறேன். அவர் என்ன சொன்னாலும், ஒரு வேளை தன் தம்பியின் சந்தோஷத்தை உத்தேசித்துச் சம்மதித்து விட்டாலுமே, ஒரு நிமிஷமேனும் அப்படிப்பட்ட வீட்டில் அவரும் கூட இருக்க இணங்க மாட்டாரென்பது மாத்திரம் நிச்சயந் தான். செக்கடியும் தம்பூருமா யிருக்கும்.

நாரா.—அந்த விஷயம் பின்னால் பார்த்துக் கொள்ளலாம், முதலிலே அவள் அபிப்பிராயம் தெரியட்டும்.

## பதினுன்காம் அதிகாரம்

"என் மகள், சின்னஞ்சிறு பிள்ளை, நேற்றுப் பிறந்தவள், நானே தகப்பனும் தாயுமாயிருந்து வளர்த்த பெண், எனக்கே தர்மோபதேசம் செய்கிறதா! இம்! என் சொல்லை மீறி,— இவ்வளவுக்கு வந்து விட்டதா? இவள் இப்படி நடப்பாளென்று நான் சொப்பனத்திலும் நினைக்கவில்லையே! ஒரே பிள்ளை, அதுவும் தாயில்லாப் பிள்ளை என்று, நான் எவ்வளவு,—வளர்த்த கடாவே மார்பிலே பாய்ந்தாற்போல,—"

இவ்வாறு புலம்பிப் பெருமூச்சு விட்டு, தன் அறையில் உலாவிக் கொண்டிருந்தார் தாமஸ் கே. அவர் கையில், அன்று காலை ஜானகி எழுதி, மேஜையின் மேல் வைத்துப் போன ஒரு கடிதம் இருந்தது. பாக்கியம் ஒரு நாற்காலியின் பின்புறத்தைப் பிடித்துக்கொண்டு வாய்பேசாது, அவரைக் கவனித்த வண்ணமாய் நின்றுள். "நீ பார்த்தாயா? உனக்குத் தெரியுமா இது?" என்று, திடீரென அவளை நோக்கி அவர் கேட்டார்.

பாக்கியம்—ஆம், என்னிடத்தில் காட்டினுள்; நானும் பார்த்தேன்.

கே—ஆனுல், உனக்கும் இது சம்மதம் தானு? என்ன, பதி லில்லை?

பாக்கியம்—நான் என்ன பதில் சொல்லட்டும்? அவள் குழந்தையா? அல்லது, நான் அவளுக்குப் புத்தி சொல்லும்படி,—இந்த வீட்டிலே,—என் ஸ்தானம்,—மொத்தத்தில் அவள் பாக்கியசாலி: அவள் ஆசை வைத்தவர் அவள் மேலே உயிராயிருக்கிருர். அவர் மட்டும் அஞ்ஞானியா யில்லாவிட்டால், சத்திய மார்க்கத்தில் சேர்ந்துவிட்டால்—சேரவும் செய்வர். அவள் மீதுள்ள காதலுக்கு, சேரவே செய்வர்; தாங்கள் பிடிவாதமாய், சமாதானமாய், வற்புறுத்திச் சொன்னுல்,—இல்லாவிட்டால் காரியம் முடியா தென்று சொல்லி விட்டால், சேர்ந்து விடுவர்.

கே—நான் கேட்டதற்கு, அவன் தான் ஒரே முடிவாய் மறுத்து விட்டானே. இவள் இன்று சாயங்காலம் வருவதாகவா சொல்லிப் போனுள் ?

பாக்—ஆம் ; 'மாலை ஐந்துமணி ரெயிலில் திரும்பி வந்து விடுகிறேன் ; ஐயாவிடம் சொல் ; சௌகரியப் பட்டால் ரெயிலுக்கு வண்டி யனுப்பு ; இல்லாவிட்டால், வாடகை வண்டியில் வந்து விடுகிறேன். ஐயா அவர்கள் என் கடிதத்தைப் பார்க்கும்போது, நான் இருப்பது சரியாகாது. நான் பறங்கிமலை போய் மேரியைப் பார்த்துவிட்டு வருகிறேன் ; அவள் பல நாள்களாக வரச்சொல்லி எழுதிக் கொண்டிருக்கிருள்,' என்று சொல்லிப் போனுள்.

கே—எல்லாம் ஏமாற்றோ என்னவோ ? ஒரு வேளை அந்தப் பார்ப்பானும் இவளும் எங்கேயாவது ஓடிப்போய் விட்டார்களோ என்னவோ ? எனக்கே இவ்வளவு எழுதினவள், இன்னும் என்ன தான் துணியமாட்டாள்! எங்கே, என் வண்டியைப் போடச் சொல்லு ; நான் போய் உண்மையை அறிந்து வருகிறேன்.

பாக்—இதற்காக, இந்த வெயிலில் நீங்களே ஏன் போக வேண்டும் ? சாமிநாதனை அனுப்பி, டாக்டர் கோபாலையரை அழைத்துவரச் சொன்னுல், உண்மை துலங்கி விடுகிறது. தாங்கள் ஒரு வார்த்தை யனுப்பினுல், இந்த வீட்டுக்கு வருவதாயிருந்தால், குதிபோட்டுக்கொண்டு ஒரு நிமிஷத்திலே ஓடி வருவரே அவர்.

கே—சரி, சாமிநாதனைப் போய், நான் கூட்டிவரச் சொன்னேனென்று அழைத்துவரச் சொல். இன்னொரு முறை, அவனையும கடைசியாய்க் கேட்டு விடலாம்."

"அதுதான் சரி" என்று சொல்லிக் கொண்டு, பாக்கியம் வெளிச் சென்ருள். தாமஸ் கே, தன் கையிலிருந்த கடிதத்தை, பத்தாவது தரம் என்கலாம், மீண்டும் படிக்கலானுர். அதை வாசிக்கும்பொழுது, அவர் முகத்தில் சினக்குறிகளோடு கர்வக் குறிகளும் இடையிடையே

தோன்றின. அப்பனுக்கு மகள் இங்கிலீஷில் எழுதின அந்தக் கடிதத்தில் சில பகுதிகளைக் கீழே மொழிபெயர்ப் போம் :—

"நன்றியறி வில்லாதவள், தங்கள் மீது அன்பில்லாதவள் என்று, என்னை ஒரு கணமும் தாங்கள் எண்ணக்கூடாது. தங்க ளுக்காக என் உயிரையும் மனமுவந்து விடுவேன் என்பதைக் கட வுள் அறிவார். இதை ஒரு பெருமையாகவும் நான் கூற வில்லை; என் கடமையே அது. ஆனால், தங்களுக்கு நான் செலுத்த வேண் டிய கடமை போலவே, எனக்கே நான் செலுத்தவேண்டிய கடமைகளும் சில உண்டென்று, தாங்களே கற்பித்திருக்கிறீர் கள். என் மனச்சாக்ஷிக்கு விரோதமாய் நடவாமலிருப்பதே இவை களில் முதற்கடமை. என் உடல் உள்ளம் ஆவி எல்லாம் ஒருவரை நாட, நான் வேறொருவரை மணப்ப தெப்படி? வேதக் கோயிலிலே, தேவ பீடத்தின் முன்பாக நின்று, "உம்மையே நேசித்து, உம்மை யே கௌரவித்து,உம் சொற்படியே நடக்கிறேன்"என்றுவேறொரு வருக்கு நான் சபதம் செய்து கொடுப்பதெப்படி ? வேண்டுமாயின், தன் மனத்தை யடக்கிக்கொண்டு, தனக்குப் பிடியாத ஒருவர் சொற்படி நடந்து விடலாம்; அவரை நேசிப்பதும் கௌரவம் செய்வதும் எப்படி முடியும்? * * * "தர்ம சங்கடம் இப்படிப் பட்ட தென்பது எனக்கு இதுவரை தெரியாது. நாம் இருவரும் சேர்ந்து டெனிஸன் கவியன் பாடல்களைப் படிக்கும்போது ஒருநாள், "காதலும் கடமையும் மோதுறும் காலத்தில் கஷ்டமே" என்று அவர் கூறுவதைப் பற்றி, நமக்குள் ஒரு சிறு விவாதம் நடந் தது தங்களுக்கு ஞாபகமிருக்கலாம். ஏதோ குயுக்தியாக், வாதத் திற்காக பேசினேனே யன்றி, அப்பொழுது அதன் பொருள் எனக்கு விளங்க வில்லை; இப்பொழுது தான் தெரிகிறது. இதனி னும் பெரிய சங்கடம், இதனினும் கொடிய மன வுளைச்சல் வேறில்லை.

"தங்கள் சொல்லை மீறி, என் இஷ்டப்படி நடக்க நான் விரும்ப வில்லை. என் உயிர் போவதாயினும், தங்கள் மனத்தைப் புண்படுத்த நான் துணிய மாட்டேன். ஒன்று, தாங்கள் சம்மதித் தால், என் மனம் பிடித்த காதலரை நான் மணம்புரிகிறேன்; அல்லது, எப்பொழுதும் தங்கள் குழந்தையாகவே, தங்களோடிரு ந்து விடுகிறேன். உலக வாழ்க்கையில் காணும் கஷ்டங்களைக்

கவனித்தால், இதுவே மேலெனத் தோன்றுகிறது. என்மனம் பொய்க்காமல், என் மனச்சாக்ஷியே என்னைச் சுடும்படி செய்யாம லிருக்கும் ஒரு வரனைத்தான், நான் தங்களிடம் பிரார்த்திக்கி றேன். தாங்கள் கற்பித்த சீலமும் சத்தியவிரதமும் கடமைப் பற் றுமே என்னை இவ்விஷயத்தில் தூண்டுகின்றன. தாங்கள் இதை மறுக்கமாட்டீர்களென்று மனப்பூர்வமாய் நம்புகிறேன்

"ஒருவேளை கொஞ்சம் பொறுத்திருந்தால், என் காதலரே தங்கள் இஷ்டப்படி யிசைந்து, நம் மார்க்கத்தைச் சேரக்கூடும். அப்படிக்கானால், தங்கள் மனம் நோகாமலே என் மனோபீஷ்ட மும் நிறைவேறக்கூடும். ஆதலால், இப்பொழுது இந்த வரனைப் பற்றி என்னை நிர்ப்பந்தஞ் செய்யாமல், தாங்கள் நிச்சயித்திருக்கும் விவாகத்தை நிறுத்தி, பொறுமை செய்ய வேண்டுகிறேன். என் னால் இதற்கு இணங்க முடியாது. ஹிந்துக்களுட் போலச் சிறு வயதிலேயே என்னை ஒரு மாப்பிள்ளைக்குக் கட்டிக் கொடுத்திருந் தால், அது ஒருவேளை சந்தோஷகரமாய் முடிந்திருக்கலாம். அல் லது, என்மனம் வேறொருவரை நாடாமலிருந்தாலும், ஒருவேளை, தங்களைத் திருப்தி செய்யும்பொருட்டு இதற்கு இசைந்து,பின்னால் ஒருவாறு சரியாகிவிடலாம் இப்பொழுதோ, என் மனமார நான் வேறொருவரை எப்படி மணப்பது? தாங்களே என் மேல் கருணை செய்து, சிறிது ஆலோசித்துப் பாருங்கள். * * *"

டாக்டர் கோபாலையரை அழைத்து வரும்படி சாமி தாஸை அனுப்பிவிட்டு, பாக்கியம், அந்த அறைக்குள் திரும்பி வந்தாள். அப்பொழுது,கே, தன் நாற்காலியில் வீற் றிருந்து கடிதத்தைப் படித்துக் கொண்டிருந்தார். அவள் வந்தவுடன் வேறொன்றும் பேசாது, மேஜையின் எதிர்ப் பக்கத்தி லிருந்த நாற்காலியைச் சுட்டிக்காட்ட, அவள் அதில் உட்கார்ந்துகொண்டு, அவர் பேச்சை எதிர்பார்த்து, அவர் முகக் குறிகளைக் கவனித்துக் கொண்டிருந்தாள். அப்பால் பின்வரும் சம்பாஷணை நடந்தது:

கே.—ஒருவேளை அவன் நம்ம மார்க்கத்தைச் சேரலா மென்று எழுதுகிறாளே, அப்படி ஏதாவது பேச்சுண்டோ? உனக்குத் தெரியுமா?

பாக்கியம்—எனக்கு விவரம் தெரியாது; ஆனால் அவருக்கு இவள் மேலிருக்கிற காதலுக்கு, வேறு வழியில்லாவிடின், அவர் அப்படிச் செய்வரென்றே நினைக்கிறேன். எவரானாலென்ன, மனதுக்கு பிடிக்கவேண்டும், யோக்யரா யிருக்கவேண்டும்; இந்த இரண்டுமிருந்து, உண்மைக் காதலும் இருந்தால்,—(பெருமூச்செறிந்து) இவள் பாக்கியமே பாக்கியம்!

கே—உன் பேர் அன்றோ. பாக்கியம்?

பாக்—ஆ! இவள் நிறை பாக்கியம், நான் நிர்ப்பாக்கியம் என்னலாம்.

கே—ஏன், உனக் கென்னகுறை? நீ இப்படி மனக்கிலேசப்படுவதை இரண்டு மூன்று தடவை கவனித்திருக்கிறேன். என்ன காரணம்? உனக்கு யார் மேலாவது காதலுண்டா? நீ நேசிக்கிறவர் உன்னைக் காதலிக்க வில்லையா?

பாக்கியம், உடனே தன் முகத்தைத் தன் முன்தானையால் மூடிக்கொண்டு, "நீங்களே,—இப்படி,—கேட்டால், நான்,—நான்,—என்ன சொல்லட்டும்,—எப்படியாவது,—சாகவேண்டியதுதான்" என்று அரிதிற் கூறி, விம்மி விம்மி அழத் தொடங்கினாள். அதைக் கண்டவுடன், தாமஸ் கே, "ஏன் அழுகிறாய்? எதற்காக அழுகிறாய்? என்னால் கண்ணீரைப் பார்த்திருக்க முடியாது" என்று சொல்லிக் கொண்டு எழுந்து, அவள் அருகிற் சென்று, அவள் முகத்தைத் திறந்து, அவள் கண்ணீரைத் துடைத்துத் துக்கத்தை யாற்ற முயன்றார். அப்பொழுது அவளும் எழுந்து நின்று, "ஆனால், உங்களுக்கும் என் மேல் கருணையிருக்கிறதா? ஆனால் நான் பாக்கியம் தான்!" என்று சொல்லி அவரைக் கட்டி யணைத்துக் கொண்டு, கண்ணீரும் புன்சிரிப்பும் கலந்திலங்கும் தன் முகத்தை அவர் மார்பில் மறைத்துக்கொண்டு, மெதுவாய்க் கொஞ்சலானாள். இப்படி இவர்களிருவரும் தனித்திருக்கும் சமயத்தில், பாக்கியத்தின் தாய் தேவநேசம்மாள் என்பவள்,

வீட்டில் வேலைக்கார னில்லாததால், தபால்காரன கொண்டு வந்த இரண்டு கடிதங்களைக் கையிலேந்திக்கொண்டு, அந்த அறைக்குள் பிரவேசித்தாள். தன் மகளும் கேயும் இருக்கும் நிலையைக் கண்டவுடன், அவள் ஒரு நிமிஷம் ஸ்தம்பித்து, தாண்டிய வாசற் படியின் அருகே நின்றுவிட்டாள். அவளைப் பார்த்தவுடன், கே, தன்னை விடுவித்துக் கொள்ள முயன்றார்; ஆனால், தன் தாய் வந்ததைக் கவனியாத பாக்கியம், அவரை விட்டு விடாமல் இறுகத் தழுவி, "இப்பொழுதான் நான் பாக்கியம்" என்று சொல்லிக்கொண்டே, அவரை முத்தமிட்டாள்.

"விடு; உன் தாய் வந்திருக்கிறது தெரியவில்லை?" என்று சொல்லி, மீண்டும் கே திமிறித் தன்னை அவள் ஆலிங்கனத்தி லிருந்து விடுவித்துக் கொண்டார். தன் தாயைப் பார்த்தவுடன், பாக்கியம் சிறிது முகங்கோட்டி முறுவலித்து நாணங் காட்டினாள் எனினும், வெட்கத்திலும் சந்தோஷமே அவள் முகத்தில் அதிகம் பொலிந்தது.

முதலில் திகைத்துத் தியங்கி நின்ற தேவ நேசம்மாள், அப்பால் முகமலர்ந்து இரண்டடி முன்வந்து, "கடவுள் உங்களுக்கு ஆனந்தத்தை அளிப்பாராக! அவர் கிருபையை உங்கள் மேல் பொழிவாராக!" என்று வாழ்த்தினாள். •பாக்கியம் மாத்திரம், தன்னை யறியாமலே, "ஆமென்!" என்று ஒத்துப் பாடினாள். கே, பதிலொன்றும் கூறாமல் நின்றுவிட்டு, பிறகு, "தபால் வந்ததா? கடிதங்கள் எங்கே?" என்று கையை நீட்ட, அவர் கையில் தான் கொண்டுவந்த கடிதங்களைக் கொடுத்து விட்டு, தேவநேசம்மாள், திகைத்துத் திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு, மெள்ள வெளியே போய் விட்டாள். தபாலில் வந்த கடிதங்களை வாசிப்பதில் கே ஆழ்ந்தவராய்க் காண, புதியதோர் உரிமையுடன் அவர் அருகு சென்று, "கடிதங்களில் ஏதாவது விசேஷ முண்

டார்?" என்று கேட்டுக்கொண்டு, பாக்கியம், அவர் தோளின் மேல் தன்கையை வைத்தாள். அவர் திடுக்கிட்டவர் போல் விழித்து, "என்ன? என்ன கேட்டாய்?" என்றார்.

பாக்—இல்லை, இவ்வளவு கவனத்துடன் படிக்கிறீர்களே: கடிதத்தில் ஏதாவது விசேஷமுண்டோ, யார் கடிதம், என்று கேட்டேன்.

கே.—கடிதமா? இந்தக் கடிதம் அந்தப் பார்ப்பானிடமிருந்து வந்திருக்கிறது. ஜேனைப்பற்றி எழுதியிருக்கிறான் அவன்.

பாக்கியம்—என்ன எழுதியிருக்கிறார்? எங்கே, நான் பார்க்கலாமா?' இனிமேல் என் மகளை ஜேன்; அவள் க்ஷேமத்திலும் சந்தோஷத்திலும், உங்களைவிடக்கூட அதிகமான அக்கறையும் கவலையும் எனக்குண்டல்லவா? என்ன, ஒன்றும் பதில் பேசாமல் இருக்கிறீர்கள்? இவள் ஒருத்தி நமக்கும் நம் மகளுக்கும் இடையே வந்துவிட்டாளே என்று வருத்தம் உண்டோ?

தாமஸ் கே, இதற்கும் நேரான பதில் கூறவில்லை. ஏதோ முணுமுணுத்துக்கொண்டு, தான் படித்து முடிந்த கடிதத்தைப் பாக்கியத்தின் கையில் கொடுக்க, அவள் அதை வாங்கி வாசிக்கலானாள். கே, தபாலில் வந்த மற்றொரு கடிதத்தைப் பிரித்து வாசிக்கத் தொடங்கினார். இவ்வாறு இருவரும் கடிதங்கள் வாசித்துக் கொண்டிருக்கையில், சாமிதாஸ் என்ற வேலையாள் அறைக்குள் வந்து நின்றான். கே தான் அவனை முதலில் கவனித்தார்.

கே—என்ன வேண்டும்? எங்கே வந்தாய்?

சாமி—போய்ப் பார்த்தேங்க; டாக்டர் ஐயர் வீட்டிலில்லை; ஆசுபத்திரிகுப் போயிருக்கிறாராம். வந்தவுடனே வரச்சொல்கிறேன் என்று, ஒரு மொட்டைப் பாப்பாத்தியம்மா, சொன்னாங்க; நம்ம பங்களா விலாசத்தையும் துரை பெயரையும் எழுதி வைத்துவிட்டு வந்தேங்க.

கே—ஓ! ஆ,—சரி தான், போ.

சாமி—அந்தப் பாப்பாத்தியம்மா நம்ம மிஸ்ஸியைப் பற்றி யெல்லாம் கேட்டாங்க.

பாக்கியம்—என்ன கேட்டார்கள்?

சாமி—யாருக்கு என்ன உடம்பு; ஐயரை மிஸ்ஸி வரச்சொல் லிச்சா, துரைவரச் சொன்னார்; மிஸ்ஸிக்கு வயசு என்ன; கறுப்பா, சிகப்பா; உயரமா, கட்டையா; பார்க்க நல்லா யிருக்குமா, என்றெல்லாம் கேட்டாங்க.

பாக்கியம்—(கேயைப் பார்த்து) வீட்டில் எல்லாருக் கும் சங்கதி தெரியும் போலிருக்கு.

கே—வீட்டில் யார் அந்த அம்மா?

பாக்—அவர் உடன் பிறந்தாள் என்று நினைக்கிறேன்.

பாக்—இன்னொரு பாப்பாத்தியும்கூட இருந்தாங்க. அடுத்த வீட்டு அம்மா போலிருக்கு; வாளுகிற பெண்; அது தான் மிஸ்ஸியைப்பற்றி நிரம்பக் கேட்டுது." தாமஸ்கே இங்கிலீஷில்ஏதோ முணுமுணுத்துக் கொண்டு "சரிதான், போ" என்று சாமிதாஸனை அனுப்பி விட்டார்.

பாக்—அவர் எழுதியிருக்கிறது சில இடங்களில் எனக்கு விளங்க வில்லை. ஆனல்,—

கே—அதிருக்கட்டும்; வண்டியைப் போடச்சொல்; நான் இதோ உடுத்திக் கொண்டு வருகிறேன். எனக்குச் சந்தேகமாயே இருக்கிறது. நான் போய்ப் பார்த்து வர வேண்டும்" என்று சொல்லிக்கொண்டு, தான் உடுத்திக் கொள்ளும் அறைக்குள் போய் விட்டார்.

## பதினைந்தாம் அதிகாரம்

தாமஸ் கே வண்டியில் வெளிச்சென்ற பின்பு, தேவ நேசம்மாள் தன் மகளுடன் பேச வந்தாள். பரம ஏழை யும் படிப்பில்லாதவளும் சாதுவுமான தன் தாயை, பாக்கி யம், என்றுமே தயவு தாக்ஷண்யம் மரியாதைகளோடு நடத்துவ தில்லை. தனக்கு ஏதாவது அவளால் காரியமாக வேண்டியிருந்தால், பக்ஷமாய்க் கொஞ்சிப் பரிந்து பேசு

வாள்; மற்ற வேளைகளில், சாதாரணமாக, அலக்ஷியஞ் செய்வதே வழக்கம். தன் மகளுக்கு நேரப்போகும் பெரும் பதவியையும் நல்லதிர்ஷ்டத்தையும் எண்ணி மனம் பூரித்து மகிழ்ந்து, தான் அன்றுவரை அதைப் பற்றிக் கனவிலுமே சமுசயிக்கா திருந்தது தன் புத்திக் குறைவே என்று கருதி, இப்பொழுது விஷயத்தை விவரமாய்த் தெரிந்து கொள்ளும்படி மகளிடம் பேச வந்தாள். ஆனால், பாக்கியம் தன் தாயோடு முகங்கொடுத்துப் பேசாமல், ஏதோ சில சினந்து கூறி, கண்ணீர் வடித்துத் திரும்பும்படி அவளை அனுப்பிவிட்டு, தன்னந்தனியே ஜேன் கேயின் அறையிற்போயிருந்து, சிந்திக்கலானாள். தாமஸ் கே, அவராகத் தன் மீது காதல் கொள்ளாமல், தானே அவரைக் கண்ணி வைத்துப் பிடித்த விஷயத்தை, அவள், தனக்கே தன் மனத்திற்குள் தெளிவாய் ஒப்புக்கொள்ளவில்லை. அவர் தன் மீது காதல் கொண்டதாகவே எண்ண முயன்றாள். அன்றியும், அன்று நடந்ததையும், அதைத் தன் தாய் கண்டு தம்பதிகளை ஆசீர்வதித்ததையும் நினைந்து, 'அவர் இனிப் பின்வாங்க மாட்டார்; ஒரு வேளை பின் வாங்கப் பார்த்தாலும், தான் பகிரங்கமாய் விடாது தொடரலாம்' என்று துணிந்தாளாயினும், அதன் பின் அவர் நடத்தை, அவள் மனத்தில் கவலையை உண்டுபண்ணிற்று. நெடுநாளாய்த் தான் கண்ணும் கருத்துமாய் நாடிவந்த கொம்புத் தேன், இன்று கைக்கெட்டியது, ஒரு வேளை வாய்க்கெட்டாமற் போய்விடுமோ என்று பயப்பட்டாள். பின்வாங்க முடியாதவாறு எப்படி அவரைப் பிணித்துக் கைகொள்வது என்று ஆலோசித்தாள். ஜேன் கே திரும்பி வந்தவுடன், அவளிடம் சொல்லிக்கொள்வதே முதல் யுக்தி என்று தீர்மானித்தாள்.

மூன்று மணிக்கு வெளியே சென்ற தாமஸ் கே, மணி ஐந்தாகியும் வரவில்லை. அவராவது, அவர் மகள் ஜேனாவது வருவதை எதிர்நோக்கிப் பாக்கியம் ஆத்திரப்பட்டுக்

கொண்டிருக்கும் தறுவாயில், வீட்டு முன் வாயிலில் ஒரு பைஸிக்கில் மணி யோசை கேட்டது. பாக்கியம் விரைந்து போய்ப் பார்க்க, டாக்டர் கோபாலையர் வந்து சேர்ந்தார்.

பாக்கியம்—வாருங்கள், டாக்டர்: நீங்கள் துரையைப் பார்க்க வில்லையா? உங்களைத் தேடியே, உங்கள் வீட்டுக்கே அவர்கள் சென்றார்கள்.

கோபா—காலை பத்து மணிக்கு வெளியே போனவன், இப்பொழுது பத்து நிமிஷத்துக்கு முன்புதான் வீட்டுக் குத் திரும்பிவந்தேன்; வீட்டிலே கேள்விப்பட்டு, உடனே வந்தேன். யாருக்கும் உடம்பு அசௌகரிய மில்லையே? என்ன விசேஷம்? யாருக்காவது உடம்பு அசௌக்கிய மானாலும், என்னை அழைப்ப தில்லையே. அவள் எங்கே? ஜானகி எங்கே?

பாக்—அதைக் கேளுங்கள்! எப்பொழுதும் அவள் மேல்தான் நாட்டம் உங்களுக்கு; வேறு யார் எக்கேடு கெட்டாலும் கவலை யில்லை; வீட்டிலே பெரியோர்கள் தய விருந்தால் தானே அவள் கிடைப்பாள் என்ற எண்ணங் கூட, உங்களுக்கு இல்லை.

கோபா—உங்களுக் கென்ன, எப்பொழுதும் கேலி தான். ஜானகி எங்கே? அவர் எங்கே?

பாக்—அவர் மூன்று மணிக்கு உங்களைப் பார்க்கத் தான் வண்டியில் போனார்; இன்னும் திரும்பி வர வில்லை. ஜேன்,—அதோ வருகிறாள்.

இந்தச் சமயத்தில் ஜேன்கே ஒரு குதிரை வண்டியில் வீட்டு முன் வாசல் வந்து சேர்ந்தாள். உடனே கோபா லையர் குதித்தோடிப்போய்க் கை கொடுத்து அவளை வண்டியிலிருந்து இறக்கி, அவளுடன் பேசிக்கொண்டே பாக்கியமிருந்த முன் வராந்தாவுக்குத் திரும்பிவந்தார். ஆயிரம் வினாக்களையும் விடைகளையும் ஒன்றின்பின் ஒன்றாய்ச் சரமாரி பொழிந்தாற்போல, சில சொற்களில்

அடக்கிய காதலர் இருவரின் பேச்சின் பரபரப்பையும், அவர்கள் நெஞ்சு படபடத்ததையும் எப்படிக் கூறுவது? ஜானகியின் கேள்விகளுக்குப் பதிலாக, அவள் கடிதத்தைப் பற்றிய விவரங்களையும், அவள் தந்தை வெளிச் சென்றிருப்பதையும், தன்னைப் பற்றிய விஷயத்தைத் தவிர மற்றெல்லாவற்றையும், பாக்கியம்கூறக் கேட்டு, ஜானகி ஆச்சரியப்பட்டு: "நாங்கள் இருவரும் ஓடிப் போய் விட்டோம் என்று - ஐயா - நினைத்தார்கள்? ஒளித்தோடி விட்டோம் என்று? சீ! நீ சும்மா கேலி பண்ணுகிறாய் போலிருக்கு! அவர்கள் ஒரு நாளும் அப்படிச் சமுசயிக்கமாட்டார்கள்.

பாக்கியம்—அப்படி ஒருநாளும் நடவாதென்று நான் சொல்லியும் கூட, அவர்கள் நம்பவில்லையே. முதலில் புறப்பட்டார்கள்; சாமி தாஸை யனுப்பி இவர்களை அழைத்து வரச் சொல்லலாமென்று, நான்தான் சொன்னேன். அதற்குச் சம்மதித்தார்கள். இவர்களும் வீட்டி லில்லை என்று அவன் வந்து சொன்னவுடன், அவர்கள் சமுசயம் முற்றிவிட்டது. உடனே வண்டியைப் போட்டுக்கொண்டு, நேரில் போய்ப் பார்த்து வருகிறேன் என்று போய்விட்டார்கள். இன்னும் வரவில்லை.

ஜேன்—நாங்கள் ஓடிப்போய்விட்டோம் என்று!

பாக்—ஏன், அதனால் என்ன? உலகத்திலே நீங்கள் தானா இதுவரையில் காதலுக்காக முதல் முதல் ஓடிப் போகிறவர்கள்? அல்லது, நீங்கள் அப்படி ஏதாவது செய்தா லன்றி, உங்கள் காரியம் கைகூடப் போகிறதோ. அதில் என்ன உனக்கு இவ்வளவு ஆச்சரியம்? ஏன், டாக்டர், நீங்கள்தான் சொல்லுங்களேன்.

கோபா—என்ன, ஜானகி, ஓடிப்போவோமா? பைஸிக்கில் பின் காரியரிலே ஏறிக்கொள்கிறாயா? அவரோ வீட்டில் இல்லை. இதுதான் ஏற்ற சமயம்.

ஜேன்—அவள்தான் சொல்கிறாள் : உனக்குமா கேலி யா யிருக்கு? இந்த நாலைந்து நாட்களாய் நான் படும் அவஸ்தையை அறிந்திருந்தால், இப்படிப் பேசமாட்டாய்.

பாக்—இந்தத் தொல்லை யெல்லாம் எதற்கு? டாக்டர் மட்டும் எங்கள் மார்க்கத்தில் சேர்ந்து விட்டால், நாளையே என் மருமகனாகிவிடலாம்; ஓடவும் வேண்டாம், தேடவும் வேண்டாம்.

கோபா—அதென்ன, உங்கள் மருமகன் என்கிறீர் கள்? விளங்க வில்லையே.

பாக்—(முகங் கோட்டிச் சிரித்துக்கொண்டு) எல்லாம் சீக்கிரத்தில் விளங்கும்; என் மருமக னில்லாவிட்டால், இந்த வீட்டு மருமகன் என்று வைத்துக்கொள்ளுங்கள். அவ்வளவுகூடச் சொல்லும் சுதந்திர மில்லையா எனக்கு, இந்த வீட்டிலே?

கோபா—உங்களுக் கில்லாத சுதந்திரம் வேறு யாருக் குண்டு? விசேஷ அர்த்தம் ஏதாவ துண்டோ என்றுதான் கேட்டேன்.

பாக்—அதுவுந்தான் இருக்கும். ஜேன்! இங்கே, என் கிட்ட வா: உன் காதில் மட்டும் ஓர் இரகசியம் சொல்ல வேண்டும்; உன் காதலருக்கு அது தெரியக்கூடாது. நீ எப்பொழுது வருவாய் என்று ஆவலுடன் எதிர் பார்த்துக் கண்ணும் பூத்துப்போயிற்று.

"அதென்ன இரகசியம்?" என்று கேட்டுக்கொண்டு ஜேன் அருகு செல்ல, பாக்கியம், அவள் காதில் ஏதோ சொன்னாள். உடனே ஜேன் முகம் வெளிறிப்போயிற்று. இரண்டொரு கணங்கள் அவள் திகைப்புற்றுத் தத்த ளிக்க, கோபாலையர், அவள் கையைக் கட்டியாய்ப் பிடித் துக்கொண்டு, அவளை ஒரு நாற்காலியில் உட்காரச் செய் தார்.

ஜேன்—ஆ! அப்படியா! உன்னையா!

பாக்—அது கூடாதா? உனக்கு அது பிடிக்கவில்லையா? இவ்வளவு ஆச்சரியம் என்ன?

ஜேன்—இல்லை. நான்,—என்னவோ,—இதுவரை,—அப்படி நினைக்கவேயில்லை. திடீரென்று கேட்டவுடன், ஆச்சரியமாயிருந்தது. இன்னமும் கூட நம்பமுடியவில்லை,

பாக்—ஆனால், உனக்கது சந்தோஷமில்லையா?

ஜேன்—எனக்குச் சந்தோஷமா? ஆ,—ஐயாவுக்குச் சந்தோஷமாவது எனக்கும் சந்தோஷமே. இருந்தாலும், ஒருவேளை———."

ஜேன் கேயினால் மேற் பேச முடியவில்லை. அவள் கண்களிலிருந்து கண்ணீர் சொரிந்தது. அவள் எழுந்து வீட்டிற்குள் தன் அறைக்குப் போய்விட்டாள்.

கோபாலையர் உடனிருப்பதையும் ஒரு கணம் மறந்தவள் போல, "இவள் இப்படி நடப்பாளென்று நான் நினைக்கவில்லையே!" என்று, பாக்கியம் தனக்குத்தானே சொன்னாள்.

கோபா—(செருமிக் கொண்டு) இவ்வளவு திடீரென நீங்கள் சொல்லியிருக்கக்கூடாது. ஒருவேளை மயங்கிச் சோர்ந்து விடுவாளென்று நான் அஞ்சினேன்.

இதற்குப் பதிலொன்றும் பேசாமல், கோபாலையரை ஒரு நிமிஷம் வெறித்துப் பார்த்துவிட்டு, அப்பால், பாக்கியம்: "டாக்டர் பக்கத்திலிருக்கும்பொழுது, அப்படியே மயங்கிவிட்டாலுந் தான் என்ன?" என்றாள்.

கோபா—அது போகட்டும். உங்களுக்குச் சந்தோஷம் உண்டாகுக! கருதிய காரியத்தை முடித்துவிட்டீர்கள் போலிருக்கிறது. இனி, என்னைத் தங்கள் மருமகனாக்கிக்கொள்ள வேண்டுமென்பதே என் பிரார்த்தனை.

மீண்டும் அவரைப் பாக்கியம் வெறித்துப் பார்த்தாளே ஒழிய, சிறிது நேரம் ஒன்றும் பதிற் பேசவில்லை. அப்பால் அவரைப் பார்த்து:

"அது, நான் சொன்னபடி, உங்கள் கையில்தானிருக்கிறது. நாங்கள் என்ன காட்டுமிருண்டிகளா? எங்கள் மார்க்கத்தைச் சேர்ந்தால் என்ன?" என்று கேட்டாள்.

கோபா—இல்லை, நாங்களே அஞ்ஞானிகள்; உங்கள் வேதமே சத்திய வேதம்.

கோபாலையர் பதிலின் சூளான உட்பொருள் பாக்கியத்துக்குத் துலங்கவில்லை. தன் வாழ்நாளில் பலவாண்டுகளை ஹிந்துக்களுக்கு கிறிஸ்தவ சமயத்தை எடுத்துப் போதிப்பதில் கழித்திருந்தவளாதலின், பழைய வாசனையின் மேலீட்டால், இடம் பொருள் காலப் பொருத்தங்களையும் மறந்து, கிறிஸ்தவ மதத்தின் மேன்மையையும் ஹிந்து மதத்தின் குற்றங் குறைகளையும் பற்றி, அவள் பிரசங்கம் செய்யத் தொடங்கிவிட்டாள். அவள் பேசிய யாவும் கோபாலையருக்கு அலுப்பைவிட உள்ளூர நகைப்பையே விளைத்தமையாலும், தாமஸ் கே வெளியிலிருந்து அல்லது ஜேன் வீட்டுக்குள்ளிருந்து, சீக்கிரம் வந்து சேருவரென்று அவர் எண்ணியதாலும், பாக்கியத்தின் வாயைக் கிளறி இரண்டொரு வார்த்தைகளை மாத்திரம் இடையிடையே பேசிக்கொண்டு, அவர், அவள் பிரசங்கத்தைக் கேட்டுக்கொண்டிருந்தார். அவர் எதிர்பார்த்தவாறு, முதலில் தாமஸ் கே வண்டியில் வந்து சேர, வண்டிச் சத்தத்தைக்கேட்டு, ஜேனும்வெளியே வந்தாள். தன் மகளையும் கோபாலையரையும் பார்த்தவுடன், தாமஸ்கே, ஒன்றும் பேசத் தெரியாமல், முதலில் திகைத்தார். பாக்கியம், சிரித்துக்கொண்டு, "பறந்துபோன புறு ஜோடி கூட்டில் வந்து அடைந்துவிட்டது, பார்த்தீர்களா! வெயிலில் நீங்கள் போக வேண்டாமென்று நான் சொல்லவில்லையா! வீணில்போய் அலைந்துவிட்டுவந்தீர்கள். அதுவும் தான், இவ்வளவு நேரம் என்ன? எங்கெங்கே போனீர்கள்? ஒரு வேளை பறங்கிமலைக்கே போய் விட்டீர்களோ, வரக்காணோமே, என்றெண்ணினேன், நான்" என்றாள்.

அதற்கும் அவர் ஒன்றும் பதில் சொல்லவில்லை. அவர் திகைப்பையும் தத்தளிப்பையும் கண்டவுடன், கோபாலையர்: "தாங்கள் அழைத்ததாக வேலைக்காரன் வீட்டில் வந்து சொன்னான். நான் ஆசுபத்திரிக்குப் போயிருந்தேன். இப்பொழுதுதான் திரும்பி வந்தவுடன் கேள்விப்பட்டு வந்தேன். என்ன விசேஷம்?" என்றார். இதற்குள் தன் மனத்தை ஒருவாறு சாந்தப்படுத்திக் கொண்டு, "உம்மிடத்தில் கொஞ்சம் தனித்துப் பேச வேண்டியிருக்கிறது. என் அறைக்கு வாரும், பேசு வோம்" என்று கூறி, தாமஸ்ஜேக், அவரை வீட்டிற்குள் அழைத்துச் சென்றார். பாக்கியமும் பின்னே சென்றாள். தன்னிடம் தன் தகப்பனார் ஒரு வார்த்தையேனும் பேசாத தைப்பற்றி ஜேன்கே சிறிது கவலை கொண்டாள்; ஆனால், பாக்கியம் தன்னிடத்தில் கூறிய சங்கதிக்குப் பின்னும், அவளிடமும் அவர் ஏதும் பேசாதது, அவள் கேட்ட கேள்விகளுக்கும் பதில் சொல்லாதது, அவள் முகத்தை எதிர் நோக்காமல் அவர் நின்று தத்தளித்தது, அவளுக்கு ஆச்சரியமாயிருந்தது. ஒரு வேளை தனக்கு அந்தச் சங் கதி தெரியக்கூடாதென்று அப்படி நடந்தாரோ என்றும் எண்ணினாள். கோபாலையரிடம் தன் விஷயத்தைப் பற்றித்தான் அவர் பேசப் போகிறாரென்பது நிச்சயம். ஒரு வேளை தன்னையும் அவர் கூப்பிட்டு விடலாம்; தான் எழுதிய கடிதத்தைப் பற்றிக் கேட்கலாம். கேட்டால் என்ன சொல்வது? இவ்வாறு திகைத்துச் சில நிமிஷம் நின்றுவிட்டு, பாக்கியத்துடன் அப்பொழுது பேச மன மில்லாதவளாய், ஜேன்கே தன் அறைக்குத் திரும்பிப் போய்விட்டாள்.



## பதினாறும் அதிகாரம்

கோபாலையரை மட்டும் தாமஸ் கே தன் அறைக்குள் அழைத்துக்கொண்டு போய், வேறெவரும் உள்ளே வாராமல் கதவைத் தாளிட்டுவிட்டு, இருவரும் உட்கார்ந்த பின், கீழே வரும் சம்பாஷணை அவர்களுக்குள் நடந்தது. "நானும் உடனிருப்பது நலமல்லவா?" என்று, உடன்வந்த பாக்கியத்தைத் தடுத்து, அவளை கே வெளியே அனுப்பி விட்டார்; ஆயினும், ஜேன் தன் அறைக்குட் சென்ற பின்பு, பாக்கியம், கேயின் அறைக் கதவோரமிருந்து ஒட்டுக் கேட்கவில்லை யென்று, நாம் கூற முடியாது, உள்ளே நடந்த பேச்சில் சிலசில வார்த்தைகள் தான் அவள் காதுக் கெட்டியன; அதனால், இரண்டொரு விஷயங்களைப்பற்றி அவள் விபரீதமாக நினைத்துக்கொண்டாள் என்பதும் மெய்யே. இனி, அறைக்குள் நடந்த சம்பாஷணையைக் கவனிப்போம் :

கே.—நீர் அனுப்பிய கடிதத்தைக் கவலையோடு படித்துப் பார்த்தேன். அதைப்பற்றியும், இன்று காலை ஜேன் எழுதின கடிதத்தைப் பற்றியும் தனிமையிலிருந்து ஆழ்ந்து சிந்திக்க வேண்டு மென்றே, இந்நேரம், இரண்டு மணி நேரம் வரை, நீர் ஆசுபத்திரியில்தான் இருக்கிறீ ரென்று நிச்சயமாய்த் தெரிந்துகொண்ட பின்னர், ராபின் ஸன் பார்க்கில் போயிருந்து, ஆலோசித்துக்கொண் டிருந் தேன். உமக்கு நம்பிக்கை இல்லாத கிறிஸ்தவ மதத்தைச் சேர்வதைப்பற்றி நீர் எழுதியிருப்ப தெல்லாம், ஒருவாறு நியாயந்தான். ஜேன் தன் மனச் சாக்ஷியைப்பற்றி எழுதி யிருப்பதும், முதலில் எனக்குக் கோபத்தை உண்டாக்கிய தெனினும், ஒரு விதத்தில் கிரமந்தான். ஆனால், ஒரு விஷயத்தைமட்டும் நீங்கள் இருவருமே மறந்துவிட்டீர்கள்; இல்லை, மறந்துவிட வில்லை, உங்களுக்கு அதுதெரியாதென் றே சொல்லவேண்டும். உமக்கு ஹிந்து—லா தெரியுமா?

கோபா.—நன்றாய்த் தெரியாது.

கே.—நன்று என்ன, தெரியவே தெரியாது என்று தான் சொல்ல வேண்டும். தெரிந்திருந்தால், இப்படி எழுதியிருக்க மாட்டீர். நீர் ஒரு ஹிந்து, பிராமணன், ஆன தால், உம்முடைய சொந்த அபிப்பிராயமும் கொள்கை களும் எப்படி யிருந்தாலும் சரி, ஹிந்து-லாவுக்கு நீர் கட்டுப்பட்டவரே. அந்த லாவின்படி, ஒரு பிராமணன், மற்று எந்தச் சாதியிலிருந்து வேண்டுமாயினும் பெண் ணைக் கொள்ளலாம்; எத்தனை பெண்களை வேண்டினும் கொள்ளலாம். அப்படி அவன் கொண்ட மனைவிமார், அவன் சாதியையோ அந்தஸ்தையோ உரிமைகளையோ பாதிக்க முடியாது; ஆனால், உண்மையில், அவர்கள், அவன் மனையாட்டிகள், தர்ம பத்தினிகள் ஆகவுமுடியாது; வைப்பாட்டிகள் போலே யாவர். இம்மட்டோ, அவனுக்கு அவர்கள் வயிற்றிற் பிறக்கும் பிள்ளைகளுங்கூட, பிராமண ராக முடியாது; வைப்பாட்டி மக்கள் போலே யாவர். பிராமணன் ஒருவன், பிராமணரல்லாத சாதியிலிருந்து கொள்ளும் பெண்ணுக்கும் அவள் மக்களுக்கும் என்ன சொத்தைக் கொடுப்பினும், ஜீவனம்ச சுதந்திரமும் அவ ளுக் குண்டெனினும், அவனுடன் சமத்துவம், என்றுமே அவர்களுக் கில்லை. உம்மைப்போல் படித்தவன், நாகரிக முள்ளவன், எவன்தான், தன் ஆசை மனைவி மக்களை, இப் படிப்பட்ட மானக் கேடான, தாழ்வான நிலைமையில் வைக்க விரும்புவான்? உம்மை அடக்கி யாளும் ஹிந்து-லா இப்படி யிருக்க, நீர் பிராமணரா யிருந்துகொண்டு, என் மகள் ஜேனை மணம் புரிவதெப்படி? அவளை ஒரு வேசி யாக்கி, உமக்கு அவள் வயிற்றிற் பிறக்கும் மக்களையும் வேசி மக்கள்போல் விட்டுப் போக, விரும்புகிறீரா? இப் பொழுதுள்ள ஹிந்து-லாவும், சாதிக்கட்டு வழக்கங்களும் உள்ளவரை, லக்ஷக்கணக்கானாலுமே சரி, உம்முடைய

பணமும் என்னுடைய பணமும் தான், அவர்களுக்கு என்ன செய்யக்கூடும்?

கோபா.—எனக்குக் கிறிஸ்தவ மதத்தில் நம்பிக்கையில்லாதது போலவே, எங்கள் மதத்திலும், எங்கள் ஆசார அநுஷ்டானங்களிலும், சிலவற்றில் நம்பிக்கையில்லை. இப்பொழுது நடைபெறும் சாதியாசாரத்தில், எனக்கு நம்பிக்கையே யில்லை. ஜானகி,—ஜேன், பிராமண ஸ்திரீகளில் எத்தனையோ பேரைவிட, எல்லா விதத்திலும் மேல் என்பதை, நான் மனப்பூர்வமாய் நன்கு அறிவேன். மற்றொன்று, நான் சொல்வது தங்களுக்கு ஒரு வேளை வருத்தத்தைத் தரலாமாயினும், இந்த ஸந்தர்ப்பத்தில் சொல்லியே தீரவேண்டும். ஜானகிக்கு,—ஜேனுக்கு, கிறிஸ்தவ மதத்திலே அவ்வளவு வேரூன்றிய பற்றிருப்பதாகத் தெரியவில்லை. நான் அவளை அக்கினி சாக்ஷியாய் பாணிக்கிரகணஞ் செய்துகொண்டு, நாங்கள் இருவரும், ஒரே வீட்டில், ஒரே குடும்பமாய்ச் சேர்ந்து வாழ்ந்து, எங்களுக்குப் பிறக்கும் குழந்தைகளையும் பிராமண ஜாதி முறைப்படி நடத்தி வந்தாலோ? யார் என்ன செய்யக்கூடும்? என் பந்துக்களில், வேண்டியவர் எங்களுடன் பழகட்டும்; வேண்டாதார், விலகிவிடட்டும்; நான் அதை அவ்வளவு பொருட்படுத்த மாட்டேன். இப்படிச் செய்வதில் என்ன தடை?

கே.—நான் சொல்வது இன்னும் உமக்கு விளங்கவில்லையே! ஜேன் கிறிஸ்தவச்சி; ஹிந்துக்கள் அபிப்பிராயத்தில் நாங்கள் சூத்திரர், சண்டாளர், மிலேச்சர் என்பது, ஒரு புறமிருக்கட்டும். பிராமணருக்கு அடுத்தபடியாக, சிலரால் மேலானபடியாகவே, மதிக்கப்படும் க்ஷத்திரிய சாதிப்பெண் ஒருத்தியை, நீர் அக்கினி சாக்ஷியாய்க் கலியாணஞ் செய்து கொண்டாலுமே, அவள் கதியும், அவள் மக்கள் கதியும், இக்காலத்தில் இப்படித்தானாகும்.

அவர்களுமே பிராமணராகி விட முடியாது. உம்முடைய ஆஸ்தி முழுதையும் அப்படிப்பட்ட மனைவி மக்களுக்கே நீர் கொடுத்துவிட யுக்தி செய்யலாம்; ஆனால், ஹிந்து ஜன சமூகமும், ஹிந்துலாவும், அவர்களையும் பிராமணராய்ப் பாவித்து நடத்தும்படி செய்ய, உம்மாலும் முடியாது, எவராலுமே முடியாது. இந்தியாவிலே எல்லாச் சாதி மதங்களுக்கும் பொதுவான ஒரு ஸிவில் விவாகச் சட்டம் ஏற்படும் வரை, அது அசாத்தியம்; அப்பொழுதுங்கூட, சட்டமட்டும் மாறுமே யன்றி, ஜன சமூகம் மாறப் பல தலை முறைகள் பிடிக்கும். அது வரை நீர் ஜன சமூகத்தை விரோதித்து நடக்க முயலுவது, ஒரு சிட்டுக்குருவி இமய மலையில் கோபத்தோடு முட்டுவது போலவே யாகும்.

கோபா.—எனக்கு ஹிந்து-லா தெரியாது; ஏனினும், அநுபவத்தில் கொஞ்சம் தெரியும். உதாரணமாக, இன்று காலைதான், ஒரு கேஸுக்கு என்னை அழைத்துக்கொண்டு போனார்கள்: தொண்டமண்டலம் முதலியார் வீட்டுப் பெண் ஒருத்தி, பதினெட்டு வயதுதா னிருக்கும், நல்ல ரூபவதி, அவளுக்கு உடம்பு குணமில்லை என்று கூப்பிட்டார்கள். பட்டணத்துப் பெரிய குடும்பங்களில் ஒன்று; தங்களுக்குக்கூடத் தெரிந்திருக்கும்; அவள் தகப்பனும் பிரபலமான வக்கீல்தான். நான் பரிசோதனை செய்து பார்த்தபின், பெண்ணுக்கு விவாகஞ் செய்வித்து, அவள் கணவனோடு வாழ்ந்தால், நோய் தீர்ந்துவிடுமென்று அபிப் பிராயங் கொடுத்தேன். அப்பால், உண்மை தெரிய வந்தது. அவளுக்கு விவாகமாகி நான்கு வருஷங்களாயினவாம்; சம்பந்திகளுக்குள் சண்டையினால், மாப்பிள்ளை, இந்தப் பெண்ணைச் சேர்த்துக் கொள்ளாமல், வேறிரண்டு பெண் களை, ஒரே முகூர்த்தத்தில், வேண்டுமென்றே மணஞ்செய்து கொண்டு, சுகமாயிருக்கிறானும். அவர்களில் ஒருத்திக்குக் குழந்தைகளும் பிறந்திருக்கின்றனவாம். இந்தப் பெண்,

பாவம், வாழாவெட்டியாய், நோயால் வருந்தி வருகிறாள். ஹிந்து—லாப்படி, இவளுக்கு இனி என்றுமே, கணவன் இறந்துபோனாலுமே, விமோசன மில்லையாம்; அவன் மட்டும், இவளை வைத்துவிட்டு, வேறிரண்டு பேரைக் கைப்பிடிக்கலாமாம். இதனினும் பெருத்த அநியாய முண்டோ? இன்று காலை விவரங்கள் தெரிந்தவுடன், இப் படிப்பட்ட சமூகத்தார் எல்லோருமே கிறிஸ்தவராக, அல் லது முகம்மதியராக, மாறிவிட்டால்தான் என்ன என்று தோன்றிற்று! கணவ னின்றி நோய் வாய்ப்பட்டு வருந்தும் அந்தப் பெண், ஒரு வேளை, இம்மியேனும் நடத்தை தவறி விட்டாலோ, அவள்மீது கல்லை விட்டெறிந்து காறியுமிழ, ஊரெல்லாம் தயார். ஹிந்து சமூகத்தின் ஊழலை, இவ்வாறு இன்று காலையில்கூட அறிந்தேன். ஆயினும், இந்த விஷ யத்தில் வேறு வழியிருக்கிறதென்று, எண்ணுகிறேன். ஜானகியும் நானும் மணம்புரிவது இந்த மாகாணத்தில் முடியாதாயினும், பரோடாவிலே இதற்கேற்ற சட்டம் இருக்கிறதாம். அங்கே போய், பரோடா எல்லைக்குள் விவாகத்தை முடித்துக்கொண்டு வந்துவிட்டால், அப்பால், எங்களை என் சுற்றத்தாரும் வேறு பிராமணர் பலரும் ஏற் காமற் போனாலும், சட்டப்படி எவ்வித தோஷமும் ஏற் படா தன்றோ? இந்த நாளிலே, எங்களை ஏற்றுக்கொண்டு, எங்களோடு பழகப் பின்னிடாத பிராமணர் சிலர், சென்னை யிலேனும் இருக்கிறாரென்பது உறுதி. அப்படிச் செய்தா லென்ன?

கே.—இன்னும் நீர் விவரந் தெரியாமலே பேசுகிறீர்; பரோடா இல்லை, ஜெரிக்கோ போனாலும், சுவர்க்கத்துக் குப் போனாலுமே, நரகத்துக்குப் போனாலுமே, தென் னிந்தியப் பிராமணனான உம்மை, உம்ம சாதிக்கட்டு வழக்கமும் சட்டமும், நிழல்போலத் தொடர்ந்தே செல் லும். நீர் பிராமணரா யிருக்கும் வரை, அதனின்றும் உம்

[illegible] [illegible] எனை பார்ஸ்டர்; [illegible] [illegible] நன்கு படித்தவன்; இந்த விஷயத்தில் [illegible] யை உறுதியாய்க் கொள்ளும். பரோபகர [illegible] மனைவினையை முடித்துக்கொண்டு திரும்பி விட்டால், ஜேன் பார்ப்பாத்தி யாகி விடுவாள், அவளுக்குப் பிறக்கும் மகன் உம்முடைய புத்திரனாகி, உபநயனம் முதலிய ஸம்ஸ்காரங்களுக்கு அருகனாகி விடுவான் என்று நீர் நினைப்பது, வீண் கனவே. பேச்சை வளர்ப்பதில் பிரயோசன மில்லை. ஜேனின் மதப்பற்று எப்படி யிருந்தாலுமே சரி, நீர் ஹிந்துவாயிருக்கும் வரை, உங்கள் மணவினை சட்டப்படி பிராமணரது விவாக ஸம்ஸ்கார மாகாது; அப்படிக்கின்றி, ஒரு வேளை உம்முடைய வைப்பாட்டி போலிருக்க அவளே இணங்கினாலுமே, அதற்கு முன், என் கைகளால், நானே அவளைக் கொலை செய்து விடுவேன் என்பதை உறுதியாய்க்கொள்ளும்.

தாமஸ் கேயின் ஆவேசத்தையும் அவர் பேச்சின் படபடப்பையும் கண்டு, கோபாலையர் சிறிது பயந்து விட்டார். சிறுபொழுது தாழ்த்து: "நான் அப்படி விரும்பவு மில்லை; எனக்கு அப்படி எண்ணமு மில்லை; தாங்களே முதலில் கூறியபடி, எனக்கு அவள் மேலுள்ள காதல், அவ்வாறு அவளை அவமானப்படுத்தச் சம்மதியாது. அவளை யறிந்து அவள்மீது காதல் கொள்ளுமுன் நானிருந்த சுபாவத்தையும், இப்பொழுது அவளை யறிந்த பின் நானிருப்பதையும், தாங்கள் தெரிந்திருந்தால், இப்படிச் சந்தேகிக்கவும் மாட்டீர்கள். அவளுக்கு ஒரு மானக்கேடு நேருமுன், என் உயிரையே வேண்டுமாயினும் நான் துறக்கத் துணிவேன். எனக்கு வயது முப்பதுக்கு மேலாயிற்று. கண்மணிகள் போல் இரண்டு அருமைக் குழந்தைக ளிருக்கிறார்கள். ஆனால், அதைப்பற்றி எல்லாம் இப்பொழுது தங்களிடம் சொல்லுவது பொருந்தாது. இனி, நான் கிறிஸ்தவனாவதைப்பற்றித் தான் யோசிக்க வேண்டும்." என்றார்.

கே:—அந்தான் எனக்கும் சம்மதம்; அப்பால் ஆக்ஷேபனையே யில்லை; சந்தோஷமே. நான் அதிருஷ்டமும் வேறு வழியு மில்லை.

கோபா:—நான் ஒற்றைக் கட்டை யல்ல; உம்மிருக்கிறாள், குழந்தைகள் எல்லாரும் இருக்கிறார்கள்; அதனால் தான் யோசனை; சீக்கிரத்தில் தீர்மானித்து, தங்களை வந்து மீண்டும் பார்க்கிறேன். முடிவு எப்படியாயினும், தங்கள் பக்ஷத்தை என்றும் மறக்க மாட்டேன். மற்றொரு விஷயம்: அவளைக் கண்டு பேசத் தங்கள் அநுமதி வேண்டும்."

தாமஸ் கே, சிறிது நேரம் தனக்குள் ஆலோசித்துக் கொண்டு, இதற்குப் பதி லுரைக்காம லிருந்தார். அப்பால், அவர்: "உம்மை நம்பலாமா? ஆம், நம்பலா மென்றே எண்ணுகிறேன். சரி: கண்டு பேசிவிட்டுப் போம். நீர் போகும்போது அவளை இங்கே வரச்சொல்லும்." என்றார்.

அப்பால் கோபாலையர், கேயினிடம் விடைபெற்றுக் கொண்டு, வெளியே வந்தார். தாளிட்டிருந்த கதவைத் திடீரெனத் திறந்து கொண்டு வெளிப்பட்டவுடன், அவர், பாக்கியத்தின் மீது விழுந்தார்.

கோபா:—மன்னித்துக் கொள்ளுங்கள்: நான் பார்க்க வில்லை.

பாக்:-இப்பொழுதுதான், அவர்களுக்கும் உங்களுக்கும் டீ கொண்டு வரட்டுமா என்று கேட்க வந்தேன். நானும் கத வண்டை வந்தேன், நீங்களும் வெளியே வந்தீர்கள்.

கோபா:—வந்தனம்: எனக்கு டீ வேண்டாம்; அவள் எங்கே?

பாக்:—உமக்கு டீ ஏன், காப்பி ஏன்? அவளிருந்தால் போதும். அவளுடைய அறையில் அவள் இருக்கிறாள்.

கோபா:—சரி, ஒரு நிமிஷம் பார்த்து, சொல்லிக் கொண்டு போகிறேன். நேரமாயிற்று; ஒரு கேஸுக்குப் போக வேண்டும்.

யாக்:—அவளைக் காணுமட்டும், பாக்கியத்தினிடத்தில் அவசரந்தான்; க்ஷேமமாகி விடும், கேஸ் ஞாபகம் வந்து விடும். அவளைக் கண்டு விட்டால், அப்புறம் இரவு பகலும் தெரியாது, பசி தாகமும் தெரியாது, எந்தக் கேஸ் எப்படிப் போனாலும் கவலை யிராது! அதிருக்கட்டும்: என்ன நடந்தது? என்னிடம் சிறிது சொல்லக்கூடாதா?

கோபா:—தாயை ஒளித்த சூலா? மாமி அறியாமலா மருமகள் கிட்டி விடுவாள்? எல்லாம், அம்மான் இருக்கிறார்கள், உங்களுக்கு விவரமாய் ஆதியோடந்தம் சொல்லுவார்கள். க்ஷேமமாயிற்று, நான் வருகிறேன்" என்று கூறிச் சிரித்துக் கொண்டு, ஜானகி யிருந்த அறையை நோக்கி ஓடி விட்டார்.

## பதினேழாம் அதிகாரம்

"இந்தப் பட்டணத்து டாக்டர் ஒருவர், பிராமண குலத்தினர், ஒரு பெண்ணின் நிமித்தம் கிறிஸ்தவ மார்க்கத்தைச் சேரப் போவதாக அறிந்து, மனம் வருந்துகிறோம். இவருடைய மூத்த தாரமாயிருந்த பிராமண ஸ்திரீயின் வயிற்றில் பிறந்த குழந்தைகளும் இருக்கின்றனவாம். கிறிஸ்தவ மதத்தில் இவருக்கு உண்மையில் நம்பிக்கையோ அபிமானமோ இல்லை யென்றும் தெரிகிறது. எனவே, காமந்தான் இவர் மதம் மாறுதலின் காரணமாகும்.

'மனிதர் மனத்தெழு நினைப்புகள் யாவும்
இச்சைகள் அனைத்தும், இன்புகள் எல்லாம்,
அழியும் இவ் உடலை அசைக்கும் ஒவ்வொன்றுமே,
காதலின் புனிதக் கனலை வளர்த்திடும்
வேலையாளரோ ஆவது மெய்யே'

என்று, ஓர் ஆங்கில கவிபாடி யிருப்பது, ஐந்தையும் அவித்திலங்கிய முனிசிரேஷ்டர்களின் வழித்தோன்றல்களான அந்தணர்கள் விஷயத்திலும், உண்மையே போலும். கலிகாலத்தின் கோலமே இது! இவருடைய ஆப்த நண்பர்களும் நகரப் பிரமுகர்களில் சிலரும், இந்த அக்கிரமத்தைத் தடுக்க முயன்று வருவதாகத் தெரிகிறது. இன்னோர் முயற்சி கைகூடுமாறு இறைவருள் சுரப்பதாக!"

தன் வீட்டு நிலா மாடத்திலிருந்து தினசரிப் பத்திரிகையைப் படித்துக்கொண்டிருந்த பத்மாவதியம்மாள்,. இதை வாசித்தவுடன்: "இதைப் பார்த்தாயா, அத்தான்! செய்தி ஊரெல்லாம் பரவி, பேப்பருக்குக்கூட எட்டிவிட்டது போலிருக்கே. ஆனாலுந் தான், என்ன பொய்! ஒன்று என்பதற்கு முன் ஒன்பது என்கிறதே நம்ம பத்திரிகைகளின் துர்க்குணமாயிருக்கிறது." என்று சொன்னாள்.

நாராயணையர்—இதாவது, காரணமே இல்லாமல் புகைய வில்லை என்கலாம். சில வேளைகளில், பத்திரிகைகள் அபாண்டமான பொய்களைக் கிளப்பிவிட்டு விடுகின்றன. ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும், பத்திரிகைகளுக்கு இதுதான் பொழுது போக்காம். நம்ம சென்னை பட்டணத்தில்கூட, ஏதாவது ஒரு மீட்டிங்கை நேரில் சென்று பார்த்துவிட்டு, அப்பால் அதைப் பற்றிப் பேப்பரில் வரும் விவரங்களை வாசித்தால், அதுதானோ இது, அல்லது சொப்பனமோ, என்று தோன்றும். முப்பது பேர் வந்திருந்தால், முந்நூறு பேர், மூவாயிரம்பேர், வந்திருந்தாரென்று பேப்பர் குட்டிபோட்டுப் பெருக்கிவிடும்.

பத்மா—நடப்பதை நடக்கிறபடி எல்லாருக்கும் தெரியப்படுத்துவதே வேலையான பத்திரிகைகளே இப்படிச் செய்தால், ஜனங்கள் உண்மையை அறிவதெப்படி? அதிருக்கட்டும்: கோபாலண்ணா, முடிவாக என்ன யோசித்திருக்கிறார்? இன்றைக்கு ஏதாவது பேச்சு நடந்ததோ, இந்த விஷயத்தைப் பற்றி?

நாரா—வேறென்ன பேச்சு? எப்பொழுதும், "அன்ன விசாரம் அதுவே விசாரம்" என்று, இதுவே கவலை, இதுவேதான் பேச்சு.

பத்மா—அப்படி யில்லை: "தோகையரைப் பன்ன விசாரம், பலகால் விசாரம் என்று" சொல்லு.

நாரா.—சரி, அப்படியே வைத்துக்கொள், மனுஷன் கிடந்து தத்தளிக்கிறான்; புத்தி முட்டிப் பைத்தியம் பிடித்து விடுமபோ லிருக்கிறது. இவனுக்கு, இந்த வயதிலே, இவ்வளவு கிறுக்கென்று, நான் முதலில் நினைக்க வில்லை. இன்றைக்கு என்ன சொன்னான், தெரியுமோ ?

பத்மா.—என்ன சொன்னார் ?

நாரா.—நம்முடைய சாதிக் கட்டுப்பாடுகளின் அநியாயங்களையும், இக் காலத்துக்கு எள்ளளவும் பொருந் தாத பிராமணருடைய மதோன்மத்தையும், விவாக விஷயத்தில் புருஷருக்குள்ள தாராளமான சுதந்திரங் களையும், ஸ்திரீகளுக்குள்ள விலங்குகளையும் பற்றிப் பேசிக்கொண் டிருந்தோம். அப்பொழுது, 'இதை எல் லாம் சகித்துக்கொண் டிருப்பதைவிட, பிரம சமாஜத்தை யோ, கிறிஸ்தவ மதத்தையோ, இஸ்லாமையோ சேர்ந்து விடலா மென்று தோன்றுகிறது' என்று சொல்லிவிட்டு, 'நாணு! இதுவரை இதெல்லாம் பற்றி இவ்வளவு ஆலோ சிக்க வில்லை. இப்பொழுது யோசித்துப் பார்த்தால், சீ! என்று வெறுக்கிறது. குடும்பத்தோடு கிறிஸ்தவனாகி விடலா மென்றே தோன்றுகிறது. நீயும் உன் குடும்பத் தோடு சேர்ந்துவிடுவதா யிருந்தால், எவ்வளவோ சந் தோஷமா யிருக்கும். இந்த நிமிஷமே, வேறு மேல் யோசனை யில்லாமல், சேர்ந்து விடலாம்.' என்றான்.

பத்மா.—பேச்சுக்காகச் சொல்லி யிருப்பர்.

நாரா.—இல்லை, நிஜமாகவே தான் சொன்னான். 'நீ என்ன சொல்கிறாய்?' என்று, என்னை அழுத்திக் கேட்க வுஞ் செய்தான்.

பத்மா.—நீ என்ன சொன்னாய் ?

நாரா.—என்ன சொல்கிறது? சிரிப்பு வந்தது, சிரித் தேன். அதற்கு, 'எல்லாம் அவரவர்க்கு வந்தால்தான்

உறைக்கும்; அதுவரை சிரிப்பாய்த்தான் இருக்கும்; தத்துவமும் பேசலாம்' என்று, கோபமாய்ச் சொன்னான்.

பத்மா.—அதென்னவோ, உண்மைதானே.

நாரா.—ஏன், பத்மி, இல்லாவிட்டாலும் தான் என்ன? கிறிஸ்தவர்களுக்குள்ளும் முகம்மதியர்க்குள்ளும் இப்படிப்பட்ட சங்கடங்கள் இல்லையா? மதம் மாறுவதுதானா, சமூக வாழ்க்கையில் ஏற்படும் இக்கட்டுக்களுக்கு மருந்து? மதம் என்ன, ஒரு கோட்டா, தொப்பியா, இறுக்கினால் மாற்றிவிட? அவரவர் நாகரிகத்துக்கும, பயிற்சிக்கும் அஸ்திபாரமாயிருப்பது மதம் தானே? மத சம்பந்தமில்லாத விஷயங்களையும் மதம், மதம் என்று பாராட்டி அபிமானிப்பதால் தான், இப்படிப்பட்ட தர்ம சங்கடங்களும் விபரீதங்களும் ஏற்படுகின்றன. அதைச் சீர்திருத்த வேண்டுமே யல்லாமல், மதம் மாறுவதெப்படி? இவனும் இவன் குழந்தைகளும் கிறிஸ்தவர்களாகி விட்டால், கேயின் மகளை இவன் கலியாணம் செய்துகொள்ளச் சௌகரியமாயிருக்கும் என்பது மெய்யே; நானும் ஒப்புக்கொள்கிறேன். அந்தக் கலியாணத்தினால், இவனும் குணமாறிச் சீராகி வாழவும் கூடும்; அது நடக்காவிட்டால், ஒரு வேளை, இவன் முன்னிலும் அதிகம் கெட்டுப்போகவும் கூடும். இப்பொழுதே பைத்தியம் பிடித்துவிடும்போலிருக்கிறது. இவனுக்கு வெகுவாய், அவளுக்கும் அப்படியே, இந்தக் கலியாணத்தினால் நன்மையும், இது நடக்காவிட்டால் பெருந்தீங்கும், விளைவதா யிருக்கலாம. ஆனாலும் என்ன? இவர்களுக்காக, ஹிந்து ஜன சமூகத்தையே மாற்றிவிட முடியுமோ? அதுதான் மாறுமோ? மற்ற நாகரிக நாடுகளில் போல, மதத்துக்கும் கலியாணத்துக்கும் சம்பந்த மில்லை, மதம் அவரவரைப் பொறுத்தது என்று, நமக்குள்ளும் ஆகவேண்டும். அதற்கு வேண்டிய முயற்சி செய்யவேண்டும். இப்படிச் சிலர் அவஸ்தைப்பட்டு, மதம்

மாறுவதாலும், அல்லது சேருவதாலும், நம்மவர்க்கும் புத்தி வந்து, அந்தக் காலம் நெருங்கக்கூடும்.

பத்மா.—சமூக வாழ்க்கையைத் திருத்தும் போருக்கு இவர்கள் களபலிகளா?

நாரா—அப்படியே வைத்துக் கொள்ளலாம். ஆனால் எல்லோரும் மதமாறுவது முடியாது; அப்படிச் செய்தால் பின்பு ஒரு கஷ்டமுமிராதென்று நினைப்பதும் தவறு. நம்ம பாளையங்கோட்டை, முருகன் குறிச்சியிலுள்ள கிறிஸ்தவப் பிள்ளைமார்களைப் பார். தங்களுக்குக் கீழ்ச் சாதியினராகக் கருதும் கிறிஸ்தவரோடு கொள்வினை கொடுப்புவினை கிடக்க, பந்தி போஜனம் செய்வதுமே துர்லபம். வடக்கன் குளத்திலே, சர்ச்சுக்குள்ளேயே சுவர் வைத்துப் பிரித்திருக்கிறார்களாம். உண்மை யிப்படி யிருக்க, ஹிந்துக்கள் எல்லோரும் கிறிஸ்தவராகி விட்டால், அப்பால் சுவர்க்கந்தானென்று நினைப்பது தவறே.

பத்மா.—இவர் கடைசியில் என்ன தீர்மானித்திருக்கிறார்?

நாரா.—ஒன்றும் தீர்மானிக்க வில்லை; தத்தளித்து விழித்துக்கொண் டிருக்கிறான்.

இந்தச் சமயத்தில் வாசல் கதவை யாரோ தட்டின சத்தம் கேட்டது. "யார் அது?" என்று வினவ, "நான் தான், கோபு, கதவைத்திற" என்ற பதில் கிடைத்தது. உடனே நாராயணையர் கீழே போய்க் கதவைத் திறக்க, அவரும் கோபாலையரும் நிலாமாடத்துக்கு வந்து சேர்ந்து உட்கார்ந்து கொண்டார்கள். பத்மாவதி யம்மாள், பேப்பரைக் கையிலெடுத்துக்கொண்டு, அறைக்குள் போகப் போனாள்; அப்பொழுது, கோபாலையர்: "நீயும் இரு; போய் விடாதே. அவளும் இருக்கட்டும், நாணு. இந்த விஷயத்தைப்பற்றி அவள் அபிப்பிராயத்தைத் தெரிந்தது முதல்,

அவள் சொல்லும் புத்திமதியே சிறந்ததாகும் என்று எனக்குத் தோன்றுகிறது" என்றார்.

"நீயும் உட்காரு, பத்மி" என்று நாராயணையர் கூற, அவர் அருகே ஒரு நாற்காலியில், அவளும், சிறிது வெட்கப் பட்டுச் சிரித்துக்கொண்டு, உட்கார்ந்தாள்.

கோபாலையர்.—நானு! முடிவில் ஒருவிதமாய்த் தீர்மானித்திருக்கிறேன்; அதைச் சொல்லி, உங்கள் அபிப்பிராயத்தையும் அறியத்தான் வந்தேன். சாவித்திரியக்காளும் குழந்தைகளும், இங்கே உங்களோடிருக்கட்டும்; நான் மாத்திரம், கிறிஸ்தவ முறைப்படி அவளைக் கலியாணஞ் செய்துகொண்டு, எங்கள் வீட்டில் இருக்கிறேன். கொஞ்ச நாளைக்கு இப்படியிருக்கட்டும்; பிற்பாடு, நடக்கிறதுபோல், அவசியம் போல், பார்த்துக் கொள்ளலாம்.

நாரா.—பிற்பாடு என்ன நடக்கப் போகிறது?

கோபா.—வருங்காலத்தைக் கடவுளே அறிவார் என்று சொல்வதில்லையா? இப்பொழுது அதைப் பற்றி யாரால் என்ன சொல்ல முடியும்? ஒருவேளை நமது சமூக வாழ்க்கை மாறலாகாதா? ஒருவர் மதத்துக்கும் குடும்ப வாழ்க்கைக்கும் சம்பந்தமில்லை என்று, நம்மவரே நினைக்கும் காலம் வராதா?

நாரா.—நம்ம தலைமுறையில் இல்லை!

கோபா.—அதெப்படிச் சொல்லமுடியும்? பறங்கிக்காரரோடு சேர்ந்து பழகிப் பிணங்களை அறுத்துக்கொண்டு, இந்தப் படிப்பு வேண்டாமென்று, எங்கப்பா எவ்வளவோ தடுத்தார்: இப்பொழுதோ, வைத்திய கலாசாலையில் பிராமண மாணவர்கள் கொள்ளையோ கொள்ளை; பிராமணப் பெண்களுங்கூட சீக்கிரம் வந்து சேர்வார்களென்று தோன்றுகிறது.

நாரா.—அதெல்லாம் வயிற்றுப் பிழைப்பு: உதர ஸம்ரக்ஷணார்த்தம் பிராமணன் எதற்கும் துணிவான். பெங்க

ளூர்த் தோற்கிடங்கில் வேலை செய்கிறவர்கள், பறையர் சக்கிலியர் இல்லை; வேத வித்துக்கள், பிராமணப் பழங்களான ஸ்ரீ வைஷ்ணவர்கள் தான் அதிகம்; அழுகும் தோல் நாற்றத்துக்காக முதலில் மூக்கைப் பிடித்த பிராணயாமமும், இப்பொழுது போய் விட்டது; கையில் கத்தியைக்கொண்டு இவர்கள் தோலைச் சீவுவதைப் பார்த்தால், பரம்பரைச் சக்கிலிய ரென்றே தோன்றும். அதெல்லாம், அன்றாடம் வயிறு கழுவும் அவசியத்தால் ஏற்படுவது. இந்த விஷயத்தில் அப்படி யொரு நிர்ப்பந்தமு மில்லை; அது இல்லாத வரை, சமூகம் திருந்தி, வழக்கம் மாறுவது, பகீரதப் பிரயத்தனமாய்த் தான் முடியும்.

கோபா.—ஏதோ, வரவரப் பார்க்கலாம். அக்காளும் குழந்தைகளும் உங்களோடு கொஞ்சநாள் இருப்பதில், அசௌகரிய மொன்றும்,—

நாரா.—எங்களுக்கு என்ன அசௌகரியம்? அறியாத பேரா? ஆம் இடம் போதாதா? நீ அதைப் பற்றிக் கவலைப்படவே வேண்டாம். பத்து வருஷம் கூட இருந்தாலும் சம்மதமே, சந்தோஷமே. பின்னால் கோணல் நேராகி நிமிரும் வழிதான், எனக்குப் புரிய வில்லை.

கோபா.—'மேலே ஓர் அடி எடுத்து வைக்க வெளிச்சம் காட்டினாலும் போதும்' என்று ந்யூமன் பிரார்த்திக்க வில்லையா? அப்படித் தான் எனக்கும் தோன்றுகிறது.

நாரா.—வெளிச்சம் ஆனால், சரிதான்; இது, கும்மிருட்டிலே, குருட்டுத்தனமாய் அடியெடுத்து வைப்பது போலவே, எனக்குத் தோன்றுகிறது.

கோபா.—ஆதிமுதல் நீ இப்படியேதான் சொல்லிக் கொண்டிருக்கிறாய்; அக்காளுக்கோ, 'உன் அளவுகூடப் பிடிக்கவே யில்லை. இப்பொழுது நான் சொன்னதைப் பற்றி, என் யுக்தியைப் பற்றி, உன் ஆமுடையாள் என்ன நினைக்கிறாள்?

நாரா.—என்ன, பத்மி, உன் அபிப்பிராயம் என்ன?

பத்மா.—நான் என்னச் சொல்லப் போகிறேன்? எனக்கென்ன தெரியும்?

நாரா.—நாணம் எல்லா மிருக்கட்டும்; இதுவரையும் சொல்ல வில்லையா; அதுபோல இப்பொழுதும் வாய்விட்டு, மனசில் தோன்றுகிறதைத் தாராளமாய்ச் சொல்லேன்.

கோபா.—நான் வேண்டுமானல் வெளியே போய் விடட்டுமா?

நாரா.—அப்பாடே! முன்பின் தெரியாதவள், பயந்தவள், கூச்சமா யிருக்கிறதாக்கும்!

'மாய்மாலக் கண்ணி மருமகளே,
கோழிக் கறிக்குப் பதம் பாரடி:
'கொக்கோ என்குது, கொத்த வருகுது,
அத்தே நான் மாட்டேன்!'

என்றாற்போல் தான். சும்மா சொல்லு.

இவர்கள் இவ்வளவு கூறியது, பத்மாவதியம்மாளுக்கு நாணத்தை அதிகரித்தது; ஆயினும், அவர்கள் இருவரும் தன் அபிப்பிராயத்தைப் பெருமதித்துத் தன் புத்திமதியை வேண்டினதால், ஒருவித கர்வமும், அதற்கேற்றபடி மெச்சத்தக்க விவேகமான பதிலையே கூறவேண்டு மென்ற ஆர்வமும், அவள் மனத்தில் உண்டாயின. அதனுல், அவள், தன் கூச்சத்தை ஒருவாறு அடக்கிக்கொண்டு, மெல்லிய குரலில்: "இவ்வளவு என்னை நீங்கள் பொருட்படுத்திக் கேட்கிற மட்டுக்கும், நான் திடீரென ஒன்றை, ஏதோ வாய்க்கு வந்தபடி, சொல்லி விடலாமா? இதிலே, அவர் குழந்தைகள் விஷயம் வேறு, அண்ணு விஷயம் வேறு, சாவித்திரியக்காள் முதலிய கிட்டின பந்துக்கள் விஷயம் வேறு, அவள் விஷயம் வேறு, மொத்தத்தில் நம்ம ஜாதி ஜனங்கள் விஷயம் வேறு, எல்லாம் அடங்கி யிருக்கிறது; ஒன்றேடொன்று பிணங்கிச் சிக்கலாகவும் இருக்

கிற தில்லையா? அதனாலே, கொஞ்சம் ஆலோசித்துப் பார்த்துத் தானே,—"

நாரா.—பேஷ்! கோர்ட்டார் ஆலோசனை செய்துதான் தீர்ப்புச் சொல்வார் போலிருக்கு.

கோபா.—கைதி ஜெயிலில் கிடந்து பிராணாவஸ்தைப் படுகிறானே அதைக் கோர்ட்டார் மறந்துவிடலாகாது.

நாரா.—அதற்குத் தான் குமாஸ்தா, நான் இருக்கிறேனே; கோர்ட்டாரை ஞாபகப்படுத்திக் கொண்டேயிருக்கிறேன். கைதி நாளை இந்நேரம் ஆஜரானால் தீர்ப்புச் சொல்லப்படும்.

இதைக் கேட்டுச் சிரித்து விட்டு, பின்பு கோபாலையர் வேறு ஏதோ பேச்செடுக்க, பத்மாவதியம்மாள் உள்ளே போய் விட்டாள். கோபாலையரும் சிறிது நேரத்துக்குப் பின், தன் வீடு போய் விட்டார்.

கோபாலையர் வீட்டுக்குப் போகவிட்டு, நாராயணையரும் பத்மாவதியம்மாளும் அவர் விஷயத்தைப்பற்றிப் படுக்கையறையில் மீண்டும் பேசலானார்கள். இருவருக்குமே கோபாலையர், கிறிஸ்தவமதத்தைச் சேர்வது சிறிதும் பிடிக்கவேயில்லை. ஆனால், அவர் மறுவிவாகம் செய்து கொண்டு மனங்களித்து வாழ்வது வேறு வழியில் கைகூடாதென்றால், அப்படிச் செய்து விட்டாலும் தான் என்ன? என்ன, குடி முழுகிப்போகிறது? என்று சில வேளைகளில் பத்மாவதி நினைத்தாள்; அவள் புருஷருக்கு அப்படிப்பட்ட எண்ணம் தோன்றவேயில்லை.



## V. பதினேட்டாம் அதிகாரம்.

ஆங்கில மகாகவி ஒருவர்; சாதாரண கிருஸ்தவர்களைப் போலன்றி, "புனரபி மரணம் புனரபி ஜனனம்' என்னும் ஹிந்து மதக் கொள்கையில் நம்பிக்கையுள்ளவர்; பரமாத்மப் பெருஞ்சோதியின் பொறிகளாகும் ஜீவாத்மாக்களுக்கு, குழந்தைப் பருவத்திலே ஆத்மாவின் அழிவின்மையையும், பரமாத்மாவாகிய கடவுளின் அளப்பருஞ்சோதியையும் பற்றிய ஞாபகமும், பூர்ணஞானமும், உண்டென்றும், வயதேற ஏற இந்த ஞாபகம் குறைந்து, தெளிவுகுன்றி, மறைந்தொழிந்து போகிறதென்றும் எண்ணினவர்; தான் நேரில் இன்னும் அநுபவித்தறியாத உலக நாடக சம்பவங்களை, கலியாணமென்றும் இழவென்றும் காதலென்றும் கலகமென்றும் விளையாட்டாகப் பொம்மைகளை வைத்துத் தன் மனோரதப்படி ஆடிக்கொண்டிருந்த ஒரு குழந்தையைப் பார்த்துப் பின்வருமாறு கேட்கிறார்:—

வடிவிற் சிறிய மகாத்மாவே! பூர்வ சம்பத்தை இன்னும் வைத்துக்கொண்டிருக்கும் ஞானசிகாமணியே! குருடர்களின் நடுவே கண்ணுள்ளவனாய், நித்யாத்ம சொரூப த்த்துவங்களைக் கண்டு மௌனத்தில் மகிழ்வோனே! ப்ரம ஞானியே!...........

ஆகிருதியில் சிறு குழந்தையாயினும் ஆத்ம ஞானமாம் பழந்தனம் படைத்த பெரியோய்! உன் ஆனந்த நிலையை அறியமாட்டாது, கண் மூடித்தனமாய், பின் வாழ்வில் கட்டாயம் உன் கழுத்தை அழுத்தி ஒடிக்கப்போகும் சம்சார நுகத்தடியை, இப்பொழுதே நீ இத்தனை சிரமப்பட்டு வலிய இழுத்து இவ்வண்ணம் உன் கழுத்தின், மீது வைத்துக் கொள்வது ஏனோ? அந்தோ! உலக வாழ்க்கை நிகழ்ச்சிகள், இதோ, அதி சீக்கிரத்திலே, உன் ஆத்மாவை அமுக்கி, வழக்கமென்னும் பெரும்பாரம், பனியினும் பளுவினதாய் சம்சார சாகரமே போல் ஆழமுள்ளதாய், உன்னை நசுக்கப் போகின்றதே!".

உவோர்ட்ஸ்வர்த் கவியின் குழந்தைகளின் ஆத்ம ஞானத்தைப்பற்றிய எண்ணம் மெய்யாயினும் தவறாயினும், இன்பமும் துன்பமும் கலந்த மானிட வாழ்க்கையிலே, துன்பத்திலும் இன்பமே மிகுந்து காணும் சுத்தானந்தப் பகுதி என்னத்தகும் குழந்தைப் பருவத்திலே, ஆனந்தத் தாண்டவமாடி அகமகிழ்ந்து வளராது, பிஞ்சிலே, வெம்பிப் பழுத்த கனிகள்போல, நம் மக்கள் உலகாநுபவ ஞானத்தையும் கவலைகளையும் தாங்கித் தளர்வது தகாதென்பதில் சந்தேகமில்லை. உயிர் நூலார் குரங்குகளோடு சேர்த்துப் பாடு படுத்தும் மனிதனுக்கு, குரங்கைப்போலக் கண்கண்டதைக் கைசெய்து பார்க்கும் சுபாவமிருப்பதே, இதன் முக்கிய காரண மென்னலாம். வீட்டிலும் வெளியிலும் மூத்தோர் செய்யும் கருமங்களை இளையோரும் செய்ய முயலுவதும், மூத்தோர் அறியாமல் இளைஞர் தமக்குள், தம் புத்திக்கு எட்டிய மட்டும், அவற்றைப்பற்றி விவகரிப்பதும், இயற்கைச் சுபாவமே. நமது பெண்மக்கள், முற்காலத்தைக் காட்டில் சீக்கிரமாக இக்காலத்தில் பெரியவராகி விடுவதன் காரணம், நமக்குள் நடைபெறும் பால்ய விவாகங்களும், கலியாணம், திரட்சி, சீமந்தம், பிரசவம், முதலிய விஷயங்களைப்பற்றி வீட்டில் மூத்தோர் பேசுவதைக் குழவிப்பருவம் முதலே குழந்தைகள் கேட்டுக் கேட்டுச் சிந்திப்பதுமே, என்று, சிலர் கூறுகின்றனர். இளமைப் பருவத்துக்குப் பொருந்தாத விஷயங்களை இளையோர் கேட்கப் பார்க்க, முதியோர் பேசவும் செய்யவும் கூடாதென்பது தெளிவு; ஆயினும், நம்முள் மிகப் பல குடும்பங்களில் இது கவனிக்கப் படுவதில்லை என்பதும் மெய்யே.

நாராயணையர் மகன் சீதாபதி என்ற சீது என்ற ராஜாவும், கோபாலையர் மகன் சேஷன் என்ற சாமியும் கோபாலையர் வீட்டு மாடி வராந்தாவில் வாசித்துக் கொண்டிருந்தார்கள். கோபாலையர் மகள் மகாலக்ஷ்மி என்ற எச்சு என்ற குட்டி, ஒரு மூலையில் பலவர்ணப் பென்ஸில்களையும் பூகோள சாஸ்திரப் படங்கள் அடங்கிய படப்புஸ்தகத்தையும் ஒரு பாயின் மேல் பரப்பி, அவைகளின் மத்தியிலே முழங்

கால் முழங்கைகளை ஊன்றித் தவழும் நிலையில் குனிந்த வண்ணமாய் இந்தியாவின் படத்தை வரைந்துகொண்டிருந்தாள். அவள் வாய் மட்டும்,

"அத்தை வீட்டுக்குப் போனேன்;
பொத்தைப் பானையைத் தந்தாள்;
அவல் இடிக்கலாம் பொரி பொரிக்கலாம்,
அத்தையைக் கண்டால் டஸ்!
பாட்டியைக் கண்டால் டஸ்!"

என்று, ஏதோ பாடிக்கொண்டிருந்தது. அப்பொழுது, அவள் தமையன் சாமி, "சூ! டஸ்ஸுமாச்சு, புஸ்ஸுமாச்சு பாட்டை நிறுத்து குட்டி; கணக்கு ஓடமாட்டேன் என்கிறது, நீ போடுகிற சத்தத்திலே" என்றான்.

நம்முடைய வாசகர்களுக்கு இந்தக் குழந்தைகளை இன்னும் நன்கு தெரியாததால், அவர்களைப் பற்றி இரண்டொரு வார்த்தைகள் இங்கே சொல்வது பொருந்தும். சாமி தான் மூவரிலும் மூத்தவன்; இப்பொழுது அவனுக்கு வயது பதின்மூன்று நடக்கிறது. 'குட்டிக் கோபாலன்' என்றால் முற்றும் பொருந்தும். குட்டி, இரண்டு வயதுக்குச் சின்னவள்; கலியாணியின் மகள் என்பதை அவள் கண்கள் பறையறைகின்றன; ஆனால், வயதுக்குத் தக்க வளர்ச்சியும் உலக ஞானமுமில்லாமல் குழந்தைத்தனமாயிருக்கிறாள். அரையில் பாவாடையைத் தவிர வீட்டிலிருக்கும் பொழுது இன்னும் மேலாடை தரிப்பதில்லை. சிவந்து மெலிந்து எட்டொன்பது வயதுச் சிறுமிபோலிருக்கிறாள். ராஜா, சாமிக்கு ஓராண்டுக்குச் சின்னவன். சாமியளவு கறுப்புமில்லை. குட்டியளவு சிவப்புமில்லை; மாநிறம்; பூசி விட்டாற் போன்ற சரீரம்; நமது கதா நாயகியின் முகக்களை அவன் முகத்திலும் ஜொலிக்கின்றது. மூன்று குழந்தைகளின் தலைமயிர்களும் வாரிப் பின்னித் தொங்குகின்றன. குட்டியின் பின்னல் நுனி, அதிகம் குனியுந்தோறும் படத்தில் படுவதால், அவள், குதிரைக் குட்டியைப்போலத் தன் தலையைச் சிலிர்த்து ஆட்டி, பின்னல் முதுகின்மேல் போகும்படி செய்கிறாள்.

சாமி சொன்னதைக் கேட்டுக் குட்டி ஒரு நிமிஷம் வாய்மூடிக்கொண்டிருந்தாள். அடுத்த நிமிஷத்தில், தான் அறியாமலே,

"பூமாதேவி முகம்போலும் இந்தப்
புண்ணிய நாட்டுக் கும்மிபாட,
நாமகள்! நல்ல தமிழ் தருவாய்; எந்தன்
நாவினில் வந்து நடம்புரிவாய்!"

என்று, அவள்வாய் மீண்டும் பாடத் தொடங்கிற்று.

சாமி.—கணக்கு ஓடவில்லை, சும்மா இரு என்கிறேனே. தோலவாயா? சும்மா சளம்புகிறாயே.

குட்டி.—சவுக்காலே நாலறை கொடு, அப்புறம் ஓடும். இதோ பார், அண்ணா! என் மாப்பை: அச்சுப்போலே, வட்டாய் விழுந்திருக்கு.

ராஜா.—பார்த்தெழுதினையோ? எண்ணெய்த் தாள் வைத்து வரைந்ததோ?

குட்டி.—வாத்தியார் பார்த்துத்தான் எழுதச்சொன்னார். ஆனால் எல்லாக் குட்டிகளும் எண்ணெய்த்தாள் வைத்து வரைந்துதான் கொண்டுவரதுகள்; நான் மட்டும் பார்த்தெழுதிக்கொண்டு போனால், மார்க்கு கோழி முட்டை தான் கிடைக்கும்.

இதைக் கேட்டவுடன், நாராயணையர் மகன் ராஜாவுக்குக் கொஞ்சம் கோபம் வந்துவிட்டது: "உனக்குப் படம் வரையத் தெரியவேணுமோ? மார்க்கு வேணுமோ? இப்பவே முதல், பள்ளிக்கூடத்துக்குப் போய்க் கள்ளத்தனமா படிக்கிறாய்? உங்க ஸ்கூலிலே மூக்கால் வாசிப்போர் கிருஸ்துவக்குட்டிகள்; நீயும் கிருஸ்துவச்சியாகிறாயா"? என்று கேட்டான்.

சாமி.—ஒருவேளை எங்கப்பா கிருஸ்தவராணுக்கால், நாங்களும் கிருஸ்தவராக வேண்டி வருமோ என்னவோ.

குட்டி—நம்மப்பாவா? சீ! ஒருநாளும் அவர் கிருஸ்து வராகமாட்டார். அவரென்னத்துக்கு கிருஸ்துவராக போகிறார்? அத்தைதான் சொன்னாளே.

சாமி—அத்தை என்ன சொன்னாள்.

குட்டி—அத்தையும் பத்மாவதி அம்மாமியும் பேசிக் கொண்டிருக்கிற போது, "எத்தனை பேர் கிருஸ்துவ வேதத்திலே இந்த நாளிலே சேரவில்லை. எப்படியாவது சந்தோஷமாயிருந்தால், இன்னும் கெட்டுப் போகாதேயிருந்தால் நல்லது தானே" என்று அம்மாமி சொன்னார். அதற்கு அத்தை, "என்னவானாலும் சரி, அம்பி ஒரு நாளும் குழந்தைகளைச் சந்தியிலே நிறுத்திவிட்டு, கிருஸ்து வேதத்திலே சேரமாட்டான்." என்று சொன்னாளே.

ரஜா—ஏண்டா சாமி, ஒரு வேளை மாமா கிருஸ்துவ ரானால், நீயும் கிருஸ்துவனாகி, தலையெல்லாம் க்ராப்பு செய்து கொண்டு பூணூலை அறுத்தெறிந்துவிட்டு, ஆடு கோழியெல்லாம் தின்ன ஆரம்பித்துவிடுவாயோ?

சாமி—என் ப்ராணன் போனாலும் சரி, ஒரு நாளும் நான் அப்படியெல்லாம் செய்யமாட்டேன். எங்கப்பாவும் அப்படிச் செய்யமாட்டார்.

ராஜா—உங்கப்பா சங்கதி உனக்கெப்படி தெரியும்? நீ எப்படிச் சொல்லுவாய்? உங்களை என்ன செய்யப்போகிறாரோ, அது எனக்குத் தெரியாது;. ஆனால் உங்கப்பா மாத்திரம், அடுத்த ஞாயிற்றுக்கிழமைக்குள்ளே, கிருஸ்தவராகி, ஒரு கிருஸ்தவச்சியையும் கலியாணம் செய்துகொள்வது நிச்சயம்.

சாமி—உனக்கெப்படி இவ்வளவு நிச்சயமாய்த் தெரியும்?

ராஜா—ஒரு கெவுளி சொல்லிற்று என்று வைத்துக் கொள்ளேன்.

சாமி—கெவுளியு மாச்சு கிவுளியு மாச்சு! இது ஒரு நாளும் நடக்கப்போகிறதில்லை. நான் வேணுமானால் பந்தயம் போடுகிறேன்.

ராஜா—என்ன பந்தயம்?

சாமி—என்ன பந்தயமா? நாலணு பந்தயம்.

ராஜா—சரி; நமக்கு இன்னும் ஒரு வாரத்திலே கால் ரூபா கிடைக்கப்போகிறது.

சாமி—நடக்காவிட்டாலோ?

ராஜா—நான் அரை ரூபா தருகிறேன்.

சாமி—எதைக் கொண்டு இவ்வளவு நிச்சயமாய் பேசுகிறாய் நீ.

ராஜா—சொன்னால் பந்தயம் மாறமாட்டாயா?

சாமி—ஒரு நாளும் மாறமாட்டேன். இப்பவே வேணுமானாலும் நாலணாவையும் தந்துவிடுகிறேன். எதனால் சொல்லுகிறாய்?

ராஜா—குட்டிக்குத் தெரிந்தால், ஏதேன் உளறிவைப்பள். கிட்டவா, காதோடு சொல்லுகிறேன்.

இதைக்கேட்டவுடன் குட்டியும் பாயைவிட்டெழுந்து, ராஜாவினிடம் ஓடிப் போனாள். அவள் வருவதைக் கண்டு, ராஜாவும் சாமியும் அறைக்குள் ஓடித் தாளிட்டுக் கொண்டார்கள்.

"எனக்கும் சொல்லக்கூடாதா? நான் ஒருத்தரிடத்திலும் சொல்லவேயில்லை" என்று, குட்டி கதவைத் தட்டிக் கொண்டு நின்றாள்.

அப்பால் கதவு திறக்கப்பட்டது, இதற்குள் "ராஜா! ராஜா! உயரச்சீதை உங்களோடிருக்கிறாளா?" என்று பத்மாவதியம்மாள் தன் மகனைக் கீழிருந்து விசாரித்த குரல் கேட்டது.

"சீதை இங்கில்லையே, அம்மா" என்று ராஜா பதில் சொன்னான்.

"ஆத்திலும் இல்லை; இங்கே வந்திருக்காளாக்கும் என்று தேடி வந்தேன்; உங்களோடில்லை என்றால் வேறெங்கே போயிருப்பாள்? என் அப்பன் அன்றோ நீ: ஒரு ஓட்டத்திலே ஓடிப்போய், ஒரு வேளை மாடியிலே அப்பா அறையிலே இருக்காளோ என்று பார்த்துக்கொண்டு வரமாட்டாயா?" என்றாள் பத்மாவதியம்மாள்.

"இதோ வந்தேன்" என்று சொல்லி ராஜா ஒரு குதியில் ஓடிப்போய் விட்டான்;

ராஜா போனபின்பு குட்டி தன் தமயனை நோக்கி: "ராஜா என்ன சொன்னான், எனக்கும் சொல்ல மாட்டாயா, அண்ணா? உன் முகத்தைப் பார்த்தால் என்னவோ போலிருக்கே; எனக்கு பயமாயிருக்கு; அழுகை வருகிறது. எனக்கு சொல்லேன்" என்றாள்.

சாமி—இப்பவே அழுகை வருகிறதென்றால், உன்னிடத்திலே எப்படிச் சொல்லுகிறது?

குட்டி—இல்லை, நான் அழவில்லை; என்ன சொன்னான் சொல்லு.

சாமி—பத்மாவதி அம்மாமியிடத்திலே மாமா ரகசியமாய்ச் சொன்னாராம்: இவனுக்கும் கேட்டதாம். இவன் மறைவிலே வாசித்துக்கொண்டிருந்தது மாமாவுக்குத் தெரியாதாம்.

குட்டி—என்ன சொன்னாராம்?

சாமி—நம்ம அப்பா கிருஸ்துவராகிக் கலியாணம் பண்ணிக்கொள்ளப் போகிறாராம். வியாழக்கிழமையாவது வெள்ளிக் கிழமையாவது நடக்கப் போகிறதாம். இது—இந்த ஊரிலே இல்லையாம்; வேறு எந்த ஊருக்கோ போகப் போகிறாராம்.

குட்டி.—அத்தையிடத்திலே சொல்லமாட்டாரா? அத்தைக்குத் தெரிந்திருக்காதா, இது நிஜமானால்?

சாமி.—இன்றைக்குத் தான் முடிவாய்த் தீர்மானம் பண்ணினாராம். நேற்று சாயங்காலம் கூடப் பேச்சு நடந்ததாம்; அப்படியொன்றுமில்லை, நடவாது என்று சொல்லிக் கொண்டார்களாம்.

இதைக் கேட்டவுடனே சிறிது தியங்கி மயங்கி நின்று, அப்பால் தன் கைகளால் முகத்தை மூடிக்கொண்டு: "ஓ அண்ணா! அப்புறம் நாம் என்ன செய்வோம்?" என்று குட்டி அழத்தொடங்கினாள்.

சாமி.—பார்த்தாயா பார்த்தாயா, இதுதான் உன்னிடம் சொல்லக்கூடாதென்கிறது. நான் அழுகிறேனே, பார்.

குட்டி.—உனக்கு—உனக்கென்ன, நீ நீ பெரியவன்-அப்பா கிருஸ்தவச்சியைக் கலியாணம் பண்ணிக்கொண்டு வந்தால் எங்க வாத்திச்சிமாதிரி, அவள் என்னை யடிப்பாளோ, என்னவோ—நான் எங்கேயாவது, செங்காட்டுத் தாத்தா ஆத்துக்கு, ஓடிப் போய் விடுகிறேன். எனக்கு பயமாயிருக்கு. நான் அத்தையிடம் போய்ச் சொல்லப் போறேன்.

சாமி.—அத்தை என்ன செய்வாள்? இப்பவே அடிக்கடி அழுதுகொண்டிருக்கிறாள்; இன்னும் அதிகம் அழுவள்.

குட்டி.—அத்தை படாது என்று சொன்னால், அப்பா கேட்கமாட்டாரா?

சாமி.—அதெல்லாம் நடவாது. இது வரையும் நித்தியம் நித்தியம் சொல்லிக்கொண்டே இருக்கவில்லையா? அதெல்லாம் பிரயோசனமில்லை. எனக்கு ஒரு யுக்தி தோணுகிறது: அந்தப்படி செய்தால், ஒருவேளை, இது நடவாமற் போகலாம்.

குட்டி.—என்ன யுக்தி? நீ என்ன செய்வாய்? அப்பாவிடம் சொல்லுவாயா?

சாமி.—இதைப் பற்றி எப்படிச் சொல்லுகிறது, பேசுகிறது? அது முடியாது.

குட்டி.—பின்னே, வேறென்ன யுக்தி?

சாமி.—ராஜா திரும்பி வரவிட்டு, அவனிடம் யோசித்துக்கொண்டு, அப்புறம் சொல்லுகிறேன். அதற்கு நீயும் சேரவேணும். உன் கை யெழுத்தும் வேணும்.

குட்டி.—அதற்கென்ன, நூறு கையெழுத்து வேணுமானாலும் போடுகிறேன். அப்பாவுக்கு இதைப்பற்றிக் காகிதம் எழுதப்போகிறாயா?

சாமி.—அப்புறம் சொல்லுகிறேன் என்கிறேனே. அது வரை, அத்தையிடம் நீ ஒன்றும் சொல்லாதே. நான் சொல்லிக்கொள்ளுகிறேன். அத்தையையும் கேட்டுத் தான் செய்யவேண்டும்.

குட்டி.—அப்பா ஏது இன்னும் வரவில்லை? நித்தியம் இதற்கு முன் வந்துவிடுவாரே.

சாமி.—ஆசுபத்திரியிலே ஏதாவது அதிக வேலையிருக்கும்.

குட்டி.—வேறு எந்த ஊருக்கோ போகப்போகிறார் என்றாயே; ஒரு வேளை போய் விட்டாரோ என்னவோ?

சாமி.—ஆத்திலே அத்தையிடம் கூடச் சொல்லாமலா போய் விடுவார்? காலையிலே காப்பி சாப்பிட்டு விட்டு மாமா ஆத்துக்குப்போனார்; அங்கிருந்தே ஆசுப்பத்திரிக்குப் போயிருப்பார். அதோ, பைஸிக்கில் மணி கேட்கிறது. வந்துவிட்டார்.

சற்று நேரத்தில் டாக்டர் கோபாலையர், தன் உடைகளை மாற்றுவதற்காக மாடிக்கு வந்தார். வந்தவர், தன் குழந்தைகளின் முகங்களைப் பார்த்தவுடன் திடுக்கிட்டார். அவர்களும், வழக்கம்போல் அவரிடம் பேசவில்லை. எப்பொழுது அவர் வெளிச்சென்று திரும்பினாலும், என்ன விசேஷம் நடந்தது, ஏன் இவ்வளவு நேரமாயிற்று, எந்த எந்த நோயாளிகள் புதிதாக ஆசுபத்திரிக்கு வந்தார்கள், என்றெல்லாம் தூண்டித் துளைத்துக் குட்டி கேட்பது வழக்கம். இன்றோ, பேசா மடந்தை போல், அவள் தலையை கவிழ்ந்து கொண்டு நின்றாள். சாமியும், அவரைக் கண்டவுடன், ஏதோ ஒரு புஸ்தகத்தில் ஆழ்ந்திருப்பவன் போலப் பாசாங்கு பண்ணினான். குற்ற முள்ள நெஞ்சு குறுகுறுக்குமன்றோ! இப்படித் தன் குழந்தைகள் புது மாதிரியாயிருப்பதைக் கண்ட கோபாலையர், தானும் ஒன்றும் சொல்லமாட்டாதவராய், திகைத்துத் தியங்கினார். அப்பால் தன் உடைகளைக் களைந்து ஒரு கட்டு வேஷ்டியை எடுத்துக் கட்டிக்கொண்டு, கீழே பாய் மீது கிடந்த படத்தைப் பார்த்து, "நீ எழுதின படமா இது, சாமி? எடுத்துப் பத்திரமாய் வைக்காமல் கீழே போட்டிருக்கிறாயே" என்றார்.

சாமி—என் படமில்லை. குட்டி படம்; இப்பொழுது தான் எழுதினாள்; இன்னும் காயவில்லை.

கோபா—இங்கேவா குட்டி; அந்த படத்தை எடு பார்ப்போம். உனக்கு இவ்வளவு நன்றாகப் படம் எழுதத் தெரியுமா என்ன?

குட்டி—ஆட்லஸ் படத்தின் மேலேவைத்து வரைந்தேன், அப்பா.

கோபா—அப்படிச் சொல்லு. உங்கஸ்கூலிலே, அப்படியா படம் வரையச் சொல்லுகிறார்கள்?

குட்டி—இல்லே, அப்பா; வாத்தியார் பார்த்துதான் எழுதச்சொன்னார். மற்றப் பெண்கள் எல்லாரும் இப்படித் தான் எழுதிக் கொண்டு வருகிறார்கள்; நானும் அதுபோல வரைந்தேன்.

கோபா—வாத்தியாரை ஏமாற்றுகிறதா?

குட்டி—இல்லே, அப்பா. அவருக்கு தெரியாதா என்ன இன்ஸ்பெக்டர் வரப் போகிறாராம்: அதற்காக, எல்லாக் குட்டிகளேயும் அச்சுப்போல சில படங்கள் எப்படியாவது எழுதிக்கொண்டு வரச்சொல்லியிருக்கிறார்.

கோபா—ஆனால் வாத்தியாரை நீங்கள் ஏமாற்றவில்லே; இன்ஸ்பெக்டரை அவர் ஏமாற்றுகிறார் என்கிறாயா?

குட்டி-போ, அப்பா; அதெல்லாம் எனக்கு தெரியாது.

[பத்மாவதி சரித்திரம் இவ்வளவுதான் எழுதி முடிந்தாயிருந்தது. இந்த அத்தியாயத்தில் குறிப்பிட்டபடி குழந்தைகள் எழுதின கடிதத்தைக் கண்டு கோபாலேயர் கடைசியில் ஜேன் கேயைக் கலியாணம் செய்துகொள்ளவில்லே யென்றும், மெஸ்பொடேமியாவுக்குப் போய் அங்கிருந்து உடம்பு கெட்டுத் திரும்பிவந்தாரென்றும், நாகரிகர்றுக்கேற்ப பத்மாவதியம்மாள் குடும்ப சம்பவங்களே விவரித்தும் கதையை எழுதி முடிக்கப் போவதாக என் தகப்பனுர் சொல்லிக்ெ ண்டிருந்தார். மா. அனந்த நாராயணன்.]

---

அத்
க்கொ
வண்டு

Peopl ... ıting and Publishing House, Ltd., Triplicane, Madras.